# கல்கி

## பொருளடக்கம்









பிலவங்க, ஆவணி 11 - ஆகஸ்ட் 27








சீனாவின்
அணு ஆயுதக்கிடங்கு
உங்கள் உதவி வேண்டாம்,
நானே சமாளித்து விடுவேன்!
அமெரிக்கா
பிரிட்டன்
இந்திரா



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

மலர் 27 ❋ இதழ் 4



# இருபது ஆண்டுகள் முடிந்தன

இருபத்தியோராவது சுதந்திர தினம் வந்து போய்விட்டது. ராஷ்டிரபதியும் பிரதமரும் கவர்னரும் முதன் மந்திரிகளும் சொற்பொழிவுகள் நிகழ்த்தி, மக்களை நவபாரத நிர்மாணத்தில் பொறுப்புத் தாங்கும்படி கேட்டுக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் இன்று நல்லுரை மிகவும் தேவைப்படுவது தில்லியில் அமைந்துள்ள மத்திய சர்க்காருக்குத்தான். மக்களை ஆன்ம சோதனை செய்துகொள்ளுமாறு தலைவர்கள் பலர் அறைகூவல் விடுத்திருக்கிறார்கள். அதனினும் அவசியம் தில்லி அரசாங்கமே இதய சோதனை செய்து கொண்டு புது திசையில் திரும்புவதுதான். இந்த இருபதாண்டு காங்கிரஸ் ஆட்சி காலத்தில் நாட்டில் என்னென்ன தீமைகள் எல்லாம் நேர்ந்துள்ளன வென்று அலசிப் பார்த்தால் இனி தவறு செய்யாதிருக்க அதுவே எச்சரிக்கையாக இருக்கும்.

சுருங்கச் சொன்னால், இயற்கையான பொருளாதார விதிகளை எதிர்த்துச் செயலாற்றி நாட்டை நெருக்கடியின் விளிம்புக்குக் கொண்டு வந்துவிட்டது நமது அரசாங்கம்.

கடன் வாங்குவதில் நாடு எவரெஸ்ட் சிகரத்தை எய்தி விட்டது. சிகரத்தின் உச்சிக்கு அப்பாலும் கடன் எழுப்பப் பார்க்கிறார்கள்! திட்டங்களுக்காகவும் பாதுகாப்புச் செலவுக்காகவும் வாங்கியுள்ள கடன் இந்நாட்டைத் திவாலா நிலைமைக்குக் கொண்டு விட்டிருக்கிறது.

தேசம் தாங்க வொண்ணாத அளவுக்கு ஆயுதப் போட்டியில் செலவிட்டு வருகிறோம். அண்டை நாடாக அமைவதற்கு நாமே அநுமதித்த பாகிஸ்தானைத்தான் இன்று நிரந்தர விரோதியாகக் கருதி ஆயுதப் போட்டியில் ஈடுபட்டு வருகிறோம். ஆட்சியாளர்களோ வெகு புத்திசாலித்தனமாகப் பொருளாதாரத்தை அமைத்து வருவதாகக் கற்பனை செய்து மகிழ்ந்து வருகிறார்கள். ஆட்சி புரிவதில் இன்றுள்ள திறமையின்மை போல் என்றும் நாம் கண்டதில்லை. எனினும் பதவியில் இருப்பவர்கள் பரம திருப்தியாகவே உள்ளனர்.

உலகம் காணாத ஒரு புதிரான நிலைமையில் இன்றைய இந்தியாவை வைத்துள்ளது காங்கிரஸ் அரசாங்கம். 'நெருக்கடி நிலைமை' என்பது ஆபத்துக் காலம் என்கிற ஒரு சமயத்தில் மட்டுமே உலக நாடுகளில் பிரகடனம் செய்யப்படுவது வழக்கம். ஆனால் இந்தியாவிலோ நெருக்கடி நிலைமையையே சாசுவதமாக்கியிருக்கிறார்கள்! நெருக்கடி நிலைமையில் சர்க்காருக்கு ஏற்படுகிற சில விசேஷ அதிகாரத்தைக் கொண்டும், காங்கிரஸ் சர்க்காருக்கு இயல்பாகவே உள்ள சோஷலிஸ மோகம் காரணமாகவும் மக்களின் ஜீவாதார உரிமைகளைப் பறித்து விட்டனர். 'நாமே நமக்குத் தந்துகொண்டதாக'ப் பெருமையுடன் பேசிய அரசியல் சாஸனத்தின் அடிப்படையான கொள்கைகளை யெல்லாம் ஆட்சியாளர்கள் தகர்த்து எறிந்து விட்டனர்.

இருபதாண்டுகளுக்கு முன் சுதந்திர பாரதம் பிறந்தபோது சீனம் உள்பட எல்லா நாடுகளும் நம்மிடம் நட்புப் பூண்டிருந்தன. பாகிஸ்தானுடன் நமக்கிருந்த மனஸ்தாபத்தைக்கூட இந்தச் சிநேகச் சூழ்நிலை ஒருவிதத்தில் ஈடுகட்டியது. ஆனால் இன்று நாம் நம்பிச் சார்ந்திருக்கக் கூடிய நாடு எதுவுமே இல்லை. எந்த நாட்டுக்கும் நம்மிடம் நல்லெண்ணமோ நம்பிக்கையோ ஏற்படும் விதத்தில் நாம் நடந்து கொள்ளவில்லை. உள்நாட்டில் உண்டாக்கிக் கொண்டுள்ள பொருளாதார விபத்தோடு இறுக்கமாகப் பிணைந்துள்ள ஓர் அம்சமே இந்த அயல்நாட்டுத் தொடர்பு. நாம் சக்தியை இழக்கும் போதே நண்பர்களையும் இழந்துவிடுகிறோம்.

இந்தியா எப்போதுமே இப்படி இருந்த தேசமல்ல. அடிமைப்பட்டிருந்த நாளில் கூடப் பொன்னுலகின் மின்னொளி இந்த மண்ணிலும்

விகமாறு திகழ்ந்த தேசம் இது. நாம் உண்மையாக ஒரு சக்தி வாய்ந்த சமூகமாக இருக்க முடியும் என்ற நம்பிக்கையைத் தந்த தேசம் இது. சக்தி என்றால் ஆயுதத்தி னாலோ, செல்வத்தினாலோ ஏற்பட்ட சக்தி யல்ல; ஆன்ம சக்தியால் உலகில் உயர்ந்து நிற்கக் கூடிய நாடாக விளங்கியது இது. மனிதர்களை வெறும் பௌதிக இயந்திர மாகப் பாராமல், அவர்களுக்குள் தெய்வ சக்தியின் பிரதிபலிப்பைக் கண்டு அவர் களுக்குத் தலைமை தாங்கிய காந்தி மகா னின் காலம் வரை பாரதம் இத்தகைய உன்னத நாடாக விளங்கியது. ஆனால் அண் ணல் மறைந்த பின் நம் வழியையும் தவற விட்டோம். சக்தி பெறுவதற்கு வழி என்று எண்ணி எந்த மாய மானைப் பின்பற்றிப் போனோமோ அதுவே நம்மைப் பாரதத்தின் தனிப் பெருமையான ஆன்ம பலத்தை இழக் கச் செய்துவிட்டது. பொருளாதாரத்தில் பெரும் சக்தியாக வேண்டும் என்று பேராசை கொண்டு நாம் போட்ட திட்டங்களின் காரணமாகவே இன்று அயல் நாடுகளிட மெல்லாம் மாளாமல் கடன் பட்டு, நம் அத்தி யாவசியத் தேவைகளைப் பூர்த்தி செய்து கொண்டு உயிர் வாழ்வதற்குக் கூட அவை களைச் சார்ந்து வாழவேண்டியுள்ளது.

இன்று தேசத்தின் நிலை அந்தகாரமாக இருப்பதால் மனம் தளர்ந்துவிட வேண்டாம். நள்ளிரவைக் கடந்தாலொழிய காலை உதிக் காது. உதயத்துக்கு முந்திய முகூர்த்த காலம்தான் மிகவும் இருண்ட காலம் என் பார்கள். அதை எண்ணியே நாம் தெம்பு கொள்வோம். அகம்பாவத்தையும் பிரமை யையும் பேராசையையும், சிந்தனைக் குழப் பத்தையும் விட்டுவிடுவோம். நாம் சுதந் திரம் பெறுவதற்கு எந்தச் சத்தியமும் தரும மும் உதவினவோ அவற்றிடம் நம்பிக்கை வைத்து முன்னேறுவோம். முன்னேற முடி யும்; நாட்டு வாழ்வை மகிழ்ச்சியாக்க முடியும் என்ற நம்பிக்கை மிகவும் அவசியம்.

நமது நிலையைத் தெளிவாக்கிக் கொண் டால் பிறரது நிலையும் தெளிவாகும். யார் நமது நண்பர் என்று அப்போது இனம் கண்டு கொள்ளலாம். அதோடு அந்த நட்பு நாட் டின் உதவியை எப்படிப் பயன் செய்துகொள் வது என்பதையும் புரிந்து கொள்வோம். எல்லாவற்றுக்கும் மேலாக, அந்நாட்டிடம் நன்றி காட்டவும் அறிவோம். நட்பு நாடு என்று சொல்வதால் நமக்கு விரோதமான நாடுகளும் இருக்குமா என்று எண்ண வேண் டாம். நமக்கு உதவ முடியாதவர்களைச் சார்ந்தும், நம்பியும் வழி தவறிவிடாமல், அதே சமயத்தில் அவற்றிடமும் பகையின்றி வாழக் கற்போம். முக்கியமாக பாகிஸ்தானு டன் சிநேகம் பூண்டு, நம்மிரு நாடுகளிடையே உள்ள வர்த்தகத் தடைகளை நீக்கி ஒத்துழைப் பில் ஈடுபட்டுச் சுபிட்சம் வளர்ப்போம்.

அறிவுத் தெளிவு ஏற்பட்ட பின் காச்மீரம் என்பது நாம் சேர்த்துக் கொள்ள வேண்டிய ஒரு சொத்து என்ற கருத்து மறைந்து, நம் நட்புக்குரிய ஒரு மக்கட் தொகை என்ற உணர்வு ஏற்படும். அதோடு பாகிஸ்தானுக் கும் இந்த உணர்வை உண்டாக்கி, காச்மீரம் என்பது ஒரு பொறுப்பே தவிர உரிமையல்ல என்ற கருத்தையும் தோற்றுவிக்கலாம்.

தேசம் ஒழுங்கான பின் அகில தேச அமைதி யில் நன்கு ஈடுபாடு கொள்ளலாம். அரசியல் என்ற பெயரில் பெரிய கொள்கைகளை வகுத் துக்கொள்வதை விட, எளிய மாறுபடாப் பண்புகளான நம்பிக்கை, நல்லெண்ணம் முத லியவை உலக அரங்கில் மேவுவதற்கு முயற்சி புரிந்தால் சாந்தி தழைக்கும். அதற்கு உதவும்போது இந்தியா உண்மையி லேயே ஓர் உலக சக்தியாகும்.

## காமகோடியின் கருணைமொழி



மனதைச் சுத்தம் செய்துகொள்ளத் தியானம். அறிவைச் சுத்தம் செய்து கொள்ளத் தத்துவம். இப்படியே சரீரத்தைச் சுத்தம் செய்துகொள்ளச் சரீரப் பிரயாசையால் சில தர்மங்கள் செய்ய வேண்டும். மனதில் இருக்கும் தயைக்குச் சரீரத்தினால் உருக் கொடுத்துக் காரியங்கள் செய்ய வேண்டும். இம்மாதிரி சரீர உழைப்பால் நமக்கு என்ன பயன் ஏற்படும் என்று நினைக்கக் கூடாது. சரீரப் பணியால் மனதில் உள்ள அகங் காரம் கரைவதே பலன். பிறருக்குத் தெரியவேண்டும் என்ப தில்லை, ஒவ்வொருத்தரும் ஏதோ ஓர் ஒற்றையடிப் பாதையில் உள்ள முள்ளை, கல்லுறுடியை எடுத்துப் போட்டுச் சரீர கைங் கரியம் செய்தால்கூடப் போதும், சரீரசுத்தியும் சித்தசுத்தியும் ஏற்படும். எல்லோருமாகச் சேர்ந்து பொதுஜனங்களுக்காகக் கிணறு வெட்டலாம். அதில் தண்ணீர் வருவதைவிட நம் நெஞ்சில் ஈரம் வருவது விசேஷம். ஆடம்பரமின்றி நாவால் பகவன் நாமம் சொல்வது, மனதால் அவனைத் தியானிப்பது— இவை போன்றதே சரீரத்தினால் கொஞ்ச நேரமாவது வெட்டி, கொத்தி, வேலை செய்வது. ஜனங்களுக்கான சேவையை ஈசுவர கைங்கரியமாகவே வைத்துக் கொள்ள வேண்டும்.

# ராஜாஜியின் கருத்துக்கள்

1955ல் உணவு உற்பத்தி ஆறு லட்சம் டன்களாக இருந்தது. 1966–67ல் இது ஒரு கோடி டன்களாக உயர்ந்துவிட்டது. "நடப்பு ஆண்டில் ஒரு கோடியே ஐம்பது லட்சம் டன்கள் உணவுப் பொருள் இறக்குமதி செய்ய வேண்டியிருக்கும்" என்கிறார் பேராசிரியர் பி. ஆர். ஷெனாய். "இப்படி உணவுப் பொருள் இறக்குமதி வானளாவ உயருவதற்குக் காரணம் வானம் பொய்த்ததுதான் என்று கூறித் தட்டிக் கழித்துவிட முடியாது; தொடர்ந்து கடந்த பத்து வருஷங்களாகவே வானிலை சரியாக இல்லை, பருவக் காற்றுக்கள் பொய்த்தன என்று வாதாட முடியாது" என்று சொல்லும் பேராசிரியர் பி. ஆர். ஷெனாய், மூலதனம் முடக்கப்பட்ட வேகமும் தவறான இனங்களில் மூலதனம் திசை திருப்பப்பட்டதும்தான் இந்நிலைக்குக் காரணம் என விளக்குகிறார்.

***

நானூறு ஆண்டுகளுக்கு முன்னால் கார்டினல் உல்ஸி இங்கிலாந்து மக்கள் மீது சொத்து வரி விதித்தபோது அரசி காதரைன் இந்தக் கொடுமையை அரசனது கவனத்துக்குக் கொணர்ந்தாள். அரசன் இந்த வரியை உடனே ரத்து செய்து உத்தரவு பிறப்பித்தான். இதை ஷேக்ஸ்பியர் தமது சாகா இலக்கியமான "எட்டாவது ஹென்றி"யில் மறக்க முடியாத வார்த்தைகளில் வெளியிட்டிருக்கிறார்:

அரசி: மக்களுடைய துயர் கட்டாயமான வரிகளில் பிரதிபலிக்கப்படுகிறது. ஒவ்வொருவனது முகத்திலும் ஆறில் ஒரு பங்கு தாமதமின்றிச் செலுத்துமாறு வரி விதிக்கப்பட்டுள்ளது. இதற்கு ஒரு சால்ஜாப்பாக பிரான்ஸ் நாட்டுடன் நீங்கள் நடத்தி வரும் யுத்தங்கள் காண்பிக்கப்படுகின்றன.

அரசன் (உல்ஸியிடம்): இந்த வரிவிதிப்புக்கு முன்னோடியாக ஏதேனும் இருக்கிறதா? ஒவ்வொருவரது சொத்திலும் ஆறில் ஒரு பங்கா ? நடுக்கமளிக்கக் கூடிய பெரிய பங்கல்லவா இது? ஒவ்வொரு மரத்திலிருந்தும் தழைகள் உள்ள மேல் பக்கத்தையும் மரப் பட்டைகளையும் நடு மரத்தின் ஒரு பகுதியையும் எடுத்துக் கொண்டு விடுகிறோம் என்றே சொல்லலாம். மரத்தின் வேர்களை நாம் விட்டு வைக்கிறோம்தான். ஆனால் மரத்தின் ஈரப் பசையை யெல்லாம் காற்று குடித்து விடும். இந்த வரிவிதிப்புக்கு எதிர்ப்புத் தெரிவித்துள்ள எல்லாப் பகுதிகளுக்கும் கடிதம் அனுப்புங்கள். இந்தக் கட்டாய வரியைக் கொடுக்க மாட்டேன் என்று மறுத்த ஒவ்வொரு மனிதனுக்கும் நிபந்தனை ஏதுமற்ற மன்னிப்பை வழங்குங்கள். உங்களைக் கேட்டுக் கொள்கிறேன். இதை உடன் கவனியுங்கள்.

***

டாக்டர் திரிகுணசேன் பயமுறுத்துவது நடைமுறையிலும் அமுலாக்கப்பட்டால் அது கல்வித் திட்டம் அல்ல; பாரதத்தின் ஒருமைப் பாட்டுக்கு எதிராகவும், சம்பிரதாயத்தில், ஊறியுள்ள இந்தத் தேசம் நவீன அறிவொளி பெற்று முன்னேற்றம் அடைவதற்கு எதிராகவும் நடத்தப்படும் போர் ஆகும். இப்போதுள்ள தலைமுறையினருக்கும் இனி வரப் போகும் தலைமுறையினருக்கும் பெருத்த அளவில் தொடர்ந்து ஊனம் விளைவிப்பதாகும்.

***

பொது வாழ்வில் ஈடுபட்டுள்ள நம்மில் சிலர், குறிப்பிட்ட எந்தப் பிரச்னையிலும் மக்களின் அபிப்பிராயத்தை அறிய வாக்கெடுப்பு நடத்தலாமே என்று அடிக்கடி கூறுகின்றனர். இது போன்று ஒவ்வொரு பிரச்னைக்கும் வாக்கெடுப்புக்கள் நடத்துவது என்பது பாரதம் போன்ற ஒரு துணைக் கண்டத்தில் நடவாத காரியமாகும். அதோடு பொதுத் தேர்தலின் போது என்னென்ன மோசமான நிலவரங்களைக் கண்டோமோ, அவற்றை யெல்லாம் இந்த வாக்கெடுப்புக்களின் போதும் காண வேண்டியிருக்கும். இது போன்ற வாக்கெடுப்புக்களில் நம்பிக்கை வைப்போர் ஸ்விட்ஸர்லாந்தில் நடக்கக் கூடியது இந்தியாவிலும் நடக்கலாமே என எண்ணுகின்றனர். இது மாயை.

***

நமது நாட்டில் நிலவும் பொருளாதாரச் சிக்கலை உணரும் சில நல்ல மனிதர்கள் எப்படியும் நாம் இந்தச் சேற்றிலிருந்து விடுபட்டு விடலாம் எனச் சொல்லுகின்றனர். தவறான கொள்கைகளின் விளைவாக ஏற்பட்ட பலன்களைத் திருத்த வேண்டுமானால் கொள்கைகளையே திருத்த வேண்டும். மேலும் குட்டை குழப்புவது தவறான பலன்களைத் திருத்தாது. நாம் எந்த விளைவுகளைக் குறித்துக் கண்டனம் தெரிவித்து வருகிறோமோ அந்த விளைவுகளே அதிகரித்துக் கொண்டு போகும். குட்டை குழப்புவதை நிறுத்த வேண்டும்.

***

வட இந்தியாவில் உள்ள நமது சகோதர சகோதரிகள், தென்னகத்து மக்கள் குயுக்தியான விதத்தில் சிந்திக்கவில்லை என்பதை எப்போதுதான் புரிந்துகொள்வார்களோ? உண்மையில் பார்க்கப் போனால் இந்தியாவின் சராசரி மனிதனை அல்லது பிரஜையைக் காட்டிலும் தென்னகத்திலுள்ளோர் அதிகமாகவே நியாயமாகவும் பரிவுடனும் நடந்து கொள்கிறார்கள். அவர்கள் ஹிந்தி வேண்டாம் என்கிறார்கள், அதனை ஏற்கவோ ஒப்புக் கொள்ளவோ மறுக்கிறார்கள் என்றால் அது அவர்களால் முடியாத காரியம் என்பதால்தான். அவர்களைப் பொறுத்த வரையில் பிரதேச மொழிகளுக்கு முக்கியத்துவம் தரப்படும்போது அத்துடன் கூடவே ஆங்கிலமும் தொடர்ந்து நீடிக்க வேண்டும். இந்த விஷயம் குறித்துப் பல திட்டங்கள் போடப்படுகின்றன; திட்டங்கள் அறிவிக்கப்பட்ட உடனேயே வாபஸும் பெறப்படுகின்றன. "ஏமாற்றுவதைப் பழக்கமாகக் கொள்ளும் போது எப்படிப்பட்ட சிக்கலான வலை பின்னுகிறோம்!" என்று ஒரு கவிஞன் பாடினான். பாரதத்தின் ஒரு பகுதியினரின் தாய்மொழியைத் தென் பாதியிலுள்ள மக்கள் மீது திணித்து, அத்துடன் ஒத்துப் போங்களேன் என்று கூறுவது நியாயமல்ல.

# பகவனடி சேர்ந்த பாகவதோத்தமர்

திருவையாறு பிரம்மஸ்ரீ அண்ணாசாமி பாகவதரவர்கள் இவ்வுலகை விட்டு மறைந்தார் என்று கேள்விப்பட்டவுடன் இனிய குணங்கள் நிறைந்த தனி மனிதர் ஒருவர் நம்மை விட்டு நீங்கினார் என்ற உணர்வு ஏற்பட்டது மட்டுமல்ல. பல தலைமுறைகளாக நம் நாட்டில் செழித்து வந்த ஒரு கலையின் தலைமை மறைந்ததே என்ற துயரமும் சேர்ந்தது. சங்கீதமும், சாஹித்தியமும், வசனமும், நாடகமும், பக்தியும் ஞானமும், சோகமும் ஹாஸ்யமும் மற்ற ரசங்களும் நிறைந்த ஹரிகதைத் துறையிலே மன்னராக விளங்கிய ஒரு மார்க்கதரிசி பிரம்மஸ்ரீ அண்ணாசாமி பாகவதர் அவர்கள். தஞ்சாவூரில் நான்கு வருஷங்களுக்கு முன்பு தொடங்கிய ஹரிகதைக் கல்லூரியின் பிரின்ஸிபாலாகச் சிறப்பாகப் பணியாற்றியவர். நுண்ணிய உணர்வுகளைக் கண்ணியமாக விளக்கும் பேராற்றல் படைத்தவர் அவர். நொடியில் வான மண்டலத்தைக் காட்டும் கொடி மின்னலைப் போல் கான மண்டலத்தின் சூட்சுமங்களைக் காட்டும் அற்புதமான சஞ்சாரங்கள் கொண்ட இசை அவருடையது. விஷயத்தில் அவருக்கு இருந்த ஈடுபாடு காரணமாகக் கதை கமகமத்தது.

திருப்பழனம் பஞ்சாபகேச பாகவதர் அவர்களுடைய சீடராகப் பாலியத்திலிருந்தே கதை புரியத் தொடங்கிய பாகவதர் அவர்கள் நாற்பத்தைந்து வருஷங்கள் இந்நாடு முழுவதிலும் பரமன் புகழ் பாடிப் பணி புரிந்திருக்கிறார். 1954ம் ஆண்டில் சென்னை மியூசிக் அகாடமி இவரைப் பாராட்டிக் கௌரவித்தது. புதுதில்லி சங்கீத நாடக அகாடமியின் அங்கத்தினராகவும் இருந்து பணியாற்றி யிருக்கிறார். பாகவதர்களுக்குரிய பாவன உலகில் அவர் நிச்சயமாக இடம் கொண்டிருப்பார் என்ப தொன்றே இன்று அவரது பிரிவில் துக்கிக்கும் நமக்கு ஆறுதலாகும்.

# தமிழ் நடிகர் மறைவு

''சம்சாரம்'', ''நவஜீவனம்'', ''மூன்று பிள்ளைகள்'', ''மலைக்கள்ளன்'', ''வல்லவன் ஒருவன்'', ''மறுமலர்ச்சி'' முதலிய படங்களில் நடித்துப் புகழ்பெற்ற ஸ்ரீராம் 4-8-67 அன்று பெங்களூரில் இறந்தார் என்ற செய்தி கலை உலகைப் பெரிதும் கலக்கி விட்டது. மதுரையைச் சேர்ந்த ஸ்ரீராம் ராணுவ இலாகாவில் டெலிபோன் ஆபரேட்டராகப் பணி புரிந்து வந்தார். சினிமா உலகில் புகுந்ததும் ஜெமினி ஸ்டுடியோவில் நிரந்தர நடிகராக அமர்ந்தார். பிறகு, சொந்தமாக ''மர்ம வீரன்'' என்னும் படத்தைத் தயாரித்து அதில் வைஜயந்திமாலாவுடன் நடித்தார். கதாநாயகனாகவும், இன்னும் பல்வேறு பாகங்களிலும் நடித்துப் புகழ்பெற்ற ஸ்ரீராம் தமிழ்ப்பட உலகின் வளர்ச்சியில் அதிக நாட்டமுள்ளவரா யிருந்தார்; நல்ல நடிகராக இருந்த அவர் எல்லாருக்கும் நல்ல நண்பராகவும் இருந்தார். சினிமாக் கலைஞர்களும், பிரபல நடிக, நடிகையர்களும் சென்னையில் உள்ள அவர் இல்லம் சென்று தங்கள் இறுதி மரியாதையைச் செலுத்தினர். அவர்களுடைய அநுதாபத்தில் நாமும் பங்கு கொள்கிறோம்.

# மதுவிலக்கும் விஷ பானமும்

க. சந்தானம்

போதையை நாடி, சட்டத்தை மீறி, விஷ பானம் அருந்திப் பலர் சென்னையிலும், செங்கல்பட்டிலும் மற்ற இடங்களிலும் மாண்டனர். அநேகர் செத்துப் பிழைத்தனர். இப்பரிதாபச் சம்பவங்களுக்குக் காரணம் என்று மதுவிலக்கைக் குறை கூறிப் பொறுப்புள்ள பத்திரிகைகளும், நபர்களும் உடனே அந்தச் சட்டத்தை ரத்து செய்ய வேண்டும் என்று வாதிக்கின்றனர்.

எங்கும் எக்காரணத்தாலும் மனிதர் அகால மரணமடைந்தாலும், எதிர்பாராத துன்பத்துக்காளானாலும் மற்றவர்களின் அநுதாபத்துக்குரியவர்களே. தினந்தோறும் விமானம் நாசமாகி, ரயில் தடம் புரண்டு, கப்பல் கவிழ்ந்து, மோட்டார் மோதிப் பலர் உயிர் இழப்பதையும் காயப்படுவதையும் பத்திரிகைகளில் படிக்கிறோம். சமீபத்தில் ஏழுமலையான் தரிசனத்துக்குச் சென்றவர்களில் பத்தொன்பது பேர்கள் மிதமிஞ்சிய கும்பலில் மிதிபட்டு இறந்ததை அறிந்தோம். உடனே விமானத்தையும், ரயிலையும், மோட்டாரையும், வெங்கடேச தரிசனத்தையும் நிறுத்திவிட வேண்டும் என்று எவராவது கூறினால் அவருக்கு மூளைக் கோளாறு என்றே நிச்சயித்து விடுவோம்.

தாமாகவே விபத்தைத் தேடி விஷ பானத்தைக் குடித்தவர்களுக்காக ஏன் மதுவிலக்குச் சட்டத்தை ரத்து செய்ய வேண்டும் என்று வாதிக்கின்றனர் என்பதை ஆராய்வது அவசியம். சாதாரணமாக நியாயத்தையும், சமூக நன்மையையும் நாடும் பத்திரிகைகளும், தனி மனிதர்களும் கூட இவ்விதம் வாதிப்பதால் அதை விதண்டாவாதம் என்று தள்ளிவிட முடியாது.

மதுவிலக்குச் சட்டம் தவறு, அது சாதாரணமாக நல்லவர்களை விஷபானம் அருந்தவும், கள்ளச் சாராயம் காய்ச்சவும், சாய வியாபாரிகள் போதை கொடுக்கும் திராவகங்களைக் கலந்து கள்ள வியாபாரம் செய்யவும் தூண்டி விடுகிறது என்று எண்ணுபவர்களே தமது வாதத்தை உறுதி செய்வதற்கு இந்தச் சம்பவங்களை உபயோகப்படுத்துகின்றனர். அப்படிச் செய்வதால் தாங்கள் நியாயம் என்று கருதும் வாதத்துக்குச் சிறிதும் வலுவளிக்காமல் அதைக் குலைக்கவே செய்கின்றனர்.

மதுவிலக்கு விரோதிகளின் வாதம் என்ன? போதையை விரும்புவது மனித சுபாவம். அதை மதத்தாலும், தர்மப்பிரசாரத்தாலும், சம்பிரதாயத்தாலும் அகற்றுவதும், சிறிய எல்லைக்குள் கட்டுப்படுத்துவதும் சமூகம் முன்னேறுவதற்கு நல்ல வழிதான். ஆனால் அதை ஒரு குற்றமாக்கிச் சட்டபூர்வமாகத் தடுப்பதால், சட்டத்துக்கும் இயற்கைக்கும் ஓர் அநாவசிய முரண்பாடு உண்டாக்கி, சட்டத்தை மீறவும், தவறான முறைகளில் போதைகளைத் தேடவும் அவகாசம் நேரிடுகிறது. அமெரிக்காவில் சட்ட மூலம் மது பானங்களைத் தடுக்கும் முயற்சிகள் தோற்று விட்டன. இந்நாட்டிலும் மதுவிலக்குச் சட்டம் அமுலில் இருக்கும் பிரதேசங்களில் கள்ளச் சாராய விற்பனையும், திருட்டுக் குடியும் ஏராளமாகப் பெருகியிருக்கின்றன. ஆகலால், மதுவரக்கனை அடக்கியாளச் சட்டத்தைத் தவிர்த்துத் தர்மத்தையே நாட வேண்டும் என்பது மதுவிலக்கு விரோதிகளிலுள்ள நல்லவர்களின் சிந்தனை. இது மரியாதையுடன் கவனிக்கத் தக்கதென்பதில் சந்தேகமில்லை.

ஆனால் இருவித சுயநலக் கூட்டங்கள் இவர்களைத் தமது லாபத்துக்காக உபயோகப்படுத்திக் கொள்ளுகின்றன. மதுபானங்களைத் தயார் செய்து விற்பதில் இதர தொழில்களை விட அதிக லாபம் கிடைக்கும். பிரிட்டிஷ் அரசாங்கக் காலத்தில் இருந்த பணக்காரர்களில் மதுபான வியாபாரிகள் பலர். மற்றத் துறைகளில் போல் இத்துறைகளில் ஈடுபட்டிருந்தவர்களும் சில ஜாதிகளையும், வகுப்புகளையும் சேர்ந்தவர்கள். இவர்களில் சிலர் இப்பொழுதும் கள்ள மது வகைகள் தயாரித்துத் திருட்டு வியாபாரம் செய்து வந்த போதிலும், அதில் அபாயமுண்டு. எனவே இந்தக் கூட்டத்தார் மதுவிலக்கை ஒழிக்க வேண்டும் என்று விரும்புவதில் ஆச்சரியமில்லை.

இரண்டாவது கூட்டம் அரசியல்வாதிகளடங்கியது. மதுவிலக்கை நீக்குவதால் எளிதில் அரசாங்கத்துக்கு ஏராளமான வருமானம் கிடைக்கும், அதைக் கொண்டு மற்ற வரிகளைக் குறைத்தும் சமூக நன்மைகளைச் செய்தும் சுலபமாக அரசு புரியலாம். ஒருபுறம் மதுபானத்தால் சீர்கெடும் குடிகாரர்களின் ஆதரவும் கிடைக்கும், குடிக்காதவர்களும் தமது வரிச்சுமை குறைவதால் மகிழ்ச்சியடைவார்கள். இது மேலான ராஜதந்திரமென்று கருதுகின்றனர்.

இக்காலத்திய விஞ்ஞானத்தைக் கொண்டு சோதிப்போமானால் மனித மூளை மிகவும் அற்புதமான அதிநுட்பமான யந்திரமென்றும், அதன் சக்தியை அதிகரிப்பது மனித வர்க்கத்தின் ஒரு முக்கிய லட்சியமென்றும், எவ்வித போதையும் அதனைக் குலைக்குமென்றும் அனைவரும் ஒப்புக் கொள்ள வேண்டும். வானவெளிக்கு விமானம் ஓட்டுவோர் பல மாதகாலம் எவ்வித மதுவையும், போதைப் பொருளையும் அருந்தாமல் பழகிக் கொள்ளுகின்றனர். சாதாரண விமானங்களைச் செலுத்தும் பொழுதும், நகரங்களில் மோட்டார்களை ஓட்டும்பொழுதும் போதையிலிருப்பவர்களுக்கு எல்லா நாடுகளிலும் கடும் தண்டனை விதிக்கப்படுகிறது. மதுவிலக்கைச் சரிவர அமுல் செய்யக் கூடுமானால் அதனால் மனித வர்க்கத்துக்கு அளவிடக் கூடாத நன்மைகள் கிட்டுமென்று எல்லா விஞ்ஞானிகளும் கூறுவார்கள். அது சாத்தியமா என்பதொன்றிலேதான் அவர்களுக்குச் சந்தேகம்.

அனாதிகாலமாக ஆண் பெண் அனைவரும் சகஜமாக மதுபானங்களை உபயோகித்துவரும் சமூகங்களில் திடீரென்று பூரண மதுவிலக்கைச் சட்டபூர்வமாக அமுல் செய்வது சாத்தியமில்லை என்று ஒப்புக் கொள்வதால் அவ்விதச் சட்டம் எல்லா நாடுகளிலும், எக்காலத்திலும் பயன்படாது என்று முடிவுகட்டுவது முட்டாள்தனமாகும். இன்னும் நூறு இருநூறு வருஷங்களில் விஞ்ஞானத்தை அடிப்படையாகக் கொண்ட பொருளாதாரத்தைச் சமாளிப்பதற்கு இது இன்றியமையாதது என்று உலகெங்கிலும் தெளிவாகி விடும் என்பதில் எனக்குச் சிறிதும் சந்தேகமில்லை. தற்சமயம் பாரதம் மதுவிலக்குக்குத் தகுந்த நாடு. அது பாரத மக்களுக்கு அத்தியாவசியம். ஆதலால் மதுவிலக்கைத் தற்பொழுது அமுலிலிருக்கும் பிரதேசங்களில் உறுதிப்படுத்தி, மற்றப் பிரதேசங்களிலும் அமுல்படுத்த வேண்டும் என்பதற்கு மட்டும் உள்ள காரணங்களை இங்கு குறிப்பிடுகிறேன்.

சமீபத்தில் விஷ பானத்தால் இறந்தவர்கள் அனைவரும் புருஷர்கள், ஹரிஜனங்கள் என்ற இரண்டு விஷயங்களையும் சிந்தித்தால் நமது நாட்டில் பெண்கள் மது உண்பதில்லை, பெரும்பாலும் உயர்ந்த ஜாதி மக்களில் ஆண் பெண் அனைவரும் மதுவைச் சம்பிரதாயமாக விலக்கி வந்திருக்கிறார்கள் என்பது தெளிவாகும். இக்காலத்தில் பரம்பரையாக மதுவை விலக்கி வந்த குடும்பங்களின் இளைஞர்கள் பலவித சாராயங்களைக் குடிக்கத் தொடங்கி யிருக்கிறார்கள் என்பது உண்மையே. இந்தியாவில் தலைநகரான தில்லியில் பெரிய உத்தியோகஸ்தர்களும், பத்திரிகை நிருபர்களும் தாங்கள் குடிப்பதுமின்றி மதுவிலக்குச் சட்டத்தை ரத்து செய்வதற்குப் பெரிதும் ஆதரவளிப்பது வருந்தத் தக்கது. அந்நிய நாட்டுத் தூதரகங்களில் நடைபெறும் விழாக்களில் இவர்களுக்கு இலவசமான மதுபானங்கள் கிடைப்பதே இதற்கு ஒரு முக்கிய காரணமாகும். ஆயிரக்கணக்கான வருஷங்களாக மதமும், சமூகக் கட்டுப்பாடும் காத்துவந்த குடும்பங்களைக் கெட்டுப் போகாமல் காப்பது மதுவிலக்குச் சட்டத்தின் ஓர் உத்தேசம்.

அதைக் காட்டிலும் ஏழை ஹரிஜனங்களும், கிராமங்களில் நிலமில்லாமல் கூலி வேலை செய்வோர்களும், நகரங்களில் தொழிற்சாலைத் தொழிலாளர்களும் தமது சிறிய ஊதியங்களைக் கொண்டு மானமாக ஜீவனம் செய்ய வேண்டும் என்பதே முக்கிய நோக்கம். கள்ள மது எவ்வளவு உற்பத்தியாகிறது என்பதைப் பற்றி எங்கும் புள்ளிவிவரங்கள் கூற முடியாது. ஆனால் சட்டபூர்வமாகக் கள்ளுச் சாராயக் கடை இருந்த காலத்தில் குடித்தவர்களில் பத்தில் ஒருவரே மதுவிலக்குப் பிரதேசங்களில் திருட்டு மது அருந்துகின்றனர் என்று நம்புகிறேன். தஞ்சாவூரில் உள்ள எனது சொந்த கிராமத்திலும், சுற்றுப்புறக் கிராமங்களிலும் அநேகமாக மதுப் பழக்கம் அற்றுவிட்டதென்று நிச்சயமாகக் கூறுவேன்.

மதுவிலக்கில்லாத பிரதேசங்களைவிட மதுவிலக்குச் சட்டம் அமுலில் உள்ள சென்னை பம்பாய் பிரதேச அரசாங்கங்களின் நிதி நிலைமையும், வருமானமும் அதிகமாக இருப்பதே மதுவிலக்கால் நேரடியாக முதலில் நஷ்டம் ஏற்பட்டாலும் பின்னர் வாழ்க்கைத் தரம் உயர்ந்து விற்பனை வரி முதலிய வருமானங்களால் அது எளிதில் ஈடு செய்யப்படுகிறது என்று தெளிவாகும்.

எக்காரணத்தைக் கொண்டும் தமிழ்நாட்டில் மதுவிலக்குச் சட்டம் ரத்து செய்யப்படமாட்டாது என்று காங்கிரஸ் மந்திரி சபைகள் உறுதியாக இருந்தன. அப்படியே தி. மு. க. மந்திரி சபையும் மதுவிலக்கை இன்னும் தீவிரமாக அமுல் செய்யும் என்று முதலமைச்சர் திடமாகக் கூறி விட்டார். மற்ற அம்சங்களில் குறைகூறி வந்த திரு பக்தவத்ஸலம் அதற்காகத் திரு அண்ணாதுரையைப் போற்றியிருப்பது குறிப்பிடத்தக்கது. இத்துறையில் பாரதத்துக்குத் தமிழ் நாட்டு மக்களும், தமிழ் நாட்டின் அரசாங்கமும் வழிகாட்டிகளாக இருந்து இந்தியாவைக் காப்பார்கள் என்று எதிர்பார்க்கிறேன்.

## மது விலக்கு

குடி என்பது வளர்ந்து கொண்டே வரும் ஒரு சமூகத் தீமை. வாய்ப்புக் கிடைக்கும்போது அதை ஒழிப்பதற்கு நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டியது அரசாங்கத்தின் கடமை என்பதே என்னுடைய கருத்தாகும். இதன் நோக்கம் என்ன என்பது தெளிவானது. தொழிலாளர்களையும், ஹரிஜனங்களையும் இந்தச் சாபக் கேட்டிலிருந்து விடுவிக்க வேண்டுமென்று விரும்புகிறோம். இது மகத்தான ஒரு பிரச்னையாகும். குடிப் பழக்கம் போவதற்கு எல்லா சமூகநல ஊழியர்களும், முக்கியமாகப் பெண்களும், தம்முடைய முழு சக்திகளையும் இயன்ற வரையில் உபயோகிக்க வேண்டியிருக்கும். நான் குறிப்பிட்டுள்ள மதுவிலக்கு (இது இன்றியமையாதது என்பதில் சந்தேகமில்லை), இந்தச் சீர்திருத்தத்தின் ஆரம்பம்தான். ஆசை காட்டி அழைப்பதற்கு வீட்டுக்கு அருகிலேயே கள்ளுக்கடை இருக்கும்வரையில், குடிகாரரை நாம் அணுக முடியாது. ஒரு திறந்த பெட்டியில் இனிப்புப் பலகாரங்களை எதிரில் வைத்து விட்டு, உடல்நலம் சரியில்லாத ஒரு குழந்தையோ, அல்லது வயதானவரோகூட அதைத் தொடக்கூடாது என்று தடுக்க முடியுமா? அந்தப் பெட்டியையே அகற்றினாலொழிய அது சாத்தியமல்ல.

-- மகாத்மா காந்தி - ஹரிஜன் 14-8-1937

## திருமணம்



அஹமதாபாத், அரவிந்த் [மில்ஸ் லிமிடெட்டின் காரியதரிசி ஸ்ரீ P.S. ஸ்ரீநிவாசன் அவர்கள் குமாரத்தி சௌ. ராஜலக்ஷ்மிக்கும், கல்கத்தா, விம்கோ சேல்ஸ்மேன் ஸ்ரீ T.S. கிருஷ்ணமூர்த்திக்கும் சமீபத்தில் சென்னை, விஜயா கல்யாண மண்டபத்தில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்!



## திருமணம்



சென்னை A.G.I.L.ல் பணிபுரியும் திரு S.M. கிருஷ்ணன் அவர்கள் குமாரத்தி சௌ. ராஜேசுவரிக்கும், தஞ்சை L.I.C.ல் பணிபுரியும் திரு A.E. வாசுதேவன் அவர்கள் குமாரன் சிரஞ்சீவி சந்திரசேகரன் அவர்களுக்கும் சிறப்பாகச் சென்னையில் திருமணம் நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்!

# மீண்டும் ஹிந்தி வேதாளம்!

எல். கிருஷ்ணசாமி பாரதி

**வி**க்கிரமாதித்தன் கதையில் ஒரு வேதாளம் உண்டு. அதை இறங்கும்படி நயத்தாலும், பயத்தாலும் எவ்வளவு செய்தாலும், அது மீண்டும் மீண்டும் முருங்கை மரத்தில் ஏறிக் கொள்ளுமாம். அந்த வேதாளம் இப்போது இந்தி மொழி என்ற உருவில் நம் நாட்டில் தோன்றியுள்ளது போன்ற காட்சி தருகிறது.

தனி மனிதனுக்குத்தான் தலைவிதி என்பதில்லை; ஒரு நாட்டுக்கும் 'தலைவிதி' என்ற காரணம் கண்டறிய முடியாத ஊழ்வினை செயல்படுவதாகவே தோன்றுகிறது. இல்லாவிட்டால், நம் நாட்டில், ஹிந்தி மொழி விஷயமாக நடைபெறும் இந்தக் குழப்பங்களுக்கு என்ன காரணம் காட்ட முடியும்?

இந்தி மொழியை வலுக் கட்டாயமாகத் திணிப்பதற்கு யூனியன் அரசு புதியதொரு திட்டத்தை வகுத்திருப்பதாகச் செய்தி வெளிவந்துள்ளது. அது, மாநிலங்களில் உள்ள கல்லூரிகளில் எல்லாம் மருத்துவ, பொறி இயல் கல்லூரி உள்ளிட்ட கல்லூரிகளிலும், வட்டார மொழிகளே போதனை மொழியாகவும், மத்திய அரசால் நடத்தப்பெறும் மருத்துவப் பொறியியல் கல்லூரிகள் உள்பட எல்லாக் கல்லூரி, ஆராய்ச்சி நிறுவனங்களில் எல்லாம், ஹிந்தி மட்டுமே போதனை மொழியாக, இன்னும் ஐந்தாண்டுகளுக்குள் செயல்படவேண்டும் என்பதாகும்! இந்தத் திட்டத்தின் உள்நோக்கம், வட்டார மொழிகளில் மத்திய அரசுக்கு ஏற்பட்ட அன்பினால் அல்ல; ஆங்கிலத்தை அறவே ஒழித்துக் கட்ட வேண்டும்; அப்பொழுதுதான் இந்தித் திணிப்பை எல்லா இடங்களிலும் எளிதில் செய்ய இயலும்; இதுவே நோக்கம் என்பதைப் பிரதம மந்திரி இந்திராகாந்தி அம்மையாரும் ஒளிவு மறைவின்றி ஒத்துக் கொண்டிருக்கிறார்கள்.




மத்திய அரசுக் கல்லூரிகளில் இந்தி ஒன்றையே போதனைமொழியாக ஏற்படுத்துவது, இந்தி பேசாத குடிமக்களுக்குச் செய்யும் அநீதி — அநியாயம் — அக்கிரமம் அல்லவா? மத்திய அரசு என்பது இந்தி பேசும் மக்களுக்கு மட்டும்தான் சொந்தச் சொத்தா? இந்தி பேசாத மக்களுக்கும் சொந்தமுடையது அல்லவா? எனவே சில மாநிலங்களின் வட்டார மொழியான இந்தியை எல்லாருடைய வரிப் பணங்களிலும் நடத்தி வரும் மத்திய அரசின் கல்லூரிகளில் திணிப்பது பொறுத்துக் கொள்ள முடியாத ஓரவஞ்சகமான செயல் அல்லவா? இந்தி பேசாத மக்களை, இந்திய அரசின் குடிமக்கள் என்று சொல்வதற்கு இடமில்லாமல் செய்துவிடும் பாதகச் செயல் அல்லவா? இந்தத் திட்டத்தை இந்தி பேசாத மாநிலங்கள் ஏற்பார்கள் என்று யூனியன் அமைச்சரவைஎதிர்பார்த்திருந்தால், அவர்களுடைய இந்த அறியாமைக்கு அழுவதா, சிரிப்பதா? இரண்டுமே செய்யலாம் என்றே தோன்றுகிறது!

மாநிலங்களில் உள்ள கல்லூரிகளில், வட்டார மொழிகள் மட்டும் போதனைமொழியாக வேண்டும் என்ற திட்டமும் ஏற்குமாறில்லை: வட்டார மொழி போதனை மொழியாக வேண்டும் என்பதற்கு எதிர்ப்பில்லை : ஆனால் அது ஒன்று மட்டுந்தான் என்று கட்டாயப்படுத்துவது தவறு; வட்டார மொழியிலும், ஆங்கிலத்திலும் போதனை தருவதற்கு வசதிகளும் வாய்ப்புக்களும் இருத்தல் வேண்டும்; மாணவர்கள் அவர்கள் விருப்பம் போல், எம்மொழியையும் தேர்ந்து எடுத்துக் கொள்ளட்டும். மாணவர்களும் அவர்கள் பெற்றோர்களும் எது தங்களுக்கு நன்மை என்று கருதுகிறார்களோ அதைத் தேர்ந்து கொள்ளட்டும். இதுவே முறை — நியாயம் — ஜனநாயகம்: இப்பொழுது நடைபெற்று வருவது இதுவே. இதைக் கட்டாயத்தின் மூலம் மாற்றுவது தவறு; நன்மை பயவாது; தீமையே விளைவிக்கும். போதனை மொழியாக ஆங்கிலத்தை அறவே ஒழிக்க முற்படுவது அறிவுடைமை ஆகாது என்பதே எனது திட்டவட்டமான கருத்து. அமிழ்தினும் இனிய தமிழ் மொழியில் எனக்குள்ள அளவிறந்த அன்பு, இதனால் ஓர் இம்மியளவும் குறைந்துள்ளதாகக் கருதுவதற்கில்லை: தாய்மொழிப் பற்றை ஒரு சிறிதும் விட்டுக் கொடாமல், நாட்டன்பில் நாட்டம் கொண்டே இதனைக் கூறுகிறேன் — தமிழக அரசில் எல்லாக் கட்டங்களிலும் தமிழே ஆட்சி மொழியாக நிறைவு பெறவேண்டும். இதில் கருத்து வேறுபாடே கிடையாது.

ஃ ஃ ஃ

**ந**டுநிலை நின்று நிதானமாக எடுத்துக் கூறுவதற்குப் பெயர் எடுத்தது 'ஹிந்து' என்ற

புகழ்பெற்ற நாளிதழ். அந்த நாளிதழில் (9—8—67) 'மொழிக் குழப்பம்' என்று மகுடமிட்ட தலையங்கத்தில் எழுதி உள்ளது, அறிவுள்ள நாட்டன்பர் அனைவர் கவனத்துக்கும் உரியது: ஒரு வாக்கியம் மட்டும் குறிப்பிடுகிறேன் :—

''நாட்டின் ஒருமைப்பாட்டை நிலை நிறுத்த வேண்டிய அவசியத்தில் ஆழ்ந்த அக்கறை காட்ட வேண்டிய யூனியன் அரசின் அமைச்சரவை, நாட்டைப் பல கூறுகளாக்கி, தனிமை உணர்ச்சிக்கும், மொழிப் போட்டிகளுக்குமே வழிகோலும் (இக்) கொள்கையை ஏற்கத் தயாராக இருப்பது குறிப்பிடற்குரிய விந்தையே !''

யூனியன் அமைச்சரவைப் பெரியோர்களே! இது உங்கள் கவனத்துக்கு வந்துளதா? நாட்டுப் பிரிவினை பேசுவோருக்குத் தண்டனை தரும் சட்டம் வகுத்தவர்களுக்கு அச்சட்டம் விதிவிலக்காகுமோ? உங்களின் சமீபத்திய மொழிக் கொள்கை நாட்டுப் பிரிவினைக்கு விதைக்கும் விதை என்ற விதத்தில் அமைந்துள்ள இந்துப் பத்திரிகையின் துணிகரமான குற்றச்சாட்டு உங்கள் காதில் விழுகிறதா?

இந்தியல்லாத மாநிலங்கள் விரும்பும் வரையில் ஆங்கிலம் மத்திய அரசின் ஆட்சி—நிருவாக மொழியாக இருந்து வரும் என்ற நேரு அவர்களின் வாக்குறுதி, அரசியல் சட்டத் திருத்தத்தின் மூலம் நிறைவுபெற வேண்டும். துணைப்பதி இராதாகிருஷ்ணன் அவர்கள், நாடாளுமன்றப் பேரவையில் 1965 பிப்ரவரி 17ந் தேதி நிகழ்த்திய உரையின் ஒரு பகுதி ஈண்டு நினைவுறுத்தற்பாலது: ''மொழி சம்பந்தமாகக் காலஞ்சென்ற நேரு அவர்கள் கொடுத்த வாக்குறுதியும், அதனை மீண்டும் வலியுறுத்தி நமது பிரதமர் (லால்பகாதூர் சாஸ்திரி அவர்கள்) கொடுத்த வாக்குறுதியும், எவ்விதமான மாற்றமும், தேய்வுகளும் இன்றி நிறைவேற்றப்படும்.''

ஃ ஃ ஃ

நேரு அவர்களின் கண்ணியமிருந்த வாக்குறுதியை வெடி வைக்கும் சதியே, இப்பொழுது மத்திய அரசின் புதிய மொழித் திட்டம் !

ஆங்கிலம் மத்திய அரசின் ஆட்சி மொழியாக நீடிக்கும் வகையில் அரசியல் சட்டத்தைத் திருத்துவது ஒன்றே நீதியும் நியாயமும் நேர்மையும் சீர்மையும், கண்ணியமும் நாணயமும் உள்ள நிரந்தரமான வழியாகும் என்பதே எனது திட்டவட்டமான கருத்து.

சென்னை மாநிலத்தில் தி.மு.க.வின் அரிய வெற்றிக்கும், காங்கிரஸின் பெரிய தோல்விக்கும் முக்கிய காரணங்களில் ஒன்று, மத்திய அரசின் இந்தித் திணிப்புக் கொள்கையாகும் என்பது என் கருத்து: காங்கிரஸின் இவ்வளவு கடுமையான படுதோல்விக்குப் பின்னரும், மத்திய அரசவை, இந்தியைத் திணிக்கும் கொள்கையை முழுமூச்சாகத் திணிக்க முற்படுவதை நினைத்தால் — நாட்டின் தலைவிதி இருந்தவாறென்னே என்று வருந்துகின்றோம்.



எனவே, நாட்டாட்சியிலுள்ள மேலிடத்தாரைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன் : நாட்டைப் பிளவுபடுத்தும் இந்தி மொழித் திணிப்பைக் கைவிடுங்கள். நாட்டன்பால் குடும்பத்தோடு பன்முறை சிறை சென்ற தேசபக்தன் என்ற முறையில் உரிமையோடு இதனைச் சொல்லவாயினேன்.

ஃ ஃ ஃ

காலம் சென்ற லால்பகதூர் சாஸ்திரியார், உள்துறை அமைச்சராக இருந்த பொழுது, திருப்பதி அகில இந்திய இளைஞர் மாநாட்டில் 1962 செப்டம்பர் 23 நிகழ்த்திய சொற்பொழிவில் ஆங்கில மொழி பற்றிய குறிப்புரை ஈண்டு குறிப்பிடற்பாலது. அவர் சொன்னார் :

''இப்பொழுது ஆங்கில மொழி மாநிலங்களில் எல்லாம் சற்று ஏறத்தாழப் பொது மொழியாகவும், மாநிலங்களுக்கும் மத்திய அரசுக்கும் இடையில் நடைபெற்று வரும் கடிதப் போக்குவரத்து மொழியாகவும் இருந்து வருகிறது. எனவே, ஆங்கில மொழியை நீக்கி விடுவோமானால், இந்தியா ஒன்றுக்கொன்று தொடர்பில்லாத மாநிலங்களாகப் பிரிந்து, நாடும் பல கூறுகளாகச் சிதறி விடும் (Will be disintegrated). மொழிப் பிரச்சினை தேசிய ஐக்கியம் அல்லது ஒருமைப்பாடு என்ற விரிந்து பரந்த அடிப்படையில் தான் கருதப்பட வேண்டும்.''

'ஆங்கிலம் கைவிடப்படுமானால், நாடு பிரிவினைப்படும்' என்பது எவ்வளவு தீர்க்க தரிசனமான எச்சரிக்கை! ஆள்வோரே ! சிந்திப்பீர்களாக !

# சச்சிதானந்தருக்குச் சதாபிஷேகம்

தவத்திரு சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள்

"அறம் பொருள், இன்பம் வீடு, அடைதல் நூற் பயனே" என்பது நன்னூல் சூத்திரம். இதில் முதலில் உள்ள அறத்தையும், கடைசியில் உள்ள வீட்டையும் (மோட்சம்) பெரும்பாலோர் விரும்புவதில்லை. இடையில் உள்ள பொருளை ஈட்டுவதிலும், அப்பொருள் கொண்டு இன்பம் அனுபவிப்பதிலுமே எல்லோரும் நாட்டம் செலுத்துகின்றனர். ஒருவன் பொருளீட்ட வேண்டுமானால் அதற்கு முதல் வேண்டும். அம் முதலை வைத்து வியாபாரம் செய்யக் கடை வேண்டும். முதலும் கடையும் இல்லாமல் பொருளை எப்படி ஈட்ட முடியும்? இன்பம் எப்படித் துய்க்க முடியும்? எனவே மனித வாழ்வுக்கு முதலாகிய அறமும், கடையாகிய வீடும் முக்கிய குறிக்கோளாக இருக்க வேண்டும்" என்று நயம்பட உரைப்பவர்தான் திருவாளர் ச. சச்சிதானந்தம் பிள்ளை.

பிள்ளையவர்கள் 30–7–1887ல் ஆடி மாதம் கேட்டை நட்சத்திரத்தன்று சபாபதி பிள்ளைக்கும், மீனாட்சி அம்மைக்கும் அருந்தவ மகவாய்த் தோன்றியவர்கள். தமிழைத் தாய் மொழியாகக் கொண்ட இவர் இளமையில் வெஸ்லி உயர்நிலைப் பள்ளியில் தெலுங்கு மொழியைத் துணை மொழியாகக் கற்றார். இன்டர்மீடியட் வரை வெஸ்லி கல்லூரியில் பயின்றார். பச்சையப்பன் கல்லூரியில் பி. ஏ. பட்டம் பெற்றார்.

ரெவின்யூ போர்டில் இவருக்கு உத்தியோகம் கிடைத்தது. அதில் பணி புரியும் போது "ஆன்றமைந்து அடங்கிய கொள்கைச் சான்றோர்" தொடர்பும், அவர்களின் அறவுரை கேட்கும் வாய்ப்பும் அவ்வறக் கருத்துக்களைப் பிரசாரம் செய்து மக்களிடையே தெய்வ ஒழுக்கம் பரவச் செய்யும் வாய்ப்பும் கிடைக்கவில்லையே என ஏங்கினர். இது காரணமாக அவ்வேலையைத் துறந்தார். வேலையை விட்டு வீடு நோக்கிக் கவலையுடன் வரும்போது வழியில் வெஸ்லி கல்லூரி முதல்வர் ட்ரூ என்பவர் இவரைப் பார்த்துச் சோர்வுக்குக் காரணம் கேட்டறிந்தார். அடுத்த நாளே தமது கல்லூரியில் தத்துவ விரிவுரையாளராக நியமித்துக் கொண்டார்.



மற்ற துறைகளில் வேலை கிடைக்காவிட்டால் கடைசியாக அடைக்கலம் புகுவது தான் ஆசிரியப் பணி என்பது உலகியல் நடைமுறை. இதிலும் பிள்ளையவர்களின் போக்கு மக்கட்கு வழிகாட்டுவதாக உள்ளது. ஆசிரியப் பணி மிகப் புனிதமானது. "மாதா பிதா குரு தெய்வம்" என்ற அறவுரையில் தெய்வத்திற்கு அடுத்த ஸ்தானம் வகிப்பவர் ஆசிரியரே. மாதா பிதாவைக் காட்ட, பிதா குருவைக் காட்ட, குரு தெய்வத்தைக் காட்டுபவர் என்பது இதன் பொருள். இப்பணியை ஆர்வத்தோடும் அடக்கத்தோடும் நான்கு ஆண்டுகள் செய்து வந்தார். இடையில் ஆசிரியப் பயிற்சியும் பெற்றார். ஆங்கிலேயர் ஆட்சியில் ஸ்டேத்தம் கல்வித் துறையில் டைரக்டராக இருந்தபோது பிள்ளையவர்கள் டிபுடி டைரக்டராக இருந்தது குறிப்பிடத் தக்க சிறப்பாகும்.

கல்வித் துறையில் விரிவுரையாளராக, தலைமை ஆசிரியராக, ஆய்வாளராக, மாவட்டக் கல்வி அதிகாரியாக அனைவரும் பாராட்டத்தக்க வகையில் பணியாற்றியவர். உத்தியோகம் வகித்த காலத்திலேயே தெய்வத் தொண்டையும் சிறப்பாகச் செய்தவர். 25 ஆண்டுகளுக்கு முன்னர் தென்னார்க்காடு மாவட்டத்தில் கல்வி அதிகாரியாக இருந்த போது விருத்தாசலம் உயர்நிலைப் பள்ளியைப் பார்வையிட வந்தார். பள்ளிப் பணி முடிந்த பின்னர் ஆசிரியர்களை ஒன்று கூட்டி, 'கடவுள் பக்தி இளைஞர் உள்ளத்தில் பதிந்தால்தான் கடமை, கண்ணியம், கட்டுப்பாடு, ஒழுக்கம் முதலிய நற்செயல்கள் நாட்டில் சிறந்தோங்கும். ஆகவே வாரத்துக்கு ஒரு நாள் ஆசிரியர்களும், மாணவர்களும் ஆலயத்துக்குச் சென்று வார வழிபாடு நிகழ்த்த வேண்டும்' என்று அன்புக் கட்டளையிட்டு வழிபாட்டு இயக்கத்தைத் தாமே தொடங்கி வைத்தார். அப்பொழுது இளைஞர்களைப் பார்த்து, 'காலையில் எழுந்தவுடன் நினைப்பது க-னாவா, காவன்னாவா?' என்று வினவி, 'க-என்பதுதான் முதல் எழுத்து. ஆதலால், கடவுளை முதலில் நினைக்க வேண்டும். கா-வன்னா இரண்டாவது எழுத்து. ஆதலால்

காப்பியை இரண்டாவதாக நினைக்க வேண்டும்' என்று நகைச்சுவையுடன் கூறியது இன்றும் என் நினைவில் நீங்காமல் இருக்கிறது.

இவர் தந்தை சபாபதிப் பிள்ளை பழுத்த வேதாந்தி ஆவார். ஈசூர் சச்சிதானந்த சுவாமிகளைக் குருவாகக் கொண்டவர். குருவின் நினைவாகத்தான் தமது குமாரராகிய இவருக்குச் சச்சிதானந்தம் என்று பெயரிட்டார். சச்சிதானந்தம் பிள்ளை பிதா குரு இவர்களின் ஆசிர்வாதத்தால் கல்வியிலும், தெய்வத் தொண்டிலும் சிறந்து விளங்குகிறார். பிள்ளையவர்கள் சைவ சித்தாந்தக் கொள்கை உடையவர். ஆனால் பிற சமயங்களிடத்தும் பெரு மதிப்புக் கொண்டவர். அவ்வச்சமயத்தில் உள்ள ஒற்றுமைக் கருத்துக்களைப் போற்றிப் பின்பற்றுபவர். தேவார திருவாசகம் முதலிய பன்னிரு திருமுறைகளில் அழுத்தமான நம்பிக்கையுடையவர். இதற்கு உதாரணமாக ஒன்று சொல்லலாம். இவர் குடும்பத்துடன் தலயாத்திரை சென்றபோது ஸ்ரீவில்லிபுத்தூரில் ஸ்ரீ ஆண்டாள் திருக்குளத்தில் நீராடினார். வாழ்க்கைத் துணைவியாகிய அமிர்தவல்லி அம்மையார் நீரில் மூழ்கிக் கரையேற இயலாது தண்ணீர் குடித்து இறந்து படும் நிலையில் இயமனுடன் போராடிக் கொண்டிருந்தார். உடன் வந்தவர்கள் சிகிச்சைக்கு ஏற்பாடு செய்தனர். இவர் மட்டும் திருஞானசம்பந்தர் அருளிய 'மந்திரமாவது நீறு' எனத் தொடங்கும் தேவாரத்தை ஓதி அம்மையார் நெற்றியில் திருநீறு இட்டார். அமிர்தவல்லி அம்மையார் உயிர் பெற்று எழுந்தார். அன்று பாண்டியனின் வெப்பு நோயைத்தான் திருநீற்றுப் பதிகம் போக்கியதென்று இதுகாறும் நினைத்திருந்தோம். இவர்களது வாழ்வில் நீர் வழி வந்த ஆபத்தையும் போக்கியுள்ளதை உணர்கிறோம்.

கடுந் துறவியாகிய பாம்பன் ஸ்ரீ குமரகுருதாச சுவாமிகளும், திருப்பாதிரிப்புலியூர் ஸ்ரீ ஞானியார் சுவாமிகளும் இவருக்குக் குருவாக இருந்தவர்கள். பாம்பன் சுவாமிகளிடம் உபதேசம் பெற்று, வேல் முருகன் பூசை செய்து வந்த இவர், தமது குடும்ப வழக்கத்தை ஒட்டி ஸ்ரீ ஞானியார் சுவாமிகளிடத்தில் ஞானோபதேசம் பெற்று சிவபூசை எழுந்தருளச் செய்து கொண்டார். சிவபூசையை இடையறாது செய்து வருபவர். நாள்தோறும் திருமுறைப் பாராயணம் செய்து வரும் சிறப்பினர்.

இந்தத் தள்ளாத வயதிலும் யார் எந்த ஊருக்கு அழைத்தாலும் தடை சொல்லாமல் சென்று சமயப் பிரசாரம் செய்து மக்களை நன்னெறிப்படுத்தி வருகின்றவர். ஞானியார் சுவாமிகளைப் போன்றவர்கள் இவரது பண்பையும், தொண்டையும், ஆர்வத்தையும் பாராட்டிச் சைவப் பாதிரியார் என அழைத்தனர். சமயப் பண்பாட்டில் ஈடுபட்டுள்ள மக்கள் இவரை வார வழிபாட்டுத் தந்தை எனப் போற்றுகின்றனர்.

வார வழிபாட்டு இயக்கத்தை முதன் முதலில் தொடங்கியவர் மகாராஷ்டிரத்தைச் சேர்ந்த கோவிந்த ரானடேயும், அவர் சீடர் கோபாலகிருஷ்ண கோகலேயும் ஆவார்கள். இந்த இயக்கத்தைத் தமிழ் நாடு முழுவதும் பரவச் செய்த பெருமை பிள்ளையவர்களுக்கே உரியது. இவர்களது தொண்டைப் பற்றிச் சுருக்கமாகச் சொன்னால் ''நடமாடும் சமயப் பிரசார நிலையம்'' என்று சொல்லி விடலாம். ஒரு சமய நிறுவனம் செய்யக்கூடிய சைவ தெய்வத் தமிழ்ப் பணியைத் தனி ஒரு மனிதர் செய்து வருகிறார் எனலாம். சென்னை சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் தூணாக இருந்து வருபவர். இந்த ஆண்டுத் தலைவரும் இவரே. இராயப்பேட்டையில் திரு. வி. க. போற்றி வளர்த்த பாலசுப்பிரமணிய பக்த ஜன சபையைப் பக்தி சிரத்தையுடன் போற்றி வளர்த்து வருகிறார். தமது நண்பர் திரு. வி. க. வின் நினைவாக மணி மண்டபம் கட்டிய மாண்புடையவர். திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்தின் அறக் கட்டளையின் சார்பில் காசிப் பல்கலைக் கழகத்திலும் அலகாபாத் பல்கலைக் கழகத்திலும் சைவ சித்தாந்தம் பற்றி ஆங்கிலச் சொற்பொழிவாற்றியவர்.

இவ்வாறு பல வகையாலும் பணியாற்றியுள்ள சைவப் பெரியார் சச்சிதானந்தம் பிள்ளையைப் பாராட்டி மதுரை ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் சமீபத்தில் ''சைவ மாமணி'' என்ற பட்டமளித்துப் பாராட்டியுள்ளார்கள். தருமை ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குரு மகாசந்நிதானம் அவர்கள் வருகின்ற ஆவணி மூலத்தன்று 12–9–67ல் ''சைவம் பெருக்கும் சீலர்'' என்னும் பட்டம் பொறித்த பொற் பதக்கம் அளித்துப் பொன்னாடை போர்த்தி ஆசீர்வதிக்கத் திருவுளம் கொண்டுள்ளார்கள். நமக்கு எல்லா வகையிலும் பயன்பட்டும், பெருந் துணையாக இருந்தும் வரும் கடவுளை நாம் நன்றி செலுத்தும் காரணமாக வழிபாடு செய்து வணங்குகிறோம். அதைப் போலவே மக்களுக்குத் தமது பண்பாலும், தொண்டாலும் பயன்பட்டு வரும் தலையாய மனிதர்களை நன்றி தெரிவிக்கும் அடையாளமாகப் பாராட்டுவது மனித இனத்தின் தலையாய கடமை ஆகும். திரு பிள்ளையவர்கள் எண்பதாண்டுகளைப் பூர்த்தி செய்யும் நன்னாள் நமது பாராட்டினை அவருக்கு அளிப்பதற்கேற்ற பொன்னாளாகும்.

நமது நன்றி அறிவிப்பைப் பேச்சோடு நிறுத்திவிடாமல், செயலிலும் காட்டுதல் நலமெனக் கருதி அன்பர்கள் பலர் தொழிலதிபர் திரு நா. மகாலிங்கம் அவர்கள் தலைமையில் ''சச்சிதானந்தம் பிள்ளை சதாபிஷேக விழாக் குழு'' நிறுவி, ரூ. 81,000 பெருமக்களிடமும், பொதுமக்களிடமும் சமய ஸ்தாபனங்களிடமும் அன்புப் பரிசாகப் பெற்று அத் தொகையை 81 வயது வாழ்ந்து காட்டிய அப்பர் சுவாமிகளின் பெயரால் சைவத் தமிழ் வளர்ச்சிக்குப் பயன்படுத்தத் திட்டம் இட்டுள்ளனர்.

தமிழகத்தில் உள்ள தமிழன்பர்கள், சைவ அன்பர்கள் தங்கள் கடமையை மனமகிழ்ந்து சிறப்பாகச் செய்ய முன்வருவார்கள் என்று நம்புகிறேன். * 1967 டிசம்பர் மாதத்திற்குள் 81 ஆயிரம் ரூபாய் பண முடிப்பைப் பிள்ளை

யவர்களிடம் பரிசாக அளித்து அறக்கட்டளை நிறுவும் விழா நடைபெறும்.

மனிதனின் பூரண வயது 120 என்பது சோதிட நூல் துணிபு. அதில் பாதி அறுபது. அறுபதை அடையும்போதுதான் சஷ்டியப்த பூர்த்தி கொண்டாடுகிறோம். எண்பது வருடம் முடிந்து எட்டு மாதத்தில் ஒருவனுக்கு ஆயிரம் பிறை காணும் பேறு கிடைக்கிறது. வட்ட எண்ணாக 80ல் கொண்டாடுகிறோம். ஆயிரம் பிறை காணும் பேறு பெற்ற திரு ச. சச்சிதானந்தம் பிள்ளை அவர்கள் கல்வி, பொருள், மக்கட் செல்வத்தோடு ஆயுட் செல்வமும் பெற்றவர்கள். அவர்கள் பல்வகைச் செல்வராக மேலும் பல்லாண்டு வாழ இறைவனைப் பிரார்த்திப்போமாக. ஓ

* பொருள் அனுப்ப வேண்டிய முகவரி: ஸ்ரீ திரு டி. கே. சுப்பிரமணிய பிள்ளை, பி.ஏ. பி. எல்., பொருளாளர்: சச்சிதானந்தம் பிள்ளை சதாபிஷேக விழாக் குழு, 23-6, லஸ் அவின்யூ, , மயிலாப்பூர், சென்னை-4

அட்டைப்பட விளக்கம்

# வண்ண உடையில் பெண்ணரசிகள்

எதிலும் அழகைக் காணும் ரசிக உள்ளம் படைத்தவர்கள் அழகு எங்கிருந்தாலும் அதைத் தேடி ரசிக்கத் தவறமாட்டார்கள். பண்டைக் காவியங்களை இயற்றிய புலவர்கள் எழில் பொங்கும் இயற்கைக் காட்சிகளை எத்தனையோ கோணங்களில் படம் பிடித்துக் காட்டியிருக்கிறார்கள். மேற்கூறிய காவியங்களில் நாம் காணும் ஓவியக் காட்சிகள் கணக்கில் அடங்கா.

விண்ணகத்தில் கண் சிமிட்டி அழகு காட்டும் விண்மீன்களின் கூட்டத்தையும், முழுமதியின் மோகன நிலவொளியையும், அவ்வெண் மதி விரித்த தண்ணிலவின் பால் ஒளியில் வெண்ணிற விரிப்பாகப் பரந்து கிடக்கும் கடற்கரையின் வெண் மணற்பரப்பையும் மேற்படி சொல்லோவியங்களில் படித்து மனக் கண்ணால் கண்டு பரவசமடையலாம்.

இயற்கையின் எழில் பரிபூரணமாக வெளிப்படும் அழகைக் காண வேண்டுமானால், மாலை வேளையில் நீலக் கடற்கரைக்குச் செல்ல வேண்டும். அங்கு கரையை ஒட்டினாற்போல் நின்று நீலக் கடலை வான வளையம் முத்தமிட்டுத் தழுவும் மோகனக் காட்சியில் மனத்தைப் பறி கொடுத்துத் தன்னை மறந்த லயந்தன்னில் நிற்க வேண்டும். அதே நிலையில் நேரம் கழிவதிலும் நினைப்பின்றி நின்றுகொண்டிருந்தால் நாம் காலம் கடந்த கற்பனை உலகுக்குச் சென்று விடுவோம். நீலக் கடல் அலைகளையே உற்று நோக்கிக் கொண்டிருந்தால் நம் மனக் கண்ணின் முன்னே இன்னும் சில எழிற்காட்சிகள் தோன்றும். அலைகள் ஒய்ந்து விடும்.



வான வில்லின் வர்ண ஜாலங்களைப் போல் கவர்ச்சியூட்டும் பல வண்ண உடைகள் தரித்த பெண்ணரசிகள் தோன்றி நீலநிறத்துக் கடல் நீரில் ஒல்கி, ஒசிந்து, நெளிந்து, வளைந்து நீந்தி விளையாடுவதைக் காணலாம். வானுலகத்து அப்சரஸ்களின் இனத்தைச் சேர்ந்த இம்மங்கையர்களின் எழிற்கோலம் கவினுறு காட்சியாக விளங்கும்.

ஓவியர் "ராமு" இவ்விதழ்க் "கல்கி" அட்டையில் அந்த மானசீகக் காட்சியை வண்ணப் படமாகத் தீட்டியிருக்கிறார்; கொடியிடையாரைப் போலவே அசையும் நீர்க் கொடிகளையும், எழிலார்ந்த மண்டபங்களையும் புனைந்திருக்கிறார். இவ்வளவையும் புனைந்தவர் நீருடனும் மங்கையருடனும் நெருங்கிய தொடர்பு கொண்ட தாமரை மலரை மட்டும் ஏன் வரையாது விட்டார்?

பெண்ணின் முகத்தைத் தாமரைக்கு ஒப்பிடுவது நம் கவி மரபு. தாமரையைப் பெண்ணின் முகமாகவும், பெண்ணின் முகத்தைத் தாமரை மலராகவும் நினைத்து மயங்குவதாகப் பல கவிதைகள் புனையப்பட்டிருக்கின்றன. எனவே, பல அழகிய பெண்களைத் தீட்டிய ஓவியர், தாமரை மலரைத் தனியாகத் தீட்டாமல் விட்டது பொருத்தந்தானே!

"செய்ய தாமரைக ளெல்லாம்
தெரிவையர் முகங்கள் பூத்த
தையலார் முகங்கள் செய்ய
தாமரை பூத்த அன்றே"

என்று கம்பர் கூறியிருப்பதைக் கருத்தில் கொண்டு பார்த்தால் இந்தப் பொருத்தம் எவ்வளவு சரியா யிருக்கிறது என்பது விளங்கும்.



# யாரோ இவர் யாரோ?

'சோ'

அத்தியாயம் 4

சிங்காரத்தின் மனத்தில் உருவாகிக் கொண்டிருந்த திட்டங்கள் என்ன? தண்ணீரை வாரி அடித்துச் சென்ற காரைத் துரத்திச் சென்ற ரவி என்ன ஆனான்? மாடிப் படிக்கடியில் ஒளிந்து கொண்ட முத்துவின் கதி என்ன - என்பதையெல்லாம் அறிந்து கொள்ள வாசகர்கள் துடிதுடித்துக் கொண்டிருப்பார்கள். இந்தச் சிக்கல்களை ஒவ்வொன்றாகத் தீர்த்து வைப்போம்.

படியிறங்கி வந்த சிங்காரம் கடிதத்தைச் கவரிலே வைத்துக் கவரை ஒட்டக் கோந்தைத் தடவிக் கொண்டிருக்கும் போது, மனத்துக்குள் தனது திட்டத்தை ஒரு முறை சரி பார்த்துக் கொண்டிருந்தான். அப்போது தான் மாடியிலிருந்து கிரிஜா சிங்காரத்தைத் தனது பெட்டியை எடுத்து வரும்படி உத்தரவு போட்டாள். அதைக் கேட்ட சிங்காரம் 'பசை தடவப்பட்ட கவரை அப்படியே வைத்துவிட்டு, முத்து கொணர்ந்து வைத்திருந்த கிரிஜாவின் பெட்டியை எடுத்துக் கொண்டு மாடிப் படியில் ஏறினான். இதுதான் சமயம் என்று நினைத்த முத்து வந்த சுவடு தெரியாமல் ஓடி விடுவது என்று தீர்மானித்து மாடிப்படியின் கீழிருந்து வெளியே வந்தான். குடுமி அவிழ்ந்துவிடவே, பெட்டியை அருகிலிருந்த மேஜையின் மீது வைத்து விட்டு அவசரம் அவசரமாகத் தனது கூந்தலை அள்ளி முடித்தான். பிறகு, பெட்டியை எடுத்துக் கொண்டு வாயிலை நோக்கிப் பறந்தான்.

பெட்டியை மேலே கிரிஜாவிடம் கொடுத்து விட்டுக் கீழே வந்த சிங்காரம், தான் வைத்த இடத்தில் கவரைக் காணாமல் ஒரு கண நேரம் திகைத்தான். 'சரி, காற்றிலேதான் பறந்து போயிருக்கும் — விட்டது சனியன்' என்று தீர்மானித்துக் கொண்டான் சிங்காரம். கோந்து தடவப்பட்ட அந்தக் கவர், மேஜையின் மீது முத்து தனது பெட்டியை வைத்த போது, பெட்டியின் கீழ் ஒட்டிக் கொண்டதும், கடிதம், கவர், பெட்டி சகிதம் முத்து வெளியேறியதும் சிங்காரத்துக்குத் தெரிந்திருக்க நியாயமில்லை. சிங்காரம் அடுத்து என்ன செய்யலாம் என்று சில நிமிஷ நேரம் ஆழ்ந்த யோசனையில் இருக்கும்போது, ராஜரத்தினமும், மகள் கிரிஜாவும் கீழே இறங்கி வந்தனர்.

ராஜரத்தினம் சிங்காரத்திடம், "நாங்க இரண்டு பேரும் சினிமாவுக்குப் போயிட்டு வரோம். அசோக்கை ஜாக்கிரதையாகக் கவனிச்சுக்க" என்று கூறினார். கிரிஜா பின்தொடர வெளியேறினார்.

அவர்கள் போவதற்காகவே காத்துக் கொண்டிருந்த சிங்காரம், டெலிபோனை எடுத்துச் செங்கற்பட்டுக்கு ஒரு 'டிரங்க் கால்' 'புக்' செய்தான்.

டிரங்கால் போட்டவுடன் கிடைத்து விடுமா? 'லைன் ரிப்பேர்' என்ற பதில் தானே வரும்! டிரங்க் கால் வரும்வரை காத்திருக்காமல் சிங்காரத்தை அப்

படியே விட்டு விட்டு ரவியைக் கவனிப்போம்.

**கா**ரைத் துரத்திச் சென்ற ரவி, அந்தக் கார் கிண்டி குதிரைப் பந்தய மைதானத்துக்கு வந்தவுடன் நிற்பதைக் கண்டு டாக்ஸியை விட்டிறங்கிப் பணத்தைக் கொடுத்து அனுப்பிவிட்டு, அந்தக் காரிலிருந்து இறங்கியவர்களை நெருங்குவதற்குள் அவர்கள் குதிரைப் பந்தய மைதானத்துக்குள் நுழைவதைக் கண்டான். தானும் டிக்கட் வாங்கி அவர்களைப் பின்தொடர்ந்து உள்ளே சென்றான். காரை ஓட்டிச் சென்றவள் ஒரு பெண். கூட இருந்தவர் அவளுடைய தகப்பனாகத்தான் இருக்க வேண்டும். உள்ளே சென்றவுடன் அவர் தம் மகளிடம் ''கொஞ்சம் இரு. வந்துர்றேன்'' என்று கூறிவிட்டு 'டிப்ஸ்' தேடிக் கேட்டு வரலாம் என்ற எண்ணத்தோடு நண்பர்களைத் தேடிச் சென்றார். தனியாக விடப்பட்ட அந்தப் பெண்ணை நெருங்கினான் ரவி.

''உங்களுக்கு அறிவு இருக்குதா?''

''என்னையா கேட்டீங்க?'' என்று அப்பெண் திடுக்கிட்டுத் திரும்பினாள். ரவிக்குத் திடீரென்று ஞாபகம் வரப் பர்ஸில் வைத்திருந்த சின்னதுரை மகள் சித்ராவின் பத்திரிகைப் போட்டோவைப் பார்த்தான். 'ஆஹா! அவளேதான் இவள்!'

''மிஸ்டர்! என்னையா கேட்டீங்க?'' — சித்ரா; அவனை விடுவதாக இல்லை.

''இல்லே.... வந்து... நான் 'மிஸ்டேக்' பண்ணிக்கிட்டேன். நிலைமையைச் சமாளிக்கப் பார்த்து ரவி மென்று விழுங்கினான். ''நீங்க என்ன செய்வீங்க பாவம்! அறிவு இருக்குதான்னு உங்ககிட்டப் போய்க் கேட்டால் உங்களாலே என்ன பதில் சொல்ல முடியும்? ஐ ஆம் ஸாரி...''

''தயவு செய்து புரியும்படியாகப் பேசறீங்களா?''

''நான் யாரோன்னு நினைக்க என்னமோ கேட்டு விட்டுட்டேன். நீங்க எப்படியோ என்னை மன்னிச்சிடுங்க.''

''மிஸ்டர்...!''

''உங்க பேர் சித்ராதானே...என் பேர் ரவி.''

''எப்படித் தெரியும்?''

''எங்கம்மா சொல்லித் தெரியும். சத்தியமா என் பேர் ரவிதான்.''



''உங்க பேர் எபபடித் தெரியும்னு க்கலே. என் பேர் உங்களுக்கு எப்படித் தெரியும்?''

''என் பேர் என்ன தெரியுமா?''

''ரவி!''

''என் பேர் உங்களுக்கு எப்படித் தெரியும்?''

''நீங்கதானே சொன்னீங்க!''

''உங்க பேரும் எனக்கு அப்படித் தான் தெரியும்!''

''நான் என் பேரை உங்ககிட்டே எப்பச் சொன்னேன்? நான்தான் சொல் லவே இல்லியே!''

''அதனுலென்ன? பரவாயில்லே. இப் பச் சொல்லிடுங்களேன்!''



''இன்னும் அஞ்சு நிமிஷம் நீங்கள் என் முன்னாலே நின்னால் எனக்குப் பைத்தியமே பிடிச்சிடும்!''

''தாங்க்ஸ். நான் அவ்வளவு அழகாவா இருக்கேன்?''

''நீங்க யாரு? ஏன் இப்படிப் 'போர்' அடிக்கிறீங்க?''

''பேப்பரிலே கொஞ்ச நாளைக்கு முன்னாலே உங்க போட்டோவைப் பார்த்தேன். விளையாட்டுப் போட்டியிலே எல்லாம் நீங்க பரிசு வாங்கினதைப் பார்த்து நான் ரொம்பப் பெருமைப் பட்டேன்.''

''நான் பரிசு வாங்கினதிலே உங்களுக்கு என்ன பெருமை?''

''நம்ம பாரத நாட்டுப் பெண்மணிகள், பாரதியார் சொன்ன மாதிரி முன்னுக்கு வந்துக்கிட்டிருக்காங்களேங்கறதை நினைச்சு நான் பெருமைப்பட்டேன்.!''

''பெண்கள்ளாம் ரேஸ் ஓடணும்னு பாரதியார் சொன்னதாக எனக்குத் தெரியலேயே?''

''சொல்ல மறந்துட்டார்னு நினைக்கிறேன்.''

''உங்களுக்கு விளையாட்டுக் கலையிலே ரொம்ப ஆசையா?''

''விளையாட்டுன்னா எனக்கு உசிரு!''

முன்பின் தெரியாத ஓர் ஆண்மகனோடு இப்படி ஒரு பெண் பேசிக் கொண்டு நிற்பாளா என்று யாரும் கேட்க மாட்டார்களென்று நினைக்கிறேன். சித்ரா ஒரு கல்லூரி மாணவி என்பதை மட்டும் நினைவில் வைத்துக் கொண்டால்.

இவர்கள் இருவரும் இப்படி உரையாடிக் கொண்டிருக்கும்போது வேர்க்கடலை விற்பவன் ஒருவன் ரவியின் பக்கம் வந்து, ''ஸார்! கடலை வேண்டுமா?'' என்று கேட்க ரவி ''போடா முட்டாள்!'' என்று எரிந்து விழுந்தான். அவன் போனவுடன் யாரோ ஒருவர் வந்து, ''என்ன ஸார் டைம் ஆகுது?'' என்றார். ''மண்ணாங்கட்டி!'' என்று சலித்துக் கொண்டான் ரவி. சித்ராவோடு பேசவிடாமல் இப்படி ஒவ்வொருவராக வந்து வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்கிறார்களே என்று அவன் தவிக்கும்போது சின்னதுரை அங்கு வந்து சேர்ந்தார். டிப்ஸுக்காகத் தேடி அலைந்து கொண்டிருந்த அவர் ரவியிடம் நெருங்கி, ''ஸார்! இன்றைக்கு எந்தக் குதிரை ஜெயிக்கும்னு தோணுது? ஏதாவது டிப்ஸ் தெரிஞ்சாக் கொடுங்களேன். எந்தக் குதிரை ஸார் ஜெயிக்கலாம்?'' என்று ஆவலோடு கேட்டார்.

ரவி தனது ஆத்திரத்தின் உச்சியை அடைந்தான். அவரைத் திரும்பிப் பார்க்காமலே ''சனீசுவரன்!'' என்று சபித்தான்.

சின்னதுரை முகத்தில் மகிழ்ச்சியோடு வேகமாகப் பணம் கட்டும் இடத்துக்குச் சென்றார். சனீசுவரன் என்ற பெயரிலேயே அன்று குதிரைப் பந்தயத்தில் ஒரு குதிரை வருவதையும் சின்னதுரை, ரவி தன்னைத் திட்டினான் என்பதை உணராமல், அதையே டிப்ஸாகக் கருதி, சனீசுவரன் மீது பணம் கட்டிவிட்டார் என்பதையும் ரவி உணர்ந்தவனல்ல. அந்தச் சனீசுவரன் பந்தயத்திலே ஜெயிக்கச் சின்னதுரைக்குக் கணிசமான பணம் சேரப் போகிறது என்பதையும் அவன் எதிர்பார்க்கவில்லை.

சனீசுவரன் ஜெயித்தவுடன், சித்ரா ரவியைப் பார்த்து, ''உங்களுக்கு ஏதாவது அறிவு இருக்கிறதா?'' என்றாள்.

''ஏன்? உங்களுக்குக் கொஞ்சம் வேணுமா?''

''விளையாடறீங்களா? எங்க அப்பாவுக்கு ஏன் இப்படி கரெக்டா டிப்ஸ் கொடுத்தீங்க?''

''யார் உங்கப்பா? என்ன டிப்ஸ்?''

''ஒண்ணுமே தெரியாதது மாதிரி கேக்கறீங்களே? இப்ப எங்கப்பா வந்து டிப்ஸ் கேட்டாரு. சனீசுவரன்னு சொன்னீங்க. அதே மாதிரி சனீசுவரன் ஜெயிச்சுடிச்சு! எங்கப்பாதான் ரேஸ் பைத்தியம் பிடிச்சு அலையுறாரு. உங்கள் மாதிரி இன்னும் நாலு பேர்கள் கூடச் சேர்ந்தால் அவர் உருப்பட்ட மாதிரிதான்!''

''அட சனீசுவரனே! அப்படியா விஷயம்? ஆமாம்! அவர் குதிரைப் பந்தயத்துக்கு வரது உங்களுக்குப் பிடிக்கலேன்னா நீங்க ஏன் அவர் கூட இங்கே வரீங்க?''

''அவர் இங்கே வரதை நிறுத்த என்னாலே முடியலே. அதனாலே ஒரு நாளைக்கு ஒரு குதிரை மேலேதான் பணம் கட்டலாம்னு 'கண்டிஷன்' போட்டிருக்கேன். அதும்படி நடந்துக்கிறாரான்னு பார்க்கத்தான் நானும் அவர் கூடவே வரேன்'' என்று விளக்கினாள் சித்ரா.

இப்போது சின்னதுரை அங்கு வந்து சேர்ந்தார். அவர் முகத்தில் தோன்றிய உணர்ச்சி நன்றியா, மகிழ்ச்சியா, வியப்பா என்று யாராலுமே சொல்ல முடியாது. அப்படி உணர்ச்சியில்லாத ஒரு முகம் அது.

''மிஸ்டர்! நீங்க சொன்ன மாதிரியே சனீசுவரன் ஜெயிச்சுடுச்சே! எப்படி ஸார் அவ்வளவு கரெக்டா சொன்னீங்க?'' என்று வியந்தார் அவர்.

# ஆள் எவ்வளவு மாறி விட்டிருந்தான்

எப்பொழுதும் மலர்ந்த முகத்துடனும் உல்லாசமாக இருந்த என் மகனு இவன்! பழைய முகமலர்ச்சி எங்கே, உல்லாசம் எங்கே, படிப்பில் அவனுக்கிருந்த அக்கறை எங்கே என்றெல்லாம் எண்ணி எண்ணி வருந்திக் கொண்டிருந்தேன்.







அவர் சொன்னபடி செய்தேன். என் மகன் மீண்டும் பழைய ஆளாகிவிட்டான்! உற்சாகமும் ஊக்கமும் நிறைந்து, எப்பொழுதும் துறு துறுவென்று துடியாக இருக்கிறான். அவனுக்கு ஹார்லிக்ஸ் கொடுத்தது எவ்வளவு நல்லதாகப் போயிற்று!

ஆடைச் சத்து நிறைந்த பாலுடன், கோதுமை மாவு, மால்டெட் பார்லி இவற்றின் போஷாக்குச் சத்து கூடியது

## எவ்வளவு பெரிய மாற்றத்தை தருகிறது ஹார்லிக்ஸ்!






சக்தி இல்லாமையால், குழந்தைகள் எதிலும் அக்கறை இல்லாமல் சலித்துப் போயிருப்பார்கள். செலவழிந்த சக்தியை மீட்டுத்தருவதற்குப் போதுமான போஷாக்கு, அவர்களுக்கு வழக்கமான ஆகாரத்தில் கிடைக்காமலிருப்பதுதான் பெரும்பாலும் இதற்குக் காரணம். இங்குதான் ஹார்லிக்ஸ் அருமையாக உதவுகிறது! பூரண போஷாக்குச்சத்துகொண்ட இயற்கை உணவுப் பொருள்களிலிருந்து, அவை விரைவில் சுலபமாக ஜீரணமாகும்படியாக விசேஷ தயாரிப்பு முறையினால் உருவாக்கப்படுவதுதான் ஹார்லிக்ஸ். அதை அருந்தியதும் உற்சாகம் கூடி சுறுசுறுப்புடன் விளங்கலாம். எனவேதான் குழந்தைகளுக்கும் பெரியவர்களுக்கும் ஹார்லிக்ஸ் கொடுக்கும்படி டாக்டர்கள் சிபாரிசு செய்கிறார்கள்.

# ஹார்லிக்ஸ்

அதிக சக்தியை அளிக்கிறது!

''அதெல்லாம் ஒன்றுமில்லேஹிஹி!''

''உங்க பேர் என்ன?''

''ரவி!''

''என் பேர் சின்னதுரை. இது என் மகள் சித்ரா! நீங்க அவசியம் என் விட்டுக்கு வரணும் ஸார்.''

''கண்டிப்பா வரேன். உங்க விலாசம்...''

''இதோ என் விசிட்டிங் கார்ட்'' என்று விசிட்டிங் கார்டை நீட்டினார் சின்னதுரை.

''உங்களுக்கு ஏற்ற சிநேகிதர் கிடைச்சுட்டாரு. இனிமேல் ரேஸ் பைத்தியம் உங்களுக்குத் தலைக்கேறப் போகுது'' என்று மிகுந்த வெறுப்போடு சித்ரா குறுக்கிட்டாள்.

''அந்த மாதிரி யெல்லாம் பேசாதேம்மா. மிஸ்டர் ரவி, நீங்க ஒண்ணும் தப்பா நினைச்சுக்காதீங்க. வீட்டுக்கு வராமல் இருந்திடாதீங்க.''

''நீங்க கூப்பிட்டிருக்காட்டிக் கூட நானே வந்திருப்பேன் ஸார்.''

''அப்ப நாங்க வரோம், ஸார்!'' என்று சின்னதுரை விடைபெற்றுக் கொண்டார்.

''வரோம், மிஸ்டர் சனீசுவரன்!'' என்று விறைப்பாகக் கூறி நகர்ந்தாள் சித்ரா. தன் தந்தையின் பரம வைரியான சின்னதுரை இப்படி எடுத்த எடுப்பிலேயே தன்பால் சாய்ந்துவிட்ட பெருமை முழுக்க முழுக்கச் சனீசுவரனையே சாரும் என்று ரவி பரிபூர்ணமாக உணர்ந்தான். அன்றிரவு சென்னை மயிலாப்பூர் கபாலீசுவரர் கோயிலில் பேண்டும், ஷர்ட்டும் அணிந்த ஒரு நவநாகரிக யுவன் சனீசுவரன் கோயிலை நூற்றெட்டு முறை சுற்றிச் சுற்றி வலம் வந்து, பக்தி பெருக்கெடுத்தோட, ''சனீசுவரா! உன கிருபையே கிருபை!'' என்று மனமுருகத் தன்னை மறந்து கூவியதைக் கேட்டுப் பல வயோதிகர்கள் அதிசயித்து நின்றனர்.

ராஜரத்தினத்தின் வீட்டில் டெலிபோன் மணி அடித்தது. சிங்காரம் ஓடி வந்து டெலிபோனை எடுத்தான். அவன் செங்கற்பட்டுக்கு 'புக்' செய்திருந்த டிரங்கால் வந்துவிட்டது.

''ஹலோ! சிங்காரம் பேசறேன். எதிராஜ்தானே?''

''ஆமாம்! எதிராஜ்தான் பேசறேன். என்ன விஷயம் சிங்காரம்?'' என்றது செங்கற்பட்டுக் குரல்.

''எதிராஜ்! இங்கே எவ்வளவு தேடியும் நகை இருக்கிற இடம் எனக்குத் தெரியலே. நான் இங்கே வேலைக்குச் சேர்ந்து பதினைஞ்சு நாள் ஆகுது. இன்னும் எத்தனை நாள் தேடறது?''

## மனிதர்களால் சம்பாதிக்கத் தக்கது!



கேள்வி: இரவும் பகலும் சிந்திக்கத் தக்கது எது?

பதில்: ஈசுவரனுடைய பாதாரவிந்தங்களே. ஸம்சாரமல்ல.

கேள்வி: கண்ணிருந்தும் குருடர் யார்?

பதில்: நாஸ்திகர்களான மனிதர்கள்.

கேள்வி: முடவன் யார்?

பதில்: முதிர்ந்த வயதில் தீர்த்த யாத்திரை போகிறவன்.

கேள்வி: முக்கியமான தீர்த்தம் எது?

பதில்: சித்தத்திலிருக்கும் அழுக்கை எது நீக்குகிறதோ, அதுதான்.

கேள்வி: நல்ல புத்தியுடையவனால் சொல்லத்தகாதது எது?

பதில்: பிறரது குற்றமும் அஸத்தியமும்.

கேள்வி: மனிதர்களால் சம்பாதிக்கத்தக்கது எது?

பதில்: கல்வி, செல்வம், வலிமை, புகழ், புண்ணியம் இவை.

கேள்வி: ஸகல குணங்களையும் அழிப்பது எது?

பதில்: லோபம், கருமித்தனம்.

கேள்வி: பகைவன் எவன்?

பதில்: காமம்.

கேள்வி: எந்த சபையை விலக்க வேண்டும்?

பதில்: வயது முதிர்ந்த மந்திரிகள் இல்லாத சபையை.

கேள்வி: இவ்வுலகில் மனிதன் எவ்விஷயத்தில் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்?

பதில்: அரசாங்க சேவை செய்வதில்.

ஸ்ரீமத் ஆதிசங்கரர் அருளிய
ப்ரச்னோத்தர ரத்நமாலிகா.

"இப்ப என்னடா செய்யறது?"

"நான் சொல்றதைக் கவனமாக் கேளு. இங்கே ராஜரத்தினம் டாக்டர் மேகநாதன்னு செங்கல்பட்டு டாக்டருக்குக் கடிதாசு எழுதியிருக்கிறாரு. நான் கடிதாசைத் தபாலிலே போடலே. டாக்டரை ராஜரத்தினமும் பார்த்ததில்லே. அதனாலே நீ டாக்டர் மாதிரி வந்துடு. டாக்டரா வந்தால் இங்கேயே தங்கிடலாம். நீயே நகையைத் தேடிப் பார்க்க வசதியா யிருக்கும்!"

"அப்படியா! உம்... டாக்டர் மேகநாதன்... சரி... டாக்டரை நிச்சயமா அடிச்சுப் போட்டுடறேன். ஆனால் ஒரு வேளை என்னாலே அங்கே வர முடியாட்டி நம்ம ஆளுங்களிலே ஒருத்தனை டாக்டரா அனுப்பறேன். அவனைத் தேடிப் பார்க்கச் சொல்லு."

"புது ஆள் யாரையாவது அனுப்பினா எனக்கு எப்படி அடையாளம் புரியும்?"

"அநேகமா நானே வந்துர்றேன். அப்படி வேறே யாரையாவது அனுப்பினால் அவனை அங்கே வந்தவுடனே மூணு தடவை இருமச் சொல்கிறேன். அதை அடையாளமா வச்சுக்க. அங்கே டாக்டரா வருகிறவன் வந்த உடனே மூணு முறை இருமினால் அவன் நம்ம ஆள்னு தெரிஞ்சுக்க!"

"நீயே வந்துவிடப் பாரேன்!"

"பார்க்கிறேன். ஆனா ஒண்ணு நிச்சயம். அங்கே டாக்டரா வரப்போறது டாக்டர் மேகநாதன் இல்லே. வரப்போறது நானாவது, நம்ம ஆள் எவனாவதுதான்!"

"சரி, எதிராஜ்!"

"ஜாக்கிரதையா நடந்துக்க. அந்த நகையைக் கண்டுபிடிக்காமல் விடக்கூடாது."

டெலிபோன் சம்பாஷணை முடிவடைந்தது. விலைமதிப்புயர்ந்த நகை இருக்குமிடத்தைக் கண்டுபிடித்துக் கிளப்பிச் செல்வதற்காகவே, அந்த வீட்டில் வேலைக்குச் சேர்ந்தான் சிங்காரம் என்பதை அறிய ராஜரத்தினத்துக்கு வாய்ப்புமில்லை; அவ்வளவு சாதுர்யமும் அவருக்கு இல்லை.

ஆனால் எதிலுமே சந்தேகப்படும் அந்தப் பிறவி ராஜரத்தினம், சிங்காரம் கடிதத்தைச் சரியாகத் தபாலில் சேர்ப்பானா என்றும் சந்தேகப்பட்டு, சினிமாவுக்குப் போகும்போது தபாலாபீஸுக்குள் நுழைந்து டாக்டர் மேகநாதனுக்கு "உடனே வரவும்; மிக்க அவசரம்" என்று ஒரு தந்தி அடித்தார். இதைச் சிங்காரம் எப்படி எதிர்பார்த்திருக்க முடியும்? அவர் அம்மாதிரி டாக்டர் மேகநாதனுக்குத் தந்தி கொடுத்தபோது மகள் கிரிஜா, 'சிறிய விஷயத்துக்கு இவ்வளவு அமர்க்களம் வேண்டாம்' என்று தடுத்தாள். ஆனால் ராஜரத்தினமோ செய்வதைத் திருந்தச் செய்ய வேண்டும் என்று கூறித் தந்தியைக் கொடுத்து விட்டு வெளியேறினார்.

இதையறியாத சிங்காரம், "மேகநாதனுக்குக் கடிதாசு போகவில்லை. அதனால் அவருக்கு விஷயமே தெரியாது. எதிராஜ் மிக சௌகரியமாக டாக்டர் மேகநாதனாக எந்தவித தடங்கலுமின்றி வந்து சேரலாம்" என்று தனது திட்டத்தைப் பற்றித் தனக்குத் தானே திருப்திப்பட்டுக் கொண்டிருந்தான்.

டாக்டர் மேகநாதனுக்கு எழுதிய கடிதம் தன் பெட்டியிலேயே ஒட்டிக்கொண்டு வந்திருப்பது தெரியாமல் முத்து, வீட்டில் ரவிக்காகக் காத்துக் கொண்டிருந்தான்.

செங்கற்பட்டிலே ராஜரத்தினத்தின் தந்தியைப் பெற்ற டாக்டர் மேகநாதன் அன்றிரவே சென்னைக்குப் புறப்படுவது என்று தீர்மானித்தார்.

அதே சமயத்தில் எதிராஜ், தானே டாக்டர் மேகநாதனாக ராஜரத்தினம் வீட்டுக்குப் போய்ச் சேருவது என்று முடிவெடுத்தான். அப்போது அவன் மனத்திலே ஒரு சிறிய சந்தேகம் உதயமாயிற்று. அதன் காரணமாக அவன் செய்து கொண்ட தீர்மானத்தை டாக்டர் மேகநாதனுக்கு ஏதாவது இஷிணி தேவதை எடுத்துக் கூறியிருந்தால், அவர் சென்னைக்குப் புறப்படுவாரா என்பதே சந்தேகம்தான்.

இப்படி செங்கற்பட்டிலும், சென்னையிலும் பலவிதத் திட்டங்கள் உருவாகிக் கொண்டிருந்த சமயத்தில்தான் ராஜரத்தினமும் கிரிஜாவும் சினிமா முடிந்து வீட்டுக்குத் திரும்பிக்கொண்டிருந்தார்கள். காரில் வரும்போது ராஜரத்தினம் வாயில் வந்தபடி அந்த சினிமாவைத் திட்டிக்கொண்டிருந்தார். "சுத்தப் பைத்தியக்காரத்தனம். இப்படி ஒரு படமா? எங்கேயாவது இந்த மாதிரி நடக்குமா? வீட்டில் ஒரு வேலைக்காரனும். அவனே திருடனும். எல்லாத்தையும் திருடத் திட்டம் போடறானும்! சுத்தப் பேத்தல்!"

"ஏன்? இந்த மாதிரி வாழ்க்கையிலே நடக்கக் கூடாதா?" என்றாள் கிரிஜா.

"எப்படி நடக்கும்? திருடனையே கொண்டு வந்து எந்த முட்டாளாவது தன் வீட்டிலே வேலைக்கு வைச்சுக்குவானா? அப்படிச் செய்யறவன் வடிகட்டின முட்டாளாகத்தான் இருப்பான்" என்றார் ராஜரத்தினம். சில சமயங்களில் தன்னையறியாமலே, மனிதன்தான் யார் என்பதை உணர்ந்து கொள்கிறான். (தொடரும்)

# அடையாற்றிலே ஓர் அறிவாலயம்



பெரிய மரப்பட்டைகளில் உருகிய அரக்கைக் கொண்டு எழுதப்பட்ட பௌத்த தர்மச் சுவடிகள்

"பள்ளிக்கூடம் திறந்து, புதுப் புத்தகங்கள் வாங்கி முழுசாக இன்னும் மூன்று வாரங்கள் கூட ஆகவில்லை. அதற்குள் கணக்குப் புத்தகத்தை இப்படிக் கந்தல் கந்தலாக ஆக்கிக் கொண்டு வந்திருக்கிறாயே?" என்ற என் மனைவியின் கேள்வியும், "நான் என்னம்மா பண்ணறது? அந்தப் புத்தகத்தை அடிக்கடி உபயோகிக்க வேண்டியிருக்கிறது. பேப்பரும் ரொம்ப மட்டம். ஒட்டித் தொலைக்கிறேன். கொஞ்சம் சோற்றுப் பசை கொடு!" என்று பத்தாம் வகுப்புப் படிக்கும் என் புத்திரி ரத்தினத்தின் பதிலும் காலைப் பத்திரிகையில் கவனத்தைச் செலுத்திக் கொண்டிருந்த என் செவிகளில் ரேடியோ இசையையும் மீறிக் கொண்டு விழுந்தது.

"அடையாறு லைப்ரரிக்குக் கொண்டு போ அந்தப் புத்தகத்தை! ரொம்ப ஜோராக ஒட்டிப் புதுசு மாதிரி ஆக்கிக் கொடுத்து விடுவார்கள்!" என்று அமர்ந்திருந்த இடத்திலிருந்தே குரல் கொடுத்தேன்.

ரேடியோவின் மென்னியைப் பிடித்து நிறுத்திவிட்டு என் மனைவி கோபத்துடன் என் முன் வந்து நின்றாள். "நன்றாக இருக்கிறது உங்கள் பேச்சு! அடையாறுக்குப் போய்த் திரும்புகிற பஸ் சார்ஜுக்குப் புதுப் புத்தகமே வாங்கி விடலாம்" என்று பொருளாதார ரீதியில் ஆரம்பித்தாள்.

"அட, நீ ஒண்ணு! நான் வேடிக்கைக்கல்லவா சொன்னேன்! இந்த மாதிரி பாட புத்தகங்களைச் சரிபண்ணவா அங்கே இருப்பவர்கள் சிரமம் எடுத்துக் கொள்வார்கள்? பல நூற்றாண்டுகளுக்கு முன்னாலே அச்சாகி, கிடைப்பதற்கரிதான பழைய புத்தகங்கள், கையெழுத்துப் பிரதிகள் முதலியவற்றை மேலும் சிதிலமடைய விடாமல் வருங் காலத்துக்குப் பாதுகாத்து வைக்கப் பக்குவமாக ஒட்டி வெட்டி வைக்க அவர்கள் கவனம் எடுத்துக் கொள்கிறார்கள். அஸிடேட்பாயில் என்னும் — ஒரு வகை 'டிஷ்யூ' காகிதத்தை, கண்ணாடி போன்ற காகிதத்தை அமெரிக்காவிலிருந்தும், ஜெர்மனியிலிருந்தும் லைப்ரரி அங்கத்தினர்களின் அன்பளிப்பாகப் பெற்று 'அஸிடோன்' என்னும் திரவத்



∧ சிதிலமடைந்த பழைய புத்தகத்தின் பக்கங்களைக் கண்ணாடித் தாள் உதவியுடன் ஒட்டிச் சரி செய்கிறார்கள்.

★

சுமார் அறுநூறு ஆண்டுகளுக்கு முன் எழுதப்பட்டதாகக் கருதப்படும் குர்ரான் V கையெழுத்துப் பிரதி.



தின் உதவியினால், அப்பளமாய்ப் பப்படமாய் நொறுங்கிப் போயிருக்கும் பழைய விலை மதிப்பற்ற புத்தகங்களின் தாளை இணைத்து அவைகளுக்கு மறு வாழ்வு அளிக்கிறார்கள்! அதை நினைத்துக் கொண்டு நான் சொன்னேன்'' என்றேன்.

''அடையாறு லைப்ரரியிலே அத்தனையும் அன்னிபெஸண்ட் எழுதிய புத்தகங்களும் தியாசபி சம்பந்தமான புத்தகங்களும்தானே இருக்கும்?'' என்றாள் என் மனைவி.

''சரிதான் போ! உன்னைப் போலத்தான் இந்தப் பட்டினத்திலே ரொம்பப் பேர் நினைத்துக் கொண்டு அந்த வாசகசாலையின் பயனை அனுபவிக்காமல் விட்டுவிடுகிறார்கள். மனுஸ்மிருதி, மார்க்கஸ் அரேலியஸிலிருந்து ஆரம்பித்து, நவீன இலக்கியங்கள் வரை லட்சம் புத்தகங்கள் அங்கே இருக்கின்றன. லத்தீன், ஃபிரெஞ்சு, ஆங்கில மொழிப் புத்தகங்களுக்கு ஈடாக, சயாமீஸ், பாலி, பெர்ஸியன், சீன மொழிகளிலும், தர்மம், கலை, இலக்கியப் புத்தகங்கள், பாரதத்தில் வேறு எங்கும் காண முடியாத பல புத்த



ஓலைச்சுவடிகள் நவீன ரசாயன முறையில் புதுப்பிக்கப்பட்டுத் தனிப் பகுதியாக அடுக்கி வைக்கப்பட்டிருக்கின்றன

கங்கள் இங்கே இருக்கின்றன. அந்தப் புத்தகங்களையெல்லாம் பார்த்த போது, ''அடடா! நமக்கு இந்த மொழிகளெல்லாம் தெரியாமல் இருக்கின்றனவே' என்ற ஏக்கம்தான் தோன்றியது. அத்தனை புத்தகங்கள்! அத்தனை விஷயச் சிறப்புக்கள்...''

என்னை அவன் முடிக்கவிடவில்லை. ''உங்களுக்குத்தான் புத்தகத்தைப் பார்த்தாலே பசி, தாகம் தோன்றாதே!'' என்று முத்தாய்ப்பு வைத்துவிட்டு அவன் தன் வேலையைக் கவனிக்கச் சென்றுவிட்டான். ஆனால் என் நினைவோ, மீண்டும் அடையாறு லைப்ரரிக்குள் போய்ப் புகுந்து கொண்டு விட்டது.



∧ வாசகசாலையின் ஒரு பகுதி

★ V 'சாரதா லிபி'யில் வண்ணப் படங்களுடன் பதிப்பிக்கப்பட்ட பழங்கால தோத்திரப் புத்தகம்



தியாசாபிகல் சொசைட்டியை ஆரம்பித்து வைத்து அதன் முதல் தலைவராகவும் இருந்த கர்னல் ஹென்றி ஸ்டீல் ஆல்காட் என்பவர், மேலை நாட்டு, கீழை நாட்டு மத, வேதாந்த இலக்கிய விஷயங்களை ஒன்றோடொன்று ஒப்பிட்டுப் பார்த்து ஆராய்ச்சி நடத்தும் விஷயத்தில் ஆர்வம் கொண்டவர். தம் நோக்கத்துக்கு உருவம் கொடுக்கும் வகையில் 1886ம் ஆண்டில் சுமார் இருநூறு ஓலைச் சுவடிகள், புத்தகங்கள் கொண்ட ஒரு சிறிய புத்தகசாலையை தியாசாபிகல் சொசைட்டியின் ஒரு பகுதியாக நிறுவினார்.

இப்போது எண்பத்தாறு ஆண்டுகளுக்கப்பால் இங்கே சேர்ந்திருக்கும் சுவடிகள், புத்தகங்களின் எண்ணிக்கை என்ன தெரியுமா? சுமார் பதினேழாயிரம் சுவடிகள், கையெழுத்துப் பிரதிகளும், லட்சம் புத்தகங்களும் சேர்ந்திருக்கின்றன. இத்தனை ஆண்டுகளாக சொஸைட்டியின் பழைய கட்டிடப் பகுதியி

லேயே வளர்ந்து வந்த இந்தப் புத்தகசாலை சமீபத்தில் அதற்கென்று அருகிலேயே உருவாக்கப்பட்ட நவீன பாணி கட்டிடத்துக்கு இடம் மாறி யிருக்கிறது. வாசகசாலையின் நிர்வாகியாகப் பணியாற்றும் திருமதி சீதா நீலகண்டன், ஆர்வத்துடனும், உற்சாகத்துடனும் புத்தகசாலையின் பல பகுதிகளுக்கு அழைத்துச் சென்று ஆங்காங்கு இருக்கும் புத்தகங்களின் அருமை பெருமைகளை விளக்கினார். அவர் பல ஆண்டு காலம் பெசன்ட் உயர்நிலைப் பள்ளியில் ஆசிரியையாக இருந்து குழந்தைகளிடம் அன்பு காட்டியே பழகியவர். அந்த அன்பை இப்போது தம் பார்வையிலிருக்கும் புத்தகப் பொக்கிஷங்களின் மேல் காட்டுகிறார்.

இப்போது இது ஒரு புத்தகசாலை மாத்திரமல்ல! ஓர் ஆராய்ச்சிக் கூடமும் கூட! பல மேலை நாட்டினர் பாரதம் வரும்போது அங்கும் வந்து தங்களுக்கு வேண்டிய பல விஷயங்களைச் சேகரித்துப் போகிறார்கள். ஆனால் சென்னை நகரத்திலுள்ளவர்களுக்குத் தங்கள் ஆராய்ச்சிக்கான விசேஷ சாதனங்கள் இங்கே இருக்கின்றன என்று தெரியாது. இதை உணர்ந்து கொண்டு இந்தப் புத்தகசாலையைப் பயன்படுத்திக் கொள்ளாமல் இருக்கிறார்களே என்றுதான் இதன் நிர்வாகிகள் வேதனைப்படுகிறார்கள். ஆண்டுக்கு ஒரு ரூபாய்தான் அங்கத்தினர் கட்டணம்!

கிழக்கத்தியப் பகுதிகளில் நுழைந்தால் 'புத்த த்ரிபிடகம்' என்னும் பௌத்த சமய நூல்கள், சயாம், பாலி, சீன, பர்மிய மொழிகளில் அணி அணியாக நிற்கின்றன. உலகத்தின் மற்றப் பகுதிகளின் சமயங்களுடன் ஒத்திட்டு விமரிசிக்கும் ஏனைய நூல்களும் ஏராளமாக உள்ளன. சமயம் தவிர, கலை, இலக்கியம், வேதாந்தம் சம்பந்தப்பட்ட புத்தகங்களும் பல மொழிகளில் உண்டு. இதே போல் மேற்கத்தியப் பகுதியும் தனியாக இருக்கிறது. ஸ்வீடன் தேசத்திலுள்ள உபசாலா சர்வ கலாசாலை ஏராளமான புத்தகங்களை இந்த நிறுவனத்துக்கு வழங்கியிருக்கிறது. ஜோசியம் சம்பந்தப்பட்ட விலை உயர்ந்த பல அரிய புத்தகங்களைப் பல மேலை நாட்டு அங்கத்தினர்கள் அன்பளிப்பாக வழங்கி யிருக்கிறார்கள்.

இந்தப் புத்தகசாலையில் உள்ள மிகப் பழைய அச்சுப் புத்தகம், லத்தின் மொழியில் வான சாஸ்திரத்தைப் பற்றி இத்தாலி நாட்டில் 1490ம் ஆண்டில் அச்சான புத்தகம். இதில் வர்ணப் படங்களும் உண்டு.

மிகப் பெரிய புத்தகம் பைபிளின் ஜெர்மானிய மொழிபெயர்ப்பு (மார்ட்டின் லூதர்) 1686ல் நூரென்பர்கில் அச்சிடப்பட்டது.

மிகச் சிறிய புத்தகம், கால் அங்குல அளவுக்கும் குறைவான வடிவத்தில் ஏழு மொழிகளில் அச்சான 'லார்ட்ஸ் பிரேயர்'. மிக அபூர்வமான புத்தகம் சீன மொழியிலான கலைக் களஞ்சியம். இந்தப் புத்தகத்தின் இன்றைய மதிப்பு லட்சம் ரூபாய் பெறுமாம்! சீனாவுக்கு வெளியே காணக் கிடைக்காததாம்!

அறுநூறு ஆண்டுகளுக்கு முன்னால் எழுதப்பட்ட 'புனித குர்ரான்' கையெழுத்துப் பிரதி, பெரிய பெட்டகம் போல் தோற்றமளிக்கும் சீக்கிய 'கிரந்த' புத்தகம், 1785ல் அந்த நாள் கவர்னர் ஜெனரல் வாரன் ஹேஸ்டிங்ஸின் முன்னுரையுடன் வெளியாகியிருக்கும் பகவத்கீதையின் ஆங்கில மொழிபெயர்ப்பு, ஒரே கட்டு ஓலைச் சுவடியில் அடங்கி யிருக்கும் முழு வால்மீகி ராமாயணம் எல்லாமே அபூர்வ விஷயங்கள்தான்!

பாரத கலாசாரத்தில் ஈடுபாடு கொண்டு இந்தியப் பிரஜையாக மாறி சீதா தேவி என்று தன் பெயரையும் மாற்றிக் கொண்டிருக்கும் அமெரிக்க அம்மையார் ஒருவர், இந்தப் புத்தக சாலையில் உள்ள சுவடிகள், புத்தகங்களுக்கு விரிவான ஒரு ஜாபிதா தயாரிக்கும் பணியில் ஈடுபட்டிருக்கிறார். அவருக்குப் பதினேழு மொழிகள் லாகவமாகப் பேசவும் எழுதவும் வருமாம்!

ஆர்க்பிலா என்ற ஸ்பானிஷ் தேசத்தவர் பழைய சுவடிகளையும், புத்தகங்களையும், ரசாயன முறையில் புதுப்பித்துப் பாதுகாக்கும் பணியில் ஈடுபட்டிருக்கிறார்.

புதிய புத்தகங்களை வாங்கும் போதே, அதன் தாள்கள் நாளடைவில் மக்கிப் போகாமல் இருக்க, மைசூரிலிருந்து அவ்வப்போது வரவழைக்கப்படும் அமோனியா காஸ் சிகிச்சை கொடுத்து உள்ளே சேர்க்கிறார்கள். அன்பளிப்பாக வரும் பழைய புத்தகங்களைப் பூச்சிகளைக் கொல்வதற்காக ஃப்யூமிகேஷன் என்ற முறைக்கு உள்ளாக்கிப் பிறகு அடுக்குகிறார்கள்.

காலஞ்சென்ற அருண்டேல் அவர்களுக்குத் துப்பறியும் கதைகள், மர்மக் கதைகள் என்றால் உயிராம்! அவர் சேர்த்து வைத்த அத்தனை மர்மக் கதைகளும், ஒரு பகுதியில் 'ஜம்' என்று வீற்றிருக்கின்றன.

இந்தப் புத்தகசாலையிலிருந்து இதுவரை தொண்ணூற்று ஐந்துக்கு மேற்பட்ட அபூர்வ ஆராய்ச்சிப் புத்தகங்களை வெளியிட்டிருக்கிறார்கள். ஆகமங்கள், உபநிஷதங்கள் எல்லாம் இதில் அடங்குகின்றன.

வெளிநாட்டு இலக்கிய கலாசாரச் சஞ்சிகைகள் நிறைய வருகின்றன. அவைகளின் பழைய பிரதிகளை அழகாக பைண்டு செய்து வைத்திருக்கிறார்கள் !

அன்னிபெஸண்ட் அம்மையாரின் 'நியூ இந்தியா' சஞ்சிகைப் பிரதிகள் ஒரு பக்கம் இருக்கின்றன. அவைகளில் அந்தக் காலத்தில் வெளியான பல விஷயங்களுக்கு இப்போது வெளிநாடுகளில் ஏக 'டிமாண்டா'ம் ! 'தியாசபி' சம்பந்தப்பட்ட புத்தகங்கள் இங்கே வெகு குறைவுதான் !

ஒரு தடவை இந்த வாசக சாலைக்குள் நுழைந்து திரும்பியவர்கள் நிச்சயம் மீண்டும் மீண்டும் அங்கே போவதில் ஆர்வம் காட்டுவார்கள்! ஆனால் அந்த முதல் வாய்ப்பையே இன்னும் பலர் அடையவில்லையே! அறிவு ஆலயமாயிற்றே இது! — **கோமதி ஸ்வாமிநாதன்**

மிடுக்கும் மதிப்பும் கொண்ட 'பிரிஸ்டீஜ்' பத்மநாபன் வீட்டிலும், ஆபீசிலும் கண்டிப் போடு வாழ்ந்தவர். அவரது செல்வங்களோ அதற்கு நேர் எதிர்! மூத்தவன் 'ஹெலன் பெக்ட்' ஹஸ்பெண்டு; இரண்டாம் பிள்ளை ரோடு சுற்றும் 'ரோமியோ'!; அவரது அருமந்தப் புதல்வியோ காலேஜ் என்று சொல்லிக் காதலனை வலைய வருபவள்! 'பிரிஸ்டீஜ்' பத்மநாபன் வேலையிலிருந்தவரை இவர்களது ஆட்டபாட்டங்கள் இரகசியமாக இலை மறைவு காய் மறைவாக இருந்தன. வீட்டுப் பிரச்னையைப் பத்மநாபனின் மனைவி சாவித்திரி சமாளித்துக் கொண்டிருந்தாள்.

''சாவித்திரி! இன்றையிலிருந்து நான் ரிடையர்ட் ஆகிவிட்டேண்டி!'' என்று பிரிஸ்டீஜ் பத்மநாபன் தளர்ந்தபடியே வந்து நொந்த இதயத்திலிருந்து வெளியிட்டார்.

''இதற்குள்ளாகவா?'' என்று ஆச்சரியப்பட்டாள் சாவித்திரி.



''நான் ரிடையர்ட் ஆகவில்லையடி. அவா ஐம்பத்தைஞ்சு வயசாயிடுத்துன்னு சொல்லி என்னை வீட்டுக்கு அனுப்பி வைச்சுட்டா!'' என்று மொழிந்தார் பத்மநாபன்.

அதன்பின் 'பிரிஸ்டீஜ்' பத்மநாபன், 'கௌரவம்' பறிபோவதும் சிறுகள் தலைவிரித்தாடுவதும் தொடர்கின்றன. இவற்றைக் கண்டு பொறுக்காத 'ரிடையர்' ஆன பத்மநாபன் சீறுகிறார். ''என்னிடமிருந்து எல்லாத்தையும் மறைச்சுட்டேயடி! எப்படியோ நடக்கப் போறது. போங்கோ!'' என்று தம் மனைவியிடம் எரிந்து விழுகிறார். ''ஏண்டியம்மா! நீ காலேஜுக்குப் போறது காதலிக் கத்துக்கிறதுக்குத்தானு? இனிமே ஒவ்வொரு பொண்ணையும் கல்யாணம் செய்ஞ்சு வைத்துப் புருஷனோடு காலேஜுக்கு அனுப்பணும்போல இருக்கே!'' என்று 'குத்தல் மொழி' நவில்கிறார்.

'பெத்த மனம் பித்து; பிள்ளை மனம் கல்லு!' 'கோழி மிதிக்கக் குஞ்சு செத்துடாது!' — இப்படிப் பொன்மொழிகளை உதிர்க்கும் பத்மநாபனின் இதயம் நொந்து போய்க் கடைசியில் ஆபரேஷன் நடக்கிறது. திடீரென்று பத்தாயிரம் ரூபாய்ச் சம்பளத்தில் அமெரிக்காவில் உத்தியோகம் கிடைத்த மகிழ்ச்சியான செய்தி வரவே, அவரது நொந்த இதயம் வெடித்து மறைகிறார்!

ஒரு கதாபாத்திரம் — ஐம்பது வயது மனிதனின் நடவடிக்கைகள் — ரிடையரான பிறகு அவரது மன நிலை ஆகியவற்றைச் சிறப்பாகச் சித்திரிக்கச் சிவாஜி கணேசன் தாம் தகுந்த பாத்திரம் என்பதை நிரூபித்துவிட்டார். நடிப்பு அவரிடம் பேசுகிறது என்றால் அது மிகையாகாது.

அவருக்கு உறுதுணையாகச் சாவித்திரி மாமியாக வரும் ஜி. சகுந்தலா தாம் நடிப்பில் தேர்ந்தவர் என்பதை நிரூபிக்கிறார். 'ரிடையர் ஆனவருக்குச் சரியான மனைவி தான் இவர்!'

பஞ்சாமி சாஸ்திரியாக வரும் கே. வி. சீனிவாசன் நடிப்பு கொஞ்சம் 'ஓவ'ரானாலும் பரவாயில்லை.

நாடகம் முழுதும் சிவாஜி கணேசனின் நடிப்பு நம்மை மெய்சிலிர்க்க வைக்




கிறது. 'பிரிஸ்டீஜ்' பத்மநாபனுகச் சக்கைப் போடு போடுகிறார்.

இந்த நாடகத்துக்கு வசனம் எழுதியிருப்பவர் திரு சுந்தரம். டைரக்ட் செய்திருப்பவர் திரு கண்ணன். மேடைக் காட்சிகள் கண்ணுக்கு விருந்தாக அமைந்துள்ளன.

வியட்நாம் வீடு — தலைப்பு அரசியல் பிரச்னையோ என்று குழப்புகிறது. 'வீட்டுப் பிரச்னையே வியட்நாம் வீடு' என்று தெளிவாகத் தெரியும்படி தலைப்பை மாற்றிவிட்டால், அரசியலை மறந்து சற்று நேரம் நிம்மதியாக இருக்க வழியில்லையா என்று ஏங்கும் ரசிகர்களுக்கு பெருமகிழ்ச்சியளிக்கும். மைசூர்ப் பாகு என்றால் அதில் மைசூர் எங்கே என்று யாரும் கேட்பதில்லை அதே போல் வியட்நாம் வீட்டில் வியட்நாம் பிரச்னை எங்கே என்று யாரும் கேட்க மாட்டார்கள் என்ற கருத்தில் இத்தகைய தலைப்புக் கொடுத்திருக்கவேண்டும் என்று கருதுகிறோம். மொத்தத்தில் நல்ல உணர்ச்சிமிக்க குடும்ப நாடகம்.



## பஹூ பேகம் (ஹிந்தி)

'மருமகள்' என்னும் பொருள் தரும் இந்தத் திரையோவியத்துக்கு இஸ்லாமியப் பழக்க வழக்கங்கள் கைகொடுத்து உதவுகின்றன. லக்னோ நவாப் வம்சத்தைப் புறப் படமாகக் கொண்ட இந்தக் கதைக்குத் திரையிட்டு முகமலரை மூடி வைப்பதும், மூடு பல்லக்கில் மணமகளை அழைத்து வருவதும் இயல்பான ஒரு வேகத்தைத் தருகின்றன.

காதலித்தவன் ஒருவன், கரம் பிடிக்க வந்தவன் வேறு ஒருவன் என்று பழஞ்சுவட்டிலே ஓடினாலும், கணவன் வீட்டுக்கு வரும் பல்லக்கில் கதாநாயகி இல்லாமற் போனது சூடு பிடிக்க உதவுகிறது. குடும்ப கௌரவத்தைப் பொத்திப் பாதுகாக்கச் சகோதரனும் சகோதரியும் நாடகமாடுகிறார்கள், மருமகள் வீட்டில் இருப்பதாக. சகோதரிக்குத் திருமணம் செய்ய வேண்டிய கட்டம் வரும் பொழுது, கதாநாயகியே வீட்டுக்கு மருமகளாக வந்து நடிப்பது கதைக்கு நல்லதொரு திருப்பத்தைத் தருகிறது. கதைக்கு முக்கியமான இந்த மூன்று பாத்திரங்களையும் ஏற்றிருப்பவர்கள் அசோக்குமார், மீனாகுமாரி, நாஸ். அசோக் குமார் வீட்டுக்குத் தீ வைத்துக் கொண்டு தம்மையும் மாய்த்துக் கொள்ள முயலும் கட்டம், அந்த நேரத்தில் பிரதீப்குமாரின் உணர்ச்சி மாறுபட்ட நடிப்பு - இவையெல்லாம் தயாரிப்பாளர்களுக்குப் பெருமை சேர்ப்பவைதானே?

ஆரம்பத்திலே அசை போட்டுப் படுத்திருக்கும் கதை, இடையிலே நிமிர்ந்து நிற்க முயல்கிறது. சூடு பிடித்து, நல்ல பெயரை வாங்கி விடுமோ என்று நினைக்கும் வேளையிலே தேய்ந்து படுத்து விடுகிறது. எனவே, 'பஹூ பேக'த்துக்கு வீட்டில் மட்டும் என்ன, ரசிகர்களின் உள்ளத்திலும் இடம் கிடைப்பது சிரம சாத்தியமான காரியம்தான்!

## எதிரிகள் ஜாக்கிரதை!

தலைப்பைப் பார்த்தாலே மர்மக் கதை என்று பச்சைக் குழந்தையும் சொல்லிவிடும். கள்ளக் கடத்தல் கும்பலுக்கு நடுவில் ஒரு போலீஸ் இன்ஸ்பெக்டர் குடும்பம், கடமையையும், கண்ணியத்தையும் இழந்ததாகக் காட்டி, கடைசியில் அந்தக் கடத்தல் கும்பலைப் பிடிக்க அவர் ஆடிய நாடகம் என்பது 'எதிரிகள் ஜாக்கிரதை'யின் கடைசி சஸ்பென்ஸ்! அவருக்குப் பதக்கம் அளித்துக் கௌரவிக்கப்படுகிறது! மனோகர் இன்ஸ்பெக்டராக வந்து நடிப்பதோடு, கள்ளக் கடத்தல் கும்பலின் கோஷ்டியினராகவே மாறி ஆட்டம் போடுகிறார். அவரது மனைவியாக வரும் மணிமாலா குடும்பப் பெண்ணாகவே மாறி இயற்கையாக நடிக்கிறாள். செயற்கை நடிப்புக்கு விஜயலட்சுமி - ரவிசந்திரன் கோஷ்டியினரின் நடனங்கள், காதல் களியாட்டங்கள் இருக்கவே செய்கின்றன.

மர்மக் கதை என்றால், வெறும் அடி, குத்து உதை என்பதில்லாமல் கதைக்கும் முக்கிய இடம் கொடுத்திருக்கிறார்கள், இந்தப் படத்திலே! கடைசிவரை விறுவிறுப்புக் குறையாமல் — சில அநாவசிய நடனங்கள், ஆட்டங்களைத் தவிர — படம் ஓடுகிறது. படப்பிடிப்பும் மாடர்ன் தியேட்டர்ஸின் சிறப்பை நவில்கிறது.

தேங்காய் சீனிவாசன் இன்று ஹாஸ்ய நடிப்பில் முன்னேறி வருகிறார். பாட்டில் உடைத்துப் பிழைப்பை நடத்தி வரும் அவரது நடிப்பு ரசிக்கும்படியாக இருக்கிறது.

'எதிரிகள் ஜாக்கிரதை' — மர்மக் கதை உலகில் ஒரு புதுமையான பாதையில் செல்வதால் நம்மைப் பார்க்கத் தூண்டுகிறது.



# ஆலயம்



பணத்தைவிடக் குணந்தான் பெரிது என்பதைக் கொள்கையாகக் கொண்டவர் ராமலிங்கம்; வெறும் கொள்கையாக மட்டும் அல்லாமல், மிகவும் தீவிரமாக அதைக் கடைப்பிடித்து வந்தார். இதன் காரணமாக அவருக்குப் பல சோதனைகள் ஏற்படுகின்றன; அந்தச் சோதனைகளில் எல்லாம் வெற்றி பெற்ற ராமலிங்கம் கடைசியில் உயிர்த் தியாகமும் புரிந்து விடுகிறார்.

நல்ல மனிதர் ராமலிங்கமாக வரும் சுந்தரராஜன் பாத்திரத்துக்கேற்ற பொறுமையையும், கௌரவத்தையும் பெருந்தன்மையையும் ஏற்றுப் பிரமாதமாக நடித்திருக்கிறார்.

ஒரே ஆபீஸ் கட்டடம், அதே ஆபீஸ் ஊழியர்கள், அதே பிரச்னைகள் என்று மீண்டும் மீண்டும் வந்தாலும் அலுப்புத் தட்டாமல் செய்திருக்கிறார்கள். அதற்குக் காரணம் நாகேஷும், ஏ. கருணாநிதியும்தான் என்று கூறலாம். அவர்கள் இருவரும் ஆபீஸ் பியூன்களாக வருகிறார்கள். அப்பப்பா! என்ன ரகளை! என்ன கலாட்டா! நாகேஷின் நடிப்பு மிக மிக இயல்பாயிருக்கிறது. மனோரமாவின் சட்டைக்காரத் தமிழும், வி. கே. ராமசாமியின் ஹாஸ்ய வெடிகளுமாகச் சேர்ந்து படத்துக்குச் சுவையூட்டுகின்றன. பணக்கார மைனராக வரும் 'சோ'வின் நடிப்பு சோபையாயிருக்கிறது. அவர் சிரிப்பு ஒன்றே போதும்.

கதாநாயகன், கதாநாயகி இருவரும் இல்லாமல், 'டூயட்' பாட்டு இல்லாமல் படம் தயாரிக்க முற்பட்டவர்கள் அந்த ஒரு பாட்டுக்கூட இல்லாமல் செய்திருந்தால் அந்தத் துணிச்சலைப் பாராட்டியிருக்கலாம். அந்த ஒரு பாட்டும் நன்றாயில்லை.

படத்தின் டைரக்டர்கள், திருமலை—மகாலிங்கம். சிறப்பாகச் செய்திருக்கிறார்கள். கதை, வசனம் எழுதியவர் பிலஹரி. திரைக்கதையை அமைத்தவர் டைரக்டர் ஏ. பீம்சிங்.

ராமலிங்கத்தின் மகளாக வரும் வசந்தா சில காட்சிகளில் மட்டுமே வந்தாலும் ஒரு குடும்பப் பெண்ணுக்கேற்ற இயல்பான தோற்றத்துடன் நன்றாய் நடித்திருக்கிறார்.

காலைத் தூக்கி, கையைத் தூக்கி, இடுப்பை வளைத்துப் பெண்ணும் ஆணும் ஆடினால்தான் படம் ஓடும் என்ற எண்ணம் படாதிபதிகளிடையே வலுப்பட்டு வரும் இந்த நாளில் அவ்வகைத்தங்கள் எதுவும் இன்றி, சுத்தமான படமாகத் தயாரிக்கப்பட்டிருக்கும் 'ஆலயம்' துணிந்து புனைந்த சித்திரம்.

---

# பவானி

கண்ணீர் விட விஜயகுமாரி, காதலிக்க விஜயலக்ஷ்மி, சண்டை போட ஜெயசங்கர், கொடுமைப்படுத்த அசோகன், கட்டடக் கலைஞராக வந்து 'காமிக்' தர நாகேஷ், கனிரென்று பேச ராஜம்மாவும் சுந்தரராஜனும்—இவர்களைக் கொண்டு கதை என்ற ஒன்றை உருவாக்கியிருக்கிறார் இயக்குநர் திலகம் கோபாலகிருஷ்ணன். வெற்றிப் படங்களையும் கருத்தான கதைகளையும் அளித்துப் புகழ் பெற்ற இயக்குநர் திலகத்துக்கு இந்தப் பவானி புகழ் தேடித் தரவில்லை. திரு கே. எஸ். ஜி. என்றைக்கோ எழுதிய கதையை இன்றைக்குத் தமிழ் மக்களுக்கு அறிமுகப்படுத்தியிருக்கிறார். பெண்களை ஆசை காட்டி மோசம் செய்யும் அசுர மனங்கொண்ட ஓர் ஆணின் கதை நாடக மேடை பாணியிலேயே போகிறது. பர்மாத் தமிழரும், விவாகரத்து, கருச்சிதைவு ஆகியவைகள் காலத்துக்கேற்பப் புகுத்தப்பட்ட புதுமைகள். மற்றவை எல்லாம் ரொம்பப் பழசு. விவாகத்தினால் விளையும் அல்லலைத் துல்லியமாக விளக்கிச் சிரிப்போடு சிந்திக்கவும் வைக்கிறார் நாகேஷ். ஜெய்சங்கர், விஜயலக்ஷ்மி காதல் ஒரு புது விதம். மகிழு தத்துவ ரீதியில் சிறப்பாக உள்ளது. புடவை கட்டாத — பாண்டணிந்து கட்டிப்பிடித்துக் கவர்ச்சி காட்டும் பெண் சட்டென்று லீலைகள் முடிந்தபின் — 'கல்யாணத்துக்குப் பிறகுதான் அதெல்லாம்' என்று ஒதுங்குவது விந்தையிலும் விந்தை!



முடிவு....? அர்த்தமற்ற முறையில் ஜெய்சங்கர் ஜெயில்வாசியானாலும் நல்லவேளை அந்தக்கால 'நாம் இருவரா'கிப் படத்தை நீதிமன்றக் காட்சிகளுக்கு நீட்டாமல் விட்டார்களே!

பாவம் பவானி, ஓர் அப்பாவிப் பெண்!

# இன்றைய உங்கள் வருமானம் என்ன என்பதல்ல... நாளைய உங்கள் தேவைக்கான சேமிப்பு என்ன என்பதுதான் முக்கியம்!

ASP/UCO-11/66

பணம் சேமிக்கவும், கரண்ட், ஸேவிங்ஸ், பிக்ஸெட்—ரெக்கரிங் டிபாஸிட்டுகள் ஆகிய கணக்குகள் வைத்துக்கொள்ளவுமான எல்லா வசதிகளையும் வழங்குகிறோம்.




தலைமை ஆபீஸ்: கல்கத்தா

# ரஸிகமணியின் கடிதங்கள்

கி.ரா.நா.

28–8–67ல் ரஸிகமணி டி. கே. ஸி. அவர்களின் நினைவு நாள்.

**1961**ம் வருஷம் "ரஸிகமணி டி. கே. ஸி.யின் கடிதங்கள்" புத்தகம் வெளிவந்தது. கடிதங்கள் என்றால் இப்படி யல்லவா இருக்க வேண்டும்; நாமும் எழுதுகிறோமே காயிதங்கள்!' என்று பட்டது எனக்கு.

கடிதங்களை இன்னும் நம்முடைய தமிழ் மக்கள் "நலம்; நலமறிய அவா" என்றே எழுதிக் கொண்டிருக்கிறார்கள். இப்படிக்கொத்த கடிதங்களைப் பற்றி நீதிபதி மகராஜன் அவர்கள் அளித்துள்ள தீர்ப்பு கீழ்க்கண்டவாறு:

"தமிழர்கள் கடிதம் எழுதுவதென்றால் விஷயத்துக்குத்தான் எழுதுவார்கள். 'இவ்விடம் க்ஷேமம், அவ்விடம் க்ஷேமத்துக்குப் பதில் எழுதவும்', 'ஊருக்குச் சௌக்கியமாக வந்து சேர்ந்தேன்', 'புண்ணாக்கு விலை ஏறிக்கொண்டிருக்கிறது. நெல் விலை எப்படி இருக்கிறது?' என்னும் அரிய விஷயங்களைப் பற்றித்தான் எழுதுவார்கள். வந்தவுடனேயே கடிதத்தைக் கிழித்தெறிந்து விடலாம். 'பைண்ட்' செய்து பாதுகாக்க வேண்டிய அவசியமே கிடையாது."

ஆனால் ரஸிகமணியின் கடிதங்கள் யாவுமே 'பைண்ட்' செய்து பாதுகாக்க வேண்டிய கடிதங்களாகும்.

இந்தத் தொகுதியில் வெளிவந்துள்ள கடிதங்கள் யாவும் அநேகமாக ஒரு குறிப்பிட்ட காலகட்டத்தில் உள்ளவை. இது காணாது. ரஸிகமணியின் கடிதங்கள் எல்லாவற்றையுமே சேகரித்து அச்சுக்குக் கொண்டுவந்துவிடவேண்டும். இது அவசியம் செய்து முடிக்க வேண்டிய ஒரு காரியமாகும்.

இங்கே டி. கே. ஸி. அவர்களின் ஒரு கடிதத்தைப் பார்ப்போம்.

இது ஸ்ரீ ஏ. கே. கோபால பிள்ளை அவர்களுக்கு 1–11–46ல் பம்பாயிலிருந்து எழுதிய கடிதத்திலிருந்து ஒரு பகுதி:

"...பம்பாய் நகரம் பார்க்க வேண்டிய நகரம் தான். சென்னைக்கும் இதற்கும் சம்பந்தமே இல்லை. மேல் நாட்டு நகரங்களைப் போல் வகுத்திருக்கிறது. பெருந்தொகையான ஜனங்களை எவ்வளவு சௌகரியப் படுத்த முடியுமோ அவ்வளவு செய்திருக்கிறது. **'மனுஷன் கெட்டிக்காரப் பயல்தான்'** என்று சொல்லும்படியாக இருக்கிறது. மூன்று மாடி வீடுகளும், ஐந்து மாடி வீடுகளுமாகத்தான் இருக்கின்றன. ஒரு மாடியிலேயே மூன்று குடித்தனங்கள் இருக்கின்றன. நாங்கள் இருக்கிற மாடியின் பகுதி சிறிய பகுதிதான். ஆனாலும் பதினாறு நபர்கள் சௌகரியமாகப் பொழுதுபோக்கிக் கொண்டிருக்கிறோம். அறைகளை அப்படிச் சாதுரியமாக அமைத்திருக்கிறது. ஆடவர் நாலு பேர், பெண்டுகள் ஐந்து பேர், வேலையாட்கள் நாலுபேர், **குழந்தைகள் ஆறு – என்னோடும் சேர்த்து.**

"எல்லாக் குழந்தைகளையும் விட, எனக்குத்தான் அதிகப் பாராட்டு. சில வேளைகளில் எதிர்வீட்டுக் குழந்தை – ஒன்பது மாசக் குழந்தை, எனக்குப் போட்டியாக வந்து விடுகிறது. அப்போது ஒருவரும் என்னைக் கவனிக்கிறது இல்லை. தயானந்த சரஸ்வதி என்று அந்தப் பயலுக்குப் பெயர் வைத்துக் கொண்டார்கள், அவனைக் கேட்காமலே தான். அவனுக்கும் கண் என்னைப்போல் இரண்டுதான். கண் இரண்டுதானே ஆனாலும், கண் எங்கே? கண் எங்கே? என்று இருபதினாயிரம் தடவை கேட்கிறார்கள். அவனும் கண்ணைக் கண்ணாலேயே காட்டுவான். சிக்கென்று மூடித் திறந்துதான். அப்படியே வாயைத் திறந்து வாயைக் காட்டுவான். மூக்கையும் ஒரு சுருக்குச் சுருக்கிக் காட்டி விடுவான். எல்லார்க்கும் ஒரு சந்தோஷம். ஒரே ஆனந்த வெறி. எல்லாரும் சேர்ந்து வெறிகொண்டு அடிக்கிற கும்மாளியைப் பார்த்தால்தான் :

"நாய்ப்பூ தாமரைப்பூ
தங்கத்து வீட்டு
செண்பகப் பூ"

என்ற அருமையான பாட்டில் எவ்வளவு உண்மையும், அழகும் இருக்கின்றன என்று தெரிய வரும்.



"Hero Worship" என்றைக்கும் உலகத்தை விட்டுப் போய் விடாது என்று கார்லைல் ஆசிரியருக்குக் கைபிடித்துக் கொடுக்கலாம்.

"எனக்கு எப்படிப் பொழுது போய்க்கொண்டிருக்கிறது மூன்றாவது மாடியில் என்று தெரிகிறதல்லவா?"

பிரசுரம்: பொதிகை மலைப் பதிப்பகம், தென்காசி; விலை: ரூ. 3–00

☐ ஸ்பானிய நாட்டுக்
☐ குட்டிக் கதைகளில்தான் எத்தனை பொருள்
☐ பொதிந்த
☐ கருத்துக்கள் உள்ளன!
☐ படிக்கப் படிக்கச்
☐ சுவையூட்டுகின்றன!



# ஸ்பானியக் குட்டிக் கதைகள்

தொகுப்பு: கு. அழகிரிசாமி



## குடியானவனின் கருணை

ஒரு குடியானவனின் நிலத்தில் பெரியதோர் அத்தி மரம் இருந்தது. அந்த ஊரில் தற்கொலை செய்துகொள்ள விரும்புகிறவர்கள் அந்த மரத்தில் தூக்கிட்டுக்கொண்டு தொங்குவது வழக்கம். இப்படி ஆண்டாண்டு காலமாகத் தீய காரியத்துக்குப் பயன்படுத்தப்பட்டு வந்த அந்த மரத்தை ஒருநாள் வெட்டி ஒழித்துவிட வேண்டும் என்று தீர்மானித்தான் குடியானவன். ஆனால் வெட்டுவதற்கு முன் ஒருவனை ஊருக்குள் அனுப்பி, ''அத்தி மரத்தில் யார் யார் தூக்குப் போட்டுக்கொண்டு சாக விரும்புகிறார்களோ, அவர்களுக்கு இனி மூன்று நாள் அவகாசம்தான் இருக்கிறது. அதற்குள் அவர்கள் ஒரு முடிவுக்கு வந்துவிட வேண்டும். ஏனென்றால் நான்காம் நாள் அந்த மரத்தை வெட்டிவிடப் போவது உறுதி'' என்று தமுக்குப் போட்டு அறிவிக்கச் சொன்னான்!

## பேராசை பெரு நஷ்டம்

இரண்டு நகரவாசிகளும் ஒரு கிராமவாசியும் சேர்ந்து ஸ்தல யாத்திரை கிளம்பினார்கள். அவர்களிடம் கொஞ்சம் மாவு இருந்தது. மெக்காவுக்குப் போய்ச் சேரும் வரை அதை ரொட்டியாகப் பண்ணி மூவரும் சாப்பிட்டுக் கொள்வதென்று தீர்மானித்தார்கள். ஆனால் சில நாட்கள் கழிந்ததும் மாவு மிகவும் குறைந்து விட்டது. ஒரு வேளைக்கு ரொட்டி செய்யத்தான் அது போதுமானதாக இருந்தது. நகரவாசிகள் இருவரும் ரகசியமாகக் கூடிப் பேசினார்கள். ரொட்டி செய்து தாங்கள் மட்டுமே சாப்பிடவும் கிராமவாசியை ஏமாற்றி விடவும் அவர்கள் முடிவு செய்தார்கள்.

''நம்மிடம் மாவு கொஞ்சமாகத்தான் இருக்கிறது. ரொட்டி சுட்டால் ஓர் ஆளுக்குத்தான் சரியாக இருக்கும். அப்படி இருக்கும் போது நாம் மூவரில் யார் அதைச் சாப்பிடுவது? ஒரு காரியம் செய்வோம். ரொட்டி தட்டி அடுப்பில் போட்டுவிட்டு மூவரும் படுத்துத் தூங்குவோம். தூங்கும்போது யார் மிகவும் அபூர்வமான கனவைக் காண்கிறாரோ, அவரே இந்த ரொட்டி முழுவதையும் சாப்பிட்டுக் கொள்ள வேண்டியது'' என்றான் ஒரு நகரவாசி.

''அதுதான் சரியான யோசனை'' என்றான் மற்றொரு நகரவாசி.

இருவரும் ஏதோ சூழ்ச்சி செய்திருக்கிறார்கள் என்று கிராமத்தான் சந்தேகித்தான். ஆனாலும், ''அப்படியே செய்வோம்'' என்று சொன்னான்.

மூவரும் உள்ள மாவையெல்லாம் பிசைந்து ரொட்டி தட்டிப் போட்டுவிட்டு அடுப்பின் பக்கமாகப் படுத்துத் தூங்கினார்கள். நகரவாசிகள் குறட்டை விட்டுத் தூங்கும் வரை கிராமத்தான் காத்திருந்தான். அப்புறம் மெல்ல எழுந்து பாதி வெந்தும் பாதி வேகாமலும் இருக்கும் ரொட்டியை எடுத்துக் கொஞ்சம்கூட மிச்சம் வைக்காமல் அவ்வளவையும் தின்று தீர்த்தான். பிறகு தன்னுடைய இடத்தில் போய்ப் படுத்துக் கண்களை மூடிக் கொண்டான். அப்பொழுது ஒரு நகரத்தான் தூக்கத்திலிருந்து விழித்தான். உடனே மற்றொரு நகரவாசியையும் தட்டி எழுப்பினான்.

''என்ன விஷயம்?'' என்று கேட்டுக் கொண்டே அவன் எழுந்தான்.

''நான் ஓர் அபூர்வமான கனவு கண்டேன். இரண்டு தேவதூதர்கள் வந்து என்னைச்

சுவர்க்க வாசல் வழியாகக் கடவுளிடம் சுமந்து செல்வது போல் கனவு கண்டேன்'' என்றான் முதலாவது நகரவாசி.

உடனே மற்றவன், ''இது ஓர் அபூர்வக் கனவுதான். ஆனால் நான் கண்ட கனவு இதைவிட அபூர்வமானது. இரண்டு தேவ தூதர்கள் வந்து பூமியை இரண்டாகப்பிளந்து அதன் வழியாக என்னை நரகத்துக்குக் கொண்டு சென்றார்கள்'' என்று கூறினான்.

இதையெல்லாம் கேட்டுக் கொண்டு, தூங்குபவனைப் போல் படுத்திருந்த கிராமவாசியை நகரவாசிகள் தட்டி எழுப்பினார்கள். அவன் கண் விழித்து எழுந்ததும், ''நீங்கள் யார்?'' என்று கேட்டான்.

'' தெரியவில்லையா ? உன்னோடு சேர்ந்து யாத்திரை செய்யும் நகரவாசிகள்தான் நாங்கள் என்பது தெரியவில்லையா?'' என்று கேட்டார்கள்.



''நீங்கள் திரும்பி வந்து விட்டீர்களா ?'' என்று கேட்டான் கிராமத்தான்.

''திரும்பி வருவதா? நீ என்ன சொல்கிறாய்?'' என்று அந்த இருவரும் திகைத்துப் போய்க் கேட்டார்கள்.

அதற்குக் கிராமவாசி சொன்னான் : ''நான் ஒரு கனவு கண்டேன். உங்களில் ஒருவரை இரண்டு தேவ தூதர்கள் வந்து, சுவர்க்கத்துக்குக் கொண்டு செல்வதையும், மற்றொருவரை வேறு இரண்டு தேவதூதர்கள் வந்து நரகத்துக்குக் கொண்டு செல்வதையும் கனவில் பார்த்தேன். அந்த இரண்டு இடங்களுக்குச் சென்ற யாரும் இதுவரை திரும்பி வந்ததில்லை. எனவே, நீங்களும் திரும்பி வர மாட்டீர்கள் என்று நினைத்துத் தூக்கத்திலிருந்து எழுந்து ரொட்டி முழுவதையும் நானே சாப்பிட்டு விட்டேன்.''

---

## மூன்று கணவர்கள்

ஒரு பாதுஷாவுக்கு ஒரு மகள் இருந்தாள். அவளை மணந்துகொள்ள ஏககாலத்தில் மூன்று வாலிபர்கள் வந்தார்கள்.

''நீ யாரை மணந்து கொள்ள விரும்புகிறாய்?'' என்று மகளைக் கேட்டார் பாதுஷா.

''மூவரையுமே மணந்து கொள்ள விரும்புகிறேன்'' என்றாள் மகள்.

''அது எப்படி? எந்தப் பெண்ணாவது ஒரே சமயத்தில் மூன்று கணவர்களை மணந்து கொள்ளுவாளா ?'' என்று கேட்டார் பாதுஷா.

மகளோ பிடிவாதமாக, ''மூவரையுமே தான் · நான் மணப்பேன்'' என்று சொல்லிக் கொண்டிருந்தாள்.

பாதுஷா பார்த்தார். வாலிபர்கள் மூவரையும் அழைத்து, ''இன்னும் ஒரு வருஷத்துக்குள் உங்களில் யார் மிகவும் அபூர்வமான ஒரு பொருளைக் கொண்டு வருகிறீர்களோ, அவர்களுக்கே என் மகளை மணம் முடித்துக் கொடுப்பேன்'' என்று சொல்லி அனுப்பினார்.

வாலிபர்கள் மூவரும் அபூர்வமான பொருளைத் தேடி உலகமெல்லாம் சுற்றினார்கள். ஒருவனுக்கு ஒரு சூனியக்காரி ஒரு கண்ணாடியை விலைக்குக் கொடுத்து, ''நீ எதைப் பார்க்க விரும்பினாலும் அதை இந்தக் கண்ணாடியில் பார்க்கலாம்'' என்று சொல்லி அனுப்பினாள்.

அதே சூனியக்காரியை இரண்டாவது வாலிபன் சந்தித்த போது அவனுக்கு ஒரு கம்பளத்தை விலைக்குக் கொடுத்து, ''இந்தக் கம்பளத்தில் ஏறி உட்கார்ந்து கொண்டு நீ எங்கே போக விரும்பினாலும், அங்கே இது உன்னைத் தூக்கிக் கொண்டு செல்லும்'' என்று சொல்லி அனுப்பினாள்.



மூன்றாவது வாலிபனுக்கு அவள் ஒரு கனிம்பை விற்று, அதைப் புதிதாகச் செத்த ஒரு பிணத்தின் உதடுகளில் தடவினால் அது உயிர் பெற்று எழுந்துவிடும் என்று சொல்லி அனுப்பினாள்.

பிறகு மூவரும் ஓரிடத்தில் சந்தித்தார்கள். சூனியக்காரியிடமிருந்து விலைக்கு வாங்கிய பொருள்களை மற்றவர்களுக்குக் காட்டி, அவற்றின் அபார சக்திகளையும் தெரிவித்தார்கள்.

''பாதுஷாவின் மகளை நாம் கண்ணாடியில் பார்ப்போம்'' என்றான் ஒருவன். உடனே எல்லாரும் கண்ணாடியைப் பார்த்தார்கள். அவளும் கண்ணாடியில் தோன்றினாள். ஆனால் சவப் பெட்டியில் கிடத்தப்பட்ட ஒரு பிணமாகவே அவள் தோன்றினாள். மூவரும் துயரத்தில் மூழ்கினார்கள்.

''என்னிடம் உள்ள களிம்பைக் கொண்டு போய் அவள் உதடுகளில் தடவினால் அவள் உயிர் பெற்று எழுந்து விடுவாள்'' என்றான் மூன்றாவது வாலிபன். ''ஆனால் நாம் அவ்வளவு தூரமும் நடந்து போவதற்குள் அவளுடைய உடம்பு புதைக்கப்பட்டு மண்ணுக்கும் இரையாகி விருக்குமே? எலும்புக்கூடுதானே இருக்கும்?'' என்று அவன் வருந்தினான்.

''கவலை வேண்டாம். என் கம்பளத்தில் ஏறி ஒரே நொடியில் அங்கே பறந்து போய் விடலாம் '' என்றான் இரண்டாம் வாலிபன்.

மூவரும் அவ்வண்ணமே பறந்தனர்.

களிம்பைத் தடவிய மாத்திரத்தில் செத்தவள் பிழைத்து விட்டாள். பிழைத்து எழுந்ததுமே, அவள் ''தந்தையே! மூவரையும் நான் மணக்க விரும்பியதுதான் சரியான காரியம் என்று இப்பொழுது தெரிகிறதா?'' என்று கேட்டாள்.



உங்களை நாள் முழுவதும் மனோ உல்லாசத்துடன்
வைக்கக்கூடிய பவுடர்...

# பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்க்

எல்லா காலநிலைகளிலும், நீங்களும் உங்கள் குடும்பத்தில் அனைவரும் தினமும் உபயோகிக்கச் சிறந்தது பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்க். அதை உடம்பில் தூவிக் கொண்டால் அனுபவமாகும் ஆனந்தமே அலாதி. அதன் உள்ளம் கவரும் நறுமணம் உங்களையும், உங்களைச் சூழ்ந்துள்ளவர்களையும் மகிழவைக்கும். வியர்வையை விரைவில் உறிஞ்சும் தன்மை உள்ளதால் வியர்த்துக் கொட்டும் கோடையில் உபயோகிக்க அது விசேஷமானது. பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்க்கை உடம்பில் தூவிக்கொண்டு நாள் முழுவதும் புத்துணர்ச்சியுடனும், மனோ உல்லாசத்துடனும் இருங்கள்... உடலைத் தழுவி நிற்கும் நறுமணத்துடன் திகழுங்கள்!






யாவரும் வாங்கக்கூடிய விலையில்
நறுமணம் கமழும்,
உயர்ரக டால்கம் பவுடர்

சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேட்டட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ.வில் இணைக்கப்பட்டது)

P-5603




# கல்லுக்குள் ஈரம்



## ர.சு.நல்லபெருமாள்

### அத்தியாயம் 33

## பம்பாய் பயணம்

மூன்று மாதங்களாக ரங்கமணிக்கு ஓய்வே இல்லை. திருநெல்வேலியைவிட்டு வேறெங்கும் செல்ல முடியாதபடி பல பொறுப்புகள் அவன் மீது சுமை ஏறின. கடைசியில் ஒருவாறு ஊத்துப்பட்டிக்குப் போக ரங்கமணி ஆயத்தம் செய்து கொண்டிருந்தபோது, அம்பாசமுத்திரத்திலிருந்து தாத்தாவின் கடிதம் வரவே, பரபரப்புடன் அம்பாசமுத்திரத்துக்கு விரைந்தான். கிழவர், தமக்கு உடல்நிலை சரியில்லை என்று எழுதியிருந்தார். பேரனைக் கண்டதும் உடல் தெம்படைந்து விட்டது. தாத்தாவுடன் ஒரு வாரம் தங்கியிருந்தான், ரங்கமணி. தம்முடைய கவலைகளையெல்லாம் அவனிடம் சொல்லித் தீர்த்தார் கிழவர். ரங்கமணியும் வழக்கம் போல் எல்லாவற்றுக்கும் தலையை ஆட்டிவைத்தான். தாத்தா கேட்டார்:

''ஏண்டா! உன் எண்ணத்தைத்தான் எனக்குச் சொல்லேன். மனத்தில் எந்தப் பெண்ணையாவது நினைத்துக் கொண்டிருக்கிறாயா?''

''அப்படியெல்லாம் ஒன்றுமில்லை, தாத்தா! உங்களிடம் சொல்லாமலா எதையும் முடிவு செய்து விடுவேன்?'' என்றான் ரங்கமணி.

''எனக்கு எல்லாம் தெரியுமடா. சிந்துபூந்துறையில் அந்த வீட்டில் இருக்கிறாளே, கிளி மாதிரி ஒரு குழந்தை. நான்தான் பார்த்தேனே, என்னிடம் மறைக்க முடியுமா?''

''யாரைச் சொல்கிறீர்கள்?''

''திரிவேணியைத்தான்.''

''சேச்சே, எனக்கு அந்த அபிப்பிராயமே கிடையாது. அந்த மாதிரி நான் நினைக்கவே இல்லையே!'' என்று படபடப்புடன் கூறினான் ரங்கமணி.

''ஏலே, என்னிடமே ஒளிக்கிறாயே. உன்னுடைய போட்டோவை அந்தக் குழந்தை மேஜையின்மீது கண்ணும் கருத்துமாக வைத்திருக்கிறாளே.''

"பழகின நட்புக்காக போட்டோவை வைத்திருந்தால் நீங்கள் தப்பாக நினைக்கிறீர்களே?" என்றான் பதற்றத்துடன்.

"சரி, அதற்காக நீ ஏன் படபடக்கிறாய்? இப்போது என்ன சொல்லி விட்டேன்? அப்படியே நான் சொன்னால்தான் என்னடா? மூக்கும் முழியுமாகக் கிளிமாதிரி இருக்கிறாளே. சிற்றெறும்பு மாதிரி சுறுசுறு வென்றிருக்கிறாள். நல்ல சமர்த்து. உனக்குப் பொருத்தம்தான். நான் போயிருந்தபோது எவ்வளவு அபிமானத்தோடு எனக்கு உபசாரம் செய்தாள் தெரியுமா? அந்தக் குழந்தை இந்த வீட்டுக்கு வந்தாலே லக்ஷ்மி கடாட்சம் கிடைத்த மாதிரிதான்" என்றார் கிழவர் ஆசையுடன்.

"நான் அப்படி யெல்லாம் நினைக்கவில்லை. அவளை என் ஸ்நேகிதி மாதிரிதான் நினைத்திருக்கிறேன். வேறு எண்ணமே எனக்கில்லை" என்றான் ரங்கமணி, அழுத்தமாக. கிழவர் மிகுந்த ஏமாற்றத்துடன் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டார்.

"இப்படியே காலத்தைக் கடத்தினால் பிறகு கிழவனான பிறகா கல்யாணம் செய்து கொள்வாய்?" என்று எரிச்சலுடன் கேட்டார்.

"கல்யாணம், கல்யாணம், கல்யாணம்... இதுதானா முக்கியம்?" என்று அலுத்துக் கொண்டான் ரங்கமணி.

"இதுவும் முக்கியம் தானடா. அந்தக் காலத்தில் அது அது நடந்தால்தான் நன்றாயிருக்கும்.... உம், என் ஆசை எப்போதுதான் நிறைவேறுமோ?" என்று ஏங்கினார் கிழவர்.

தினமும் இதுமாதிரி தான் கிழவர், அவனை அரித்துக் கொண்டிருந்தார். கிழவரின் பாசத் தவிப்பைக் கண்டு பச்சாதாபப்பட்டுக் கொண்டிருந்தான் ரங்கமணி. தாத்தாவின் ஆசையை நிறைவேற்றாமல் இருக்கிறோமே என்ற நினைவு அவனை வாட்டியது. இந்த மாதிரி மன உளைச்சலோடு இருந்த போது காந்திஜியின் அறிக்கையைப் பத்திரிகையில் படித்தான்—இந்தியாவை விட்டுப் பிரிட்டிஷார் உடனே வெளியேறினால்தான் நலம் என்று காந்தியடிகள் கூறியிருந்தார்.

காந்தியடிகளின் அறிக்கையைப் படித்ததும் ரங்கமணி பரபரப்படைந்தான். நாட்டின் அரசியல் சூழ்நிலையில் பெரிய மாறுதல் ஏற்படப் போகிறது என்று அவனுடைய உள்ளுணர்வு உணர்த்தியது. அவனை உடனே புறப்பட்டு வரும்படி சர்தார் தந்தியடிக்கவே, திருநெல்வேலிக்குப் புறப்பட்டான். கிழவரின் மனம் தவித்தது.

"இனி எப்போதடா வருவாய்?" என்று ஏக்கத்தோடு கேட்டார்.

"திருநெல்வேலிக்குத்தானே போகிறேன்? நினைத்தபோது வந்து விடுவேனே. அடிக்கடி கடிதம் எழுதுகிறேன். வீணாகக் கவலைப் பட்டுக் கொண்டிருக்கிறீர்கள்" என்று சமாதானப்படுத்தினான் ரங்கமணி.

அவன் திருநெல்வேலிக்குத் திரும்பிய போது, சர்தார் சொக்கலிங்கம்பிள்ளை மன அமைதியின்றிருப்பதைக் கண்டான். மகாத்மா காந்தியின் திடீர் மாறுதல், சர்தாருக்குத் திகைப்பையும் கவலையையும் கொடுத்தது.



கிரிப்ஸ் வந்து போன பிறகு மகாத்மாவின் போக்கில் பெரிய மாற்றம் தோன்றியிருந்தது. பகிரங்கப் புரட்சியைப் பற்றி காந்திஜி பேசத் தொடங்கி விட்டார். ஆனால் அந்தப் புரட்சியில் அஹிம்சையையும் கலந்து குழப்பியதுதான் சர்தார் சொக்கலிங்கம் பிள்ளைக்குக் கவலையைக் கொடுத்தது.

வார்தாவிலிருந்து ரங்கமணிக்கு ஒரு நீண்ட கடிதம் எழுதியிருந்தார் மில்லர். அதில் வார்தாவில் காங்கிரஸ் காரியக் கமிட்டி கூடி, ''வெள்ளையனே வெளியேறு'' என்று தீர்மானம் நிறைவேற்றியதையும், அது பற்றி மகாத்மாவிடம் மில்லர் பேட்டி கண்டது பற்றியும் விவரமாக எழுதியிருந்தார். மில்லர் மிகுந்த பரபரப்படைந்திருக்கிறார் என்பது கடிதத்திலிருந்து தெரிந்தது.

அவர் எழுதியிருந்தார் :

''........எனக்கு ஒரே திகைப்பாயிருக்கிறது. இது ஒரு மாபெரும் செயல். இதுவரை காணாத ஒரு செயலை இந்தியா சாதிக்கப் போகிறது என்று நினைக்கிறேன். அந்தச் செயல் எப்படி இருக்கும், அதன் தன்மை என்ன, எப்படி முடியும் என்பதெல்லாம் புதிராகவே இருக்கின்றன.



காந்திக்குக்கூட இந்த விஷயத்தில் தெளிவில்லை. ஏதோ பகிரங்கமான எதிர்ப்பு நடவடிக்கை எடுக்க முடிவு செய்து விட்டார். ஆனால் எவ்விதம் அதைச் சாதிப்பது என்பது பற்றிய திட்டம் ஒன்றுமே அவரிடம் இல்லை! எதிர்காலம்! ஒரே இருளாகத் தோன்றுகிறது. இது பற்றிக் காங்கிரஸ் கமிட்டி ஆகஸ்டு மாதம் பம்பாயில் கூடித் தீர்மானிக்கும். உங்களை பம்பாயில் கட்டாயம் சந்திப்பேன் என்று நம்புகிறேன்.''

மில்லரின் கடிதத்தைச் சர்தாரிடம் கொடுத்தான், ரங்கமணி. அதைப் படித்துவிட்டுச் சர்தார் சொக்கலிங்கம் பிள்ளை மேலும் குழம்பினார். ''இந்த அமெரிக்க நிருபரின் சந்தேகம் நியாயமானதுதான்'' என்றார்.

இரவு கபேச்சை அச்சகத்தில் எல்லாரும் கூடியிருந்த போது சர்தார் சொன்னார் : ''அலகாபாத்தில் கூடிய காங்கிரஸ் காரியக் கமிட்டியின் தீர்மானமும் ஒரே குழப்பமாயிருக்கிறது. ஜப்பான் மூலமாக இந்தியாவுக்குச் சுதந்திரம் கிடைப்பதைக்கூட காங்கிரஸ்காரர்கள் எதிர்க்கிறார்களே. ஜப்பானில் பயிற்சி பெறும் இந்திய தேசிய ராணுவத்தின் முயற்சிகள் அனைத்தும் வீணாவதா?''

'' 'வெள்ளையனே வெளியேறு' என்று மகாத்மா துணிந்து ஆரவாரம் செய்துவிட்டார். ஆனால் வெள்ளையனைச் சாத்வீக முறையில் வெளியேற்றுவதாகவும், அதுவே ஒரு பகிரங்கப் புரட்சி என்றும் பறைசாற்றுவது தானே குழப்பமாயிருக்கிறது'' என்றான் காசிலிங்கம் எரிச்சலுடன்.

''அப்படியே ஒரு புரட்சி தோன்றுவதாயிருந்தால், மகாத்மா நினைக்கிறபடி அதில் துளிக்கூட அஹிம்சையை எதிர்பார்க்க முடியாது. புலி, புல்லைத் தின்ன முடியுமா?'' என்றான் சோமு.

''ராணுவ முறையில் நாம் ஒன்றாக இணைந்து கட்டுப்பாடுடன் எதிர்த்தால்தான் வெள்ளையனைத் துரத்த முடியுமே தவிர, இந்த மாதிரி வேடிக்கையான புரட்சியால் வெள்ளையனை ஓர் அங்குலம்கூட நகர்த்த முடியாது. புரட்சியைத் துப்பாக்கி முனையில் நசுக்கிவிடுவான்'' என்றார் சர்தார்.

''இந்திய தேசிய ராணுவம் இந்தியாவுக்குள் நுழைவதையும் காங்கிரஸ் கமிட்டி ஏற்கவில்லையே!'' என்றான் ரங்கமணி.

''ஏற்கா விட்டால் என்ன? இந்திய தேசிய ராணுவம் நுழையும்போது நாமும் ஆயத்தமாக இருந்தால் ஒரு நொடியில் நாடு சுதந்திரம் அடைந்து விடும். பிறகு வேண்டுமானால் காந்தியும் காங்கிரஸ் கமிட்டியும்

எதுவும் செய்து கொள்ளட்டுமே. சுபாஷ் சந்திர போஸும், ராஷ்பிஹாரியும் ஒரு நல்ல திட்டத்தை உருவாக்கிக் கொண்டிருக்கும் இந்தச் சமயத்தில் காந்தி திடீரென்று இந்த மாதிரி மாறியிருக்க வேண்டாம்'' என்றார் சர்தார் மிகுந்த வருத்தத்துடன்.

''அவர்கள் நடத்தப் போகும் புரட்சி எந்த விதமாக அமைய வேண்டும் என்பது பற்றித் திட்டவட்டமாகக் கமிட்டியில் உள்ளவர்களுக்கே தெரியவில்லையே! மகாத்மாவுக்கே இது பற்றித் தெளிவில்லை. புரட்சித் தீர்மானம் நிறைவேறியிருக்கிறது. அவ்வளவுதான்!'' என்றான் சோமு கேலிச் சிரிப்புடன்.

''இது வீணாக மக்களைப் பலி கொடுக்கும் திட்டந்தான். இதனால் இந்தியாவுக்கு எவ்வித நன்மையும் கிடைத்து விடப் போவதில்லை. மேலும் ஒரு புரட்சியை நடத்தி வெற்றி பெறும் சூழ்நிலையிலும் இந்நாட்டு மக்கள் இல்லை. பிரிட்டிஷாரின் அடக்குமுறையால் மக்கள் மடியப் போகிறார்கள். நாட்டிலும் பெரிய குழப்பம் ஏற்படப் போகிறது. பெருந்தீயை காந்தி மூட்டி விட்டார். அது எப்படிப் போய் முடியுமோ, தெரியவில்லை'' என்று மன வேதனையுடன் சொன்னார் சர்தார். பிறகு சொன்னார்: ''எதற்கும் நாம் விழிப்புடனிருக்க வேண்டும். எந்தச் சமயத்திலும் எதையும் முழு ஆற்றலுடன் சாதிக்கத் தயாராக இருக்க வேண்டும். நமக்கு இது ஒரு சோதனைக் காலம்.''

இரவு அச்சகத்திலிருந்து எல்லாரும் பிரிந்து சென்றபோது எல்லாருடைய மனமும் குழம்பிக் கிடந்தது. இரண்டு வாரங்களுக்குப் பிறகு சர்தாருக்குத் தில்லியிலிருந்து இரகசியத் தகவல் கிடைத்தது. ரேடியோ ஒலிபரப்பியின் பாக்கிக் கருவிகளை பம்பாயில் ஆகஸ்டு மாதத்தின் முதல் வாரத்தில் பெற்றுக் கொள்ளலாம் என்று ரவீந்திரசென் குப்தா தகவல் கொடுத்தார். கருவிகளைப் பெற ரங்கமணியையே மீண்டும் அனுப்புவது என்று எல்லாரும் ஏகமனதாக முடிவு செய்தார்கள்.

ரங்கமணி பம்பாய்க்குப் போகப் போகிறான் என்பதை அறிந்து அத்தை மனம் தவித்தாள். பம்பாய்க்குப் புறப்படுவதற்கு இரண்டு நாட்களுக்குமுன் ரங்கமணி சாப்பிட்டுக் கொண்டிருந்தபோது அத்தை சொன்னாள்: ''வேறு யாரையாவது பம்பாய்க்கு அனுப்பச் சொல்லேன்.''

''என்னைத்தான் போகும்படி சொல்லியிருக்கிறார்கள். இனிமேல் என் பிரயாணத்தை மாற்றவும் முடியாது. நான் வருவதாக ஏற்கனவே தகவல் கொடுத்து, மற்ற ஏற்பாடுகளும் செய்தாகி விட்டதே. ஒரு வாரத்தில் திரும்பி விடுவேன்'' என்றான் ரங்கமணி.

''என்னமோ அப்பா! எனக்குக் கொஞ்ச நாட்களாக நெஞ்சு படபடவென்கிறது. இந்த மாதிரியான பரபரப்பையெல்லாம் விட்டு விலகி அமைதியாக எங்காவது போக வேண்டும் என்று நினைத்தேன். அதுவும் முடியவில்லை. நீயாவது இங்கிருக்கிறாயே என்று சற்று ஆறுதலாக இருந்தேன்.''

''நான் பம்பாயிலிருந்து வந்ததும் உங்களைத் திருச்செந்தூருக்கு அழைத்துச் செல்கிறேன். அங்கு சண்முகவிலாசத்தில் நீங்கள் கவலைகளையெல்லாம் மறந்து நிம்மதியாக இருக்கலாம். நானும் உங்களோடு துணைக்கு இருக்கிறேன்'' என்றான் ரங்கமணி மிகுந்த பாசத்துடன்.

''எனக்கும் அதுதான் ஆசை. ஆனால் நீதான் இப்படிப் பறக்கப் பறக்க ஓடிக் கொண்டிருக்கிறாயே!'' என்றாள் அத்தை. அவள் கண்களில் நீர் முட்டியது. அதைக் கண்டு விட்ட ரங்கமணியின் மனம் துடித்தது.

அன்று இரவு அவனும் தூங்கவே முடியவில்லை. அத்தையின் நீர் நிறைந்த கண்கள் தாம் நினைவில் புகுந்து துளைத்துக் கொண்டிருந்தன. தாயின் பாசத்தை அறியாத அவனுக்கு அத்தைதான் அதை உணர்த்தினாள். பரபரப்பும், நெருக்கடியும் நிறைந்த வெளியுலக அலுப்பினால் சோர்ந்துவிட்ட போதெல்லாம் அத்தையின் கனிவான பேச்சும், அன்புடன் அவள் ஊட்டிய உணவும் தான் அவனுக்கு இதம் அளித்தன. அவளுடைய பாசத்தை உணர்ந்து அனுபவித்தான்.

அத்தையின் வாழ்வில் எவ்வளவோ கசப்புக்கள் நிறைந்திருந்தன. அதில் திரிவேணியும் ரங்கமணியும்தாம் தேன்துளிகளாக விளங்கினார்கள். இதை ரங்கமணி நன்கு உணர்ந்திருந்தான். அத்தைக்கு வயது நாற்பதுக்குள்தான் இருக்கும் என்றாலும் அறுபது வயதுக்குள்ள முதுமை அவளை நெருங்கி விட்டது. அவளைச் சூழ்ந்த வேதனைகள் அவளைச் சருகாக்கி விட்டன.

அவள் விருப்பத்தைப் பூர்த்தி செய்ய முடியாமல் இருப்பதை எண்ணி மனம் புழுங்கினான். பம்பாய்க்குப் போய்விட்டு வந்ததும் பத்து நாட்களாவது அத்தையை அழைத்துக் கொண்டு, திருச்செந்தூர் சென்று நிம்மதியாக இருக்க வேண்டும் என்று முடிவு செய்து கொண்டான்.

அத்தையைப் போல்தான் அவனுடைய ஊரில் தாத்தா, அவனுக்காகப் பாசத்தைச் சுமந்து கொண்டு தவிக்கிறார். அவரையும் திருச்செந்தூருக்கு அழைத்துச் செல்ல வேண்டும் என்று நினைத்துக் கொண்டான்.

''புரட்சி வீரருக்குத் தூக்கமில்லாமல் அப்படி என்ன சிந்தனையோ?'' என்ற குரலைக் கேட்டுத் திரும்பினான். திரிவேணி சன்னல் வழியாக உள்ளே எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தாள். ரங்கமணி பரபரப்புடன் கண்களில் தேங்கியிருந்த கண்ணீரைத் துடைத்துக் கொண்டு எழுந்து வந்து அறைக் கதவைத் திறந்தான்.

''உள்ளே வரலாமா?'' என்றாள் திரிவேணி.

''தாராளமாக.''

திரிவேணி அறைக்குள் நுழைந்து சோபாவில் அமர்ந்தாள். அவளுக்கு எதிரே கட்டிலில் அமர்ந்தான் ரங்கமணி.

''ஏன் அழுதீர்கள்?'' என்று திரிவேணி கேட்டாள்.

இந்தக் கேள்வியை ரங்கமணி எதிர்பார்க்கவில்லை. திகைத்தான்.

''இல்லையே!'' என்று கூறிக் கொண்டே கண்களைத் துடைத்தான்.

''இல்லாமலா இப்போதும் கண்களைத் துடைக்கிறீர்கள்; கோழி திருடியவன் கதை மாதிரி'' என்றாள் திரிவேணி.

''சும்மாத்தான் துடைத்தேன்.''

ஈடிணையற்ற தென்புக்கு...வெற்றிகரமான துணை,

சக்திசெறிந்த

க்ளூகோ பிஸ்கெட்

க்ளுக்கோ—கோதுமை, பால், சர்க்கரை, ஆகியவற்றின்
வளமைச் சத்துக்கள் யாவுமடங்கிய பிஸ்கெட்.




பார்லேயின் க்ளூகோ பிஸ்கெட்

பாரதநாட்டின் உன்னதமான விற்பனை உடைய பிஸ்கெட்

everest/356/PP/TM

''மறைக்காதீர்கள். சன்னல் வழியாகப் பார்த்தபோது உங்கள் கண்களிலிருந்து கண்ணீர் பெருகி வழிந்ததைக் கண்டேனே. உங்கள் மனசு சரியில்லே. என்னிடம் சொல்லக் கூடாதா?.... சொல்லக் கூடாத விஷயமென்றால் வேண்டாம்.''

''ஒன்றுமில்லே.... அத்தையை நினைத்துக் கொண்டேன். பாவம், அவர்கள் மனசு சரியில்லே. எங்கேயாவது நிம்மதியாகச் சில நாட்கள் போயிருந்தால் மனசுக்குத் தெம்பாயிருக்கும்.''

''அத்தையை நினைத்தால் எனக்கும் கண்ணீர் வந்து விடும். எங்காவது அழைத்துக் கொண்டு போக வேண்டியதுதான்.''

''நான் பம்பாயிலிருந்து திரும்பியதும் அத்தையைத் திருச்செந்தூருக்கு அழைத்துச் செல்லப் போகிறேன்'' என்றான் ரங்கமணி உற்சாகத்துடன்.

''நானும் வருவேன்'' என்றாள் திரிவேணி.

''நீ எதற்கு? அங்கும் வந்து உன்னுடைய அஹிம்ஸைப் பிரசாரத்தைக் கடற்கரை மணலில் செய்யவா ?''

''ஏன், நீங்கள் கடற்கரையில் வெடி வைக்காமல் இருந்தால் போதாதா?''

''நீ திருச்செந்தூருக்கு வருவதாயிருந்தால் ஒரு நிபந்தனை.''

''என்ன....?'' என்று கேட்டுவிட்டு ஒரு குழந்தையைப் போல் முகத்தைச் சுளித்துக் கொண்டு கைகளில் முகத்தை ஊன்றிய வாறு அவனை உற்றுப் பார்த்தாள் திரிவேணி. அவளுடைய குழந்தைத்தனத்தைக் கண்டு ரசித்தான் ரங்கமணி.

''அங்கு வந்து எது பற்றியும் தர்க்கம் செய்யக் கூடாது'' என்றான்.

''இந்த மாதிரி கட்டுப்பாடெல்லாம் எனக்குப் பிடிக்காது'' என்று கூறித் திரிவேணி முகத்தைச் சுளித்துக் கொண்டாள்.

''நான் சொல்வதைக் கேட்காத இந்த மாதிரி ஆட்களைக் கண்டால் எனக்குப் பிடிக்காது'' என்று கூறிப் பதிலுக்கு முகத்தைச் சுளித்தான் ரங்கமணி. பிறகு இருவரும் வாய்விட்டுச் சிரித்தார்கள். இவர்களுடைய சிரிப்பைக் கேட்டு வாசலில் படுத்திருந்த ஜிம்மி, ஒன்றும் புரியாமல் தலையைத் தூக்கிப் பார்த்துவிட்டு மீண்டும் படுத்துக்கொண்டது.

''அத்தைக்காக உங்கள் மனம் இவ்வளவு நெகிழ்கிறதே, உண்மையில் உங்கள் மனம் பயங்கரத்தை நாடவில்லே, அஹிம்ஸையில் தான் ஒன்டுகிறது'' என்றாள் திரிவேணி.

''ஒருவர் மீது அன்பு கொண்டால் உடனே அஹிம்ஸாவாதி என்று அர்த்தமா? தன்னுடைய குட்டி மீது பாசம் வைப்பதால் புலி சாதுவாகி விடுமா ?'' என்றான் ரங்கமணி.

''தர்க்கத்துக்கு நீங்கள் இப்படிச் சொல்லி விட்டால் போதுமா? உண்மையில் இரட்டை வாழ்வு வாழ்கிறீர்கள்.''

''எப்படி?''

''உங்கள் உள்ளத்தில் அஹிம்ஸைதான் குடிகொண்டிருக்கிறது. ஆனால் வேண்டுமென்றே நீங்கள் தீவிரவாதியாகக் காட்டிக் கொள்கிறீர்கள்.''

''எனக்கு இப்படிப் பொய் வாழ்வு வாழத் தெரியாது. எனக்குத் தெரிந்த ஒருவர், அடிக்கடி சொல்லுவார், 'பொய்யாக நூறு வருஷங்கள் வாழ்வதைவிட, உண்மையாக ஒரு நாள் வாழ்ந்தாலும் போதும், அதில் தான் ஆத்ம திருப்தி கிடைக்கும்' என்று.''

''உண்மையிலேயே உங்களுக்கு அஹிம்ஸையில் நம்பிக்கை இல்லே என்றால், இயேசுநாதரின் பொம்மையை ஏன் பத்திரமாக வைத்திருக்கிறீர்கள்? அவர் தம்மைச் சிலுவையில் அறைந்தவர்களிடமே கருணை காட்டியவராயிற்றே ?''

''மகாத்மா காந்தி பல வருஷங்களுக்கு முன் இந்த ஊருக்கு வந்திருந்தபோது எனக்குக் கொடுத்த பொம்மை இது.''

''மகாத்மாவை முன்பே சந்தித்திருக்கிறீர்களா? அப்படி இருந்துமா நீங்கள் இப்படி இருக்கிறீர்கள்? நீங்கள் நல்ல பாதையில் செல்ல வேண்டும் என்ற ஆசையில்தான் மகாத்மா சிலுவைப் பொம்மையை உங்களிடம் கொடுத்திருக்கிறார்.''

''அந்தப் பொம்மை என்னிடம் இருப்பதால் என்னை அஹிம்ஸாவாதி என்று நினைக்கத் தூண்டுமேயானால் அந்தப் பொம்மையைத் தூர எறிந்து விடுகிறேன்.''

''ஐயையோ! அப்படி ஒன்றும் செய்து விடாதீர்கள். உங்களுக்கும் மகாத்மாவுக்கும் அந்தப் பொம்மைதான் தொடர்பை ஏற்படுத்தி யிருக்கிறது. அதையும் தொலைத்து விடாதீர்கள்!'' என்று கூறிவிட்டு எழுந்தாள் திரிவேணி.



**ஒரு டம்ளர் காப்பிக்கு நாலு சொட்டுப் பால்!**

டைரோஜ் கொலாபாவாலா என்பவர் லாப்லாண்டுக்குப் போயிருந்தார். அங்கு, ரெயின் டீர் என்ற மிகப் பெரிய மான்களைப் பார்த்தார். அந்தப் பிரதேச மக்கள் அந்த மான்களின் பாலைத்தான் கறந்து அருந்துவர். டைரோஜ் அந்த மானின் பாலைக் கறக்க நினைத்தார். ஒரு பெரிய ஜாடியை எடுத்துக் கொண்டு கிளம்பினார். லாப் லாந்தியர் சிலர் இதைக் கண்டு சிரித்துவிட்டு, ஒரு சிறிய கிண்ணத்தைக் கொடுத்தார்கள்.

''இத்தனை பெரிய மான் ஒரு சிறு கிண்ணம் அளவுக்குத்தான் பால் கொடுக்குமா என்ன?'' இப்படி வியந்து கேட்டார் டைரோஜ். பால் கறந்துகொண்டு வந்தார். அப்புறம்தான் புரிந்தது அளவு சிறிதாக இருந்தாலும் பால் ரொம்பவும் கெட்டியானது என்று. ஒரு டம்ளர் காப்பிக்கு நாலு சொட்டுப் பால் விட்டால் போதுமானதாக இருந்தது!

—வி. எஸ். ஸாக்டன்கர்

''வெகு நேரமாகி விட்டது. தூங்குங்கள்'' என்று கூறித் தன்னுடைய அறையை நோக்கிச் சென்றான். விளக்கை அணைக்காமலே படுக்கையில் படுத்தான். சிறிது நேரம் தூக்கம் வராமல் புரண்டான். பல நினைவுகள் நெஞ்சில் புரண்டன. பிறகு தன்னை மறந்து தூங்கி விட்டான்.

ரங்கமணிக்குத் தூக்கம் வராததால் எழுந்து வராந்தாவுக்கு வந்தான். திரிவேணியின் அறையில் விளக்கு எரிந்து கொண்டிருந்ததைக் கண்டதும் சன்னல் பக்கம் வந்து நின்று கொண்டு உள்ளே பார்த்தான். அறைக்குள் மின்சார விளக்கு எரிந்து கொண்டிருந்தது. கட்டிலில் திரிவேணி தூங்கிக் கொண்டிருந்தாள். தூங்கும் பெண்ணுக்கு ஒரு தனி அழகு! அந்த அழகை ரசித்துக் கொண்டு நின்றான். தனிமையில் தூங்கும் ஒரு பெண்ணை அப்படிப் பார்த்துக் கொண்டு நிற்பது கண்ணியமில்லை என்ற உணர்வு தட்டியதும் பார்வையை வேறுபுறம் திருப்பினான். நினைவில் கமலவாசகியின் முகம் தோன்றி ஏங்க வைத்தது.

ஏன் இப்படி மனம் தவித்து ஏங்குகிறது...?

இந்த ஆராய்ச்சியெல்லாம் அவனுக்குப் பிடிபடவில்லை. நிட்சேதர் சொன்னமாதிரி அவனுக்கு ஒரு நிழல் வேண்டும். பருவத்தின் வெய்யில் தகிக்கிறது. லட்சியம், கொள்கை என்று என்னதான் தண்ணீரைத் தலையில் ஊற்றிக் கொண்டாலும் வெப்பம் தணிந்து விடுமா? அடர்ந்த நிழல் தரும் குளுமையை ஒரு குவளைத்தண்ணீரில் பெற்றுவிடமுடியுமா?

கமலவாசகியோடு அவன் பழகியபோது எத்தனையோ முறை அவளைத் தீண்டியிருக்கிறான். அறிவு அவனைத் தேவனாக்க, மகானாக்க, லட்சியவாதியாக்கத்தான் முயன்றது. ஆனால் உணர்ச்சி அவனை மனிதன்தான் என்று ஞாபகமூட்டிக் கொண்டேயிருந்தது.

மனிதனின் இயற்கையில் லட்சியத்தையும் பண்பாட்டையும் புகுத்திக் கொண்டு அறிவு இப்படி அலைக்கழிக்கிறதே. இதையெல்லாம் உதறிவிட்டு வெறும் மனிதனாக, ஆகிவிடத்தான் மனம் ஏங்கியது. ஆனால் உள்ளுணர்வு அவனை எங்கோ இழுத்தது. லட்சிய புருஷனாக யாருக்கும் எட்டாத பொருளாக அவனை வைத்து, வானத்தின் உச்சியில் கொண்டு போய்விடத் துடித்தது. எவ்வளவுதான் ரங்கமணி உணர்ச்சியின் தவிப்பால் மண்ணைத் தொடக் கையை நீட்டினாலும், உள் உணர்வு அவனை உயரத்திலேயே வைத்துக் கொண்டிருந்தது. பெண்ணின் உருவத்தை நினைவில் இருத்தித் தவிப்பதை எண்ணி எண்ணி வெட்கினான். பக்கத்து அறையில் சர்தார் சொக்கலிங்கம்பிள்ளையின் இருமல் சத்தம் கேட்டது. அவருடைய நினைவு வந்ததும் ரங்கமணியின் நினைவிலிருந்த அழுக்கெல்லாம் மறைந்து விட்டது. அவருடைய தியாகமும் துணிவும் அவனுடைய நினைவில் நிரம்பியபோது தன்னை அவரோடு ஒப்பிட்டுப் பார்த்தான்.

'சேச்சே....அற்பப் புழுவாகி விட்டேனே. கீழ்த்தரமான உணர்வுகளும், மட்டமான எண்ணங்களும் எப்படி என்னுள் நுழைந்தன? இந்தச் சர்தாருடைய கால் தூசிக்கு நான் சமானமாவேனா? அவருடைய கண்ணியமும் துணிவும் வாழ்நாள் முழுதும் லட்சியத்துக்காகத் தீர்த்துவிட்ட தியாகமும்...! ரங்கமணி மனத்தைக் குட்டையாகக் குழப்பிக் கொண்டு அதில் குதித்து மூழ்கிக் கொண்டிருக்கிறாயே...எவ்வளவு அற்பனாகி விட்டாய்...!'

ரங்கமணி தாங்க முடியாத மனவேதனையால் தலையை இறுகப் பற்றிக் கொண்டான். மறு நாள் காலையில் விழித்ததும் படுக்கையிலிருந்தவாறே சன்னல் வழியாக வெளியே பார்த்தான். திகைத்தான். வராந்தாவில் கமலவாசகி நிற்பது போலிருந்தது. கண்களைத் துடைத்துக் கொண்டு பார்த்தான். அங்கு திரிவேணி நின்று கொண்டிருந்தாள்.

ஏன் இந்த மயக்கம்? திரிவேணி ஏன் இப்படி அடிக்கடி நினைவில் குறுக்கிடுகிறாள்? கனவில்கூடச் சுற்றிச் சுற்றி வருகிறாளே. கமலவாசகி இருந்த அவனுடைய இதயத்தில் திரிவேணி நுழைந்து விட்டாளா? எப்படி நுழைந்தாள் என்ற ஆராய்ச்சியில் இறங்கி விட்டான்.

உண்மையில் இது பிரமையாகக்கூட இருக்கலாம். பக்கத்திலேயே இருந்து நெருங்கிப் பழகுவதனால் ஏற்பட்ட மனக் குழப்பந்தான் இது. கமலவாசகி ஆட்கொண்டு ராணியாக ஆட்சி நடத்தும் இதயத்தில் யார் நுழைய முடியும்? கமலவாசகியைப் பிரியும் போது கூறினானே, ''நான் நினைத்தாலும் உன்னை என் இதயத்திலிருந்து தள்ள முடியாதே!'' என்று. அது பொய்யாகி விடுமா?

ரங்கமணி தன்னை மனத்தாலே கட்டுக்கட்டுப் புடம் போட்டுக் கொண்டான். புடம் போட்ட மனத்தில் கமலவாசகி மட்டுமே மின்னிக் கொண்டிருந்தாள்.

இரண்டு நாட்களுக்குப் பிறகு ரங்கமணி பம்பாய்க்குப் புறப்பட்டான். அன்று வீட்டில் அத்தைக்கு இருப்பே கொள்ளவில்லை. சுற்றிச் சுற்றி வந்தாள். அவளுக்கு மனத்தில் ஏதோ ஒரு தவிப்பு. அதை இன்னதென்று அவளாலேயே புரிந்து கொள்ள முடியவில்லை. ரங்கமணியை உற்று உற்றுப் பார்த்தாள். ''சீக்கிரம் வந்து விடப்பா'' என்று அடிக்கடி அவனிடம் கூறினாள். ஏதாவது ஒரு காரணம் ஏற்பட்டு அவனுடைய பயணம் தடைப்பட்டு விடாதா என்றுகூட நினைத்தாள். அவளுடைய பரபரப்பையும் வேதனையையும் கண்டு ரங்கமணி சொன்னான்.

''அத்தை! நான் என்ன கடல் கடந்தா போகிறேன்? பம்பாய்க்குத்தானே போகிறேன். அதிகமாகப் போனால் ஒரு வாரம். அதற்குள் வந்து விடுவேனே.''

''என்னமோ என் மனம் இன்று சரியாயில்லை. என்னை விட்டு நீ பிரியக் கூடாது என்று என் மனம் அடித்துக் கொள்கிறது. பத்திரமாகப் போய் விட்டுச் சீக்கிரம் வந்து சேர்ந்து விடப்பா'' என்றாள் அத்தை மிகுந்த மனக் குழப்பத்துடன். அவன் நெற்றியில் திருநீறை அள்ளிப் பூசினாள்.

''அவன் என்ன சிறு பிள்ளையா, இவ்வளவு பயப்படுகிறாயே!'' என்றார் சர்தார், அத்தையைப் பார்த்து. அத்தை பதில் ஒன்றும் சொல்லவில்லை. சர்தாருக்குத் தெரியும், அவள் ரங்கமணி மீது கொண்டிருக்கும் பாசம். இந்தப் பெண்களுக்கென்று இப்படி ஒரு பலவீனமான இதயத்தைப் படைத்திருக்கிறானே என்று வியந்தார். (தொடரும்)




**அத்தியாயம் 21**

சந்தானம் படுத்த படுக்கையாக விழுந்தபோது சக்தி இழந்தான். மனம் எதை யெல்லாமோ நினைத்து ஆத்திரப்பட்டது. மற்றவர்களுக்கு உதவி செய்தே பழக்கப்பட்டவன், பிறர் தனக்கு ஒத்தாசையும், சிசுருஷையும் செய்வதை விரும்பவில்லை. அவனுக்குத் தெரியும், அந்தக் குடும்பமே அவனுக்காக எதையும் செய்யத் தயாராக இருக்கிறது என்று. இனிமேல் அவன் என்ன கத்தினாலும் அழுதாலும் அவன் அறையிலேயே முடங்கிக் கிடக்க வேண்டியதுதான்.

சேஷன் தினமும் வந்து போனான். உதவி மானேஜர் இல்லாததால் முதலாளியே தினம் தினம் வந்து கம்பெனி நிர்வாகத்தைக் கவனித்துக் கொள்கிறார் என்பதை அறிந்தபோது சந்தானத்துக்குத் திருப்தியும் நிம்மதியும் ஏற்பட்டன.

அவரும் ஒரு நாள் வந்து பார்த்து விட்டுப் போனவர், தம்முடைய வீட்டுச் சிப்பந்தி ஒருவனை உதவிக்கு இருக்கட்டும் என்று அனுப்பி வைத்தார். அவன்—கந்தசாமி வந்ததிலிருந்து பாகீரதி அம்மாளுக்கு எல்லா வேலைகளுமே குறைந்து விட்டதோ என்று தோன்றியது. கந்தசாமி மருந்து வாங்க வேண்டி வந்தபோது வாங்கி வந்து, சந்தானத்தைக் கவனித்துக் கொண்டு, அவனுடைய படுக்கையைத் தினம் தினம் உதறிப் போட்டு, அவனுடைய தேவைகளின் போதெல்லாம் கை கொடுத்து அழைத்துச் சென்று, தம்பி போல் உயிரைக் கொடுத்தான்.

காலையிலும், மாலையிலும் ஜானு அவன் அருகே உட்கார்ந்து கொண்டாள். தினசரி வாழ்க்கையில் நடக்கும் சாதாரணச் சம்பவங்கள், நிகழ்ச்சிகளுக்கெல்லாம் கண்ணும் காதும் வைத்து அவன் சிரிக்க வேண்டும் என்ற ஒரே ஆசையுடன் கதைகள் அளந்து வந்தாள். பகல் நேரத்தில் கமலா அவனுக்கு மருந்து கொடுப்பதிலும், ஆகாரம் கொடுப்பதிலும் கவனம் செலுத்தினாள். சீதா தோன்றியபோதெல்லாம் அவனைப் பார்த்து விசாரித்து விட்டுப் போனாள்.

அவர்களெல்லாம் காட்டிய அன்பு, ஆதரவு காரணமாக, சந்தானம் ஒரு வினாடி கூட தான் ஓர் அநாதை என்ற எண்ணத்தில் மாய்ந்து விடவில்லை.

மூன்று வாரங்கள் அவனுக்கு மூன்று யுகங்களாகத் தோன்றின. மெள்ள மெள்ளக் குணம் அடைந்துவிட்ட அவன், இன்னும் இரண்டு வாரங்கள் பூரண ஓய்வு எடுத்துக் கொள்ள வேண்டும் என்று டாக்டர் கட்டளையிட்டார். ஆனால் அவனால் பூரண குணம் அடைந்த பின் நான்கு நாட்களுக்கு மேல் வீட்டில் இருக்க முடியவில்லை. வரவர வீட்டில் இருக்கிறவர்களுடைய பணிவிடைகள் பெரும் சுமையாகக் கனத்தன. அவன், அவர்களுக்குக் கடன்பட்டுவிட்டதாகவே எண்ணினான். இந்த எண்ணம் வேறு அவனைத் தவிக்க வைத்தது.

அவன் பாகீரதியின் குடும்பத்துக்குப் பத்து ஆண்டுகளாகச் செய்து வந்திருக்கும் பற்பல உதவிகளுக்கு, இந்த ஓர் அற்ப சிசுருஷை ஈடே ஆகாது என்று சீதா என்னதான் சொன்னாலும் அவனால் அதை ஏற்க முடியவில்லை.

அவனுடைய ஆண் மனம் சமாதானமடையாமல் குன்றிப் போயிற்று.

ஒரு புதன் கிழமை.

காலை ஏழரை மணி இருக்கும்.

சந்தானம் குளித்துக் கொண்டிருந்தான். வீட்டு வாசலில் பிரம்மாண்டமான கார் ஒன்று வந்து நின்றது. அதை ஓட்டி வந்தவன் எந்த விதமான அவசரமும் தனக்கு இல்லை என்பதைக் கூறுவது போல் மெதுவாக இறங்கிப் படி ஏறி வந்தான்.

அப்போது பாகீரதி அம்மாள் தன் வேலையில் ஈடுபட்டிருக்க, ஈரமான தலையை விரல்களால் அளைந்து கொண்டே விசாரிக்க வந்தாள் சீதா. கமலாவும் ஜானுவும் ஏதோ ஒரு கலியாணத்துக்குப் போயிருந்தார்கள்.



வந்தவன், தயங்கிக் கொண்டே, ''சந்தானம் இந்த வீட்டில்தானே இருக்கிறார்?'' என்று கேட்டான்.

''ஆமாம்... குளிக்கிறார். உட்காருங்கள்...'' என்றாள் சீதா.

வந்தவனுக்குச் சந்தானத்தின் வயது தான் இருக்கும். அவனுடைய கோலமே அலாதியாகப் பட்டது சீதாவுக்கு. ஒற்றைநாடியான உடம்பில் வேஷ்டியும் ஜிப்பாவும் தரித்திருந்தான். தலையை வாரிக்கொள்ள



வேண்டும் என்ற எண்ணம் அவனுக்கு இல்லை என்பதை அவனுடைய நெற்றியில் புரண்ட கிராப்பு எடுத்துக் காட்டியது. பரந்த நெற்றியும், நீண்டு அவசரமாக இறங்கிய மூக்கும், கூர்மையான நாசி நுனியும் அவனுடைய முகத்தின் அலாதித் தன்மையை விளக்கின. அவன் பார்த்த பார்வையில் ஆர்வத்தைக் காட்டிலும் அசிரத்தையே பிரதிபலித்தது.

லட்சம் பேர்களுக்கிடையிலும் இவன் தனியாக நிற்கக் கூடியவன் என்று சீதா நினைத்தாள். அவன் அழகில்லாதவன்; ஆனால் பிறரைத் தன்பால் இழுக்கும் காந்த சக்தி அவனிடம் இருப்பதாக அவளுக்குத் தோன்றியது. இல்லாவிட்டால் அவன் ஏன் இன்னும் உள்ளே போகாமல், அங்கேயே அறைக்கு வெளியிலேயே நின்று கொண்டிருக்கவேண்டும்?

சந்தானம் மெதுவாகக் காதுகளைத் துடைத்துக் கொண்டே வந்தான். முகத்தில் முத்து முத்தாக நீர் அங்குமிங்குமாகத் தங்கி நின்றது.

''உங்களைத் தேடிக்கொண்டு ஒருவர் வந்திருக்கிறார்!'' என்றாள் சீதா.

தன் அறையில் உட்கார்ந்திருப்பவரைப் பார்த்ததும், ''ஹலோ ரவி! சௌக்கியமா? ரொம்ப அபூர்வமா இருக்கே....?'' என்றான்.

''நான் ரெண்டு மூன்று மாசமா ஊரிலேயே இல்லை.... நேத்துத்தான் தில்லியிலிருந்து வந்தேன்.''

''அப்பா சௌக்கியமா?''

''இப்போ ஏதோ தேவலை... அவர்தான் சொன்னார், உனக்கு ஏதோ உடம்பு சரியில்லை என்று... அவரை டாக்டர் கொஞ்ச நாளைக்கு நகரக் கூடாதுன்னு சொல்லியிருக்கிறார். அதனால் தான் அவர் வந்து பார்க்கவில்லை...''

மேலே பேச்சைத் தொடருவதற்கு முன் சீதாவை ரவிக்கு அறிமுகப்படுத்தினான் சந்தானம்.

''இவள் இந்த வீட்டின் மூத்த பெண் சீதா. ரவி, நீ ஆயிரமாயிரமா மேனாட்டு நாவல்களும் கவிதைகளும் கரைத்துக் குடிக்கிறாயே, அதிலெல்லாம் உனக்குப் பொறுமையின் அர்த்தம் சரியாகக் கிடைத்திருக்காது. அதன் அர்த்தமே இவள்தான்!''

''ஏதேது... உன் அறிமுகமே ஆளை அசைக்கிறதே!'' என்று சிரித்தான் ரவி

''இதோ வருகிறேன்!'' என்று சீதா உள்ளே செல்ல முற்படவும், ரவி, ''காப்பி கொண்டு

வரத்தான் போகிறீர்கள் என்றால், எனக்குத் தேவையில்லை...'' என்றான்.

''ரவி காப்பி சாப்பிட மாட்டான். ஒரு வைத்தியம்...'' என்றான்.

''டீ...''

''அவனுக்குக் காப்பி, டீ, கோக்கோ ஒண்ணும் தெரியாது...''

''அப்போ கொஞ்சம் பால் சாப்பிடுங்கள்!'' என்றாள் சீதா.

''மோர் இருக்கிறது இல்லையா? தண்ணீர் விடாமே அரை டம்ளர் மோர் தாருங்கள். நீங்கள் இவ்வளவு உபசாரம் செய்யறதுக்கு வேண்டாம்னு சொல்லலையில்லை!''

அடுத்த நிமிஷம் சீதா ஒரு வெள்ளித் தம்ளரில் மோர் கொண்டு வந்தாள்.

ரவி வாங்கிக் கொண்டான். வெள்ளித் தம்ளரைப் பார்த்தபோதே, சந்தானத்தின் மனத்தில் அது கல்யாணத்தை உத்தேசித்து வாங்கின தம்ளர் என்ற நினைவு பிறந்தது.

''மோர் ரொம்ப ஜோர்...'' என்ற அவன், ''உன்னைப் பார்த்து ரொம்ப நாளாயிடுத்து... இல்லே... ஏழெட்டு மாசம் இருக்காது?...'' என்று சந்தானத்திடம் கேட்டான்.

''இருக்கும். போன வருஷம் ஆயுத பூஜையின்போது பார்த்தது.''

''ஆமாம். எனக்கு மெட்ராஸே வர வரப் பிடிக்காமல் போய்விட்டது.''

''ஏன்? உனக்கு வேண்டியது லைப்ரரி தானே? யூனிவர்ஸிடி லைப்ரரி, கன்னிமாரா லைப்ரரி இந்த இரண்டும் போதாதா?''

''அதெல்லாம் சரிதான்... ஆனால் அப்பாவின் தொந்தரவு சகிக்கவில்லை.''

''என்ன சொல்கிறார்?''

''பிஸினஸை நான் ஏத்துக் கொள்ள வேணுமாம். கல்யாணம் செய்துகொள்ளணுமாம்...''

''உன் நிலையில், உன் வயசுக்குச் செய்ய வேண்டியதுதானே இரண்டும்?''

''எனக்கு அப்படித் தோன்றவில்லை. அப்பாவுக்குப் பணம் ஒன்றுதான் குறி. 'ஹார்ட் அட்டாக்' வந்தப்புறம் இனிமேல் தாம் அதிக நாள் இருக்க மாட்டோம் என்ற பயம் வேறே அவருக்குத் தோன்றி விட்டது.''

''ஹார்ட் — அட்டாக் வந்தப்புறம் ஒரு நாள் வந்திருந்தேன். ஆனால் என்னை அனுமதிக்கவில்லை உள்ளே...''

''யாரு ராஜா இருந்தானா...?''

''ஆமாம்... ராஜாங்கம்தான்...உன் நண்பனாச்சே அவன்...''

''என் நண்பன் என்கிறதைவிட அப்பாவின் அந்தரங்கக் காரியதரிசி என்ற ஹோதாவில்தான் அவன் இருக்கிறான். முன்மாதிரி நாங்க ரெண்டு பேரும் அடிக்கடி சேர்ந்துகூட இருக்க முடிகிறதில்லை...''

''அம்மா சௌக்கியமா? அகிலா எப்படி இருக்கிறாள்?''

''சௌக்கியம்தான். அகிலாவுக்கு உன்மேல் அசாத்தியக் கோபம். வரட்டும் பார்த்துக் கொள்ளுகிறேன் என்று கறுவிக் கொண்டிருக்கிறாள்!''

''அசடு!'' என்று சிரித்த சந்தானம், ''இன்னும் 'பச்சைக் குழந்தை'ன்னு நெனைச்சுண்டிருக்கா அவள்!'' என்றான்.

ரவி மெதுவாக எழுந்தான்.

''இந்த ஞாயிற்றுக்கிழமை நீ ஃப்ரீயா இருப்பியா?'' என்று கேட்டான் அவன்.

''ஓ யெஸ்... என்ன வேணும்?''

''உன்னோடு சில முக்கிய காரியங்களெல்லாம் பேசணும். ஏன், உன் அட்வைஸைக் கேட்கணும்...''

''நான் பங்களாவுக்கு வரணுமா?''

''நோ நோ... தேனாம்பேட்டை பஸ் ஸ்டாப்பிலே சரியாக எட்டு மணிக்கு இரு. நான் வந்து பிக்-அப் பண்ணறேன்... இந்தச் சமாசாரம் வெளியே தெரிய வேண்டாம். நான் வரட்டுமா? வருகிறேன், மிஸ் சீதா...''

சந்தானம் கார்வரை வந்து அவனை வழியனுப்பினான். சீதா தன் மனத்தில் பதிந்துவிட்ட அந்த அலாதி முகத்தைப் பார்த்துக் கொண்டே நின்றாள்.

சந்தானம் மீண்டும் உள்ளே வந்ததும், ''நீங்கள் அடிக்கடி சொல்லுவீர்களே, ரவி ரவின்னு, இவர்தானா அது...'' என்று கேட்டாள்.

''ஆமாம்...''

''என் அப்பா இவருடைய அப்பா கிட்டேதானே வேலை பார்த்தார்?...''

''ஆமாம். கோதண்டராமன்! அதை ஏன் ஞாபகப்படுத்திக் கொள்ளுகிறாய் இப்போ...?''

''ஏதாவது ஒன்றிலிருந்துதானே அதன் சம்பந்தமான நினைவுகள் சிதறிக் கொண்டு வரும். ரவி, ரவியின் அப்பா கோதண்டராமன். கோதண்டராமனின் அந்தரங்கக் காரியதரிசி என் அப்பா!''

''அப்புறம்... அந்த அப்பா நிச்சயம் செய்து, கடைசியில் நடக்காத கல்யாணம்... அந்தக் கல்யாணத்துக்குப் பின் இந்தக் கல்யாணம்.... இதுவும் தடைப்பட்டது.... இப்படி அலை அலையாய், ஒன்றன் பின் ஒன்றாய், முடிவே இல்லாமல் மனம் மேய்ந்து கொண்டே போகும். அப்புறம் உனக்கு ஏது நிம்மதி சீதா...?''

வெறுப்புடன் சிரித்தாள் அவள். ''என்னால் நினைக்காமல் இருக்க முடியவில்லை....'' என்றாள்.

''ஞானு போல நீயும் வெளியுலகில் மோகம் காட்ட வேண்டும். அதிலே

மூழ்கி எழுந்திருக்க வேண்டும். சினிமா, நாடகம், கச்சேரி, கடற்கரை என்று எல்லாவற்றிலும் ஈடுபாடு இருக்கவேண்டும். தன்னைத் தானே மறக்கத்தானே இவையெல்லாம் இருக்கு...''

''தன்னைத்தானே ஏமாத்திக்கொள்ள என்று சொல்லுங்கள். இதெல்லாம் வெறும் போதைகள். அந்தச் சமயத்திலே ஒரு கிளுகிளுப்பு. அப்புறம் இரட்டிப்பு வேதனை. இவற்றையெல்லாம் தினம் பார்த்துக் கொண்டிருந்தால் நாம் சந்தோஷமாக இருக்கிறோம் என்று பார்க்கிறவர்கள் சொல்லுகிறார்கள்... ஆனால் சந்தோஷம் என்கிறது இதுதானா?''

''சந்தோஷம்னு என்னன்னு சொல்கிறாய் நீ?''

''அது மன நிம்மதியின் பிரதிபலிப்பு. அமைதியான உள்ளத்தில் பூக்கிற பூக்களின் நறுமணம்... சொல்லப்போனால் எந்த மனிதனும் சந்தோஷத்தை அனுபவிக்கறதே கிடையாது. ஆசா பாசங்களும், கோப தாபங்களும் தினசரி வாழ்க்கையில் கண்கூடாக இருக்கும்போது, இவையெல்லாம் மனத்தைப் போட்டு உலுக்கி அழ வைக்கும் போது, பூக்கள் பூக்க உரம் ஏது?''

''நீ சொல்றதைப் பார்த்தால், முற்றும் துறந்த ஞானிகளின் மோன நிலை தான் சந்தோஷம் என்கிறாயா?''

''என்ன சந்தேகம்? அதுதானே ஆனந்தம்...நம்ம வாழ்க்கையிலே அதை எட்டிப் பிடிக்க வேண்டும் என்றுதான் வேதங்கள் கோஷிக்கின்றன. கீதை சொல்கிறது ... எல்லாத்துக்கும் காரண வேராக இருக்கிற ஆசையை நம்மால் ஒதுக்க முடிகிறதில்லை. அதற்குக் காரணம், பக்குவப்படுத்திக் கொள்ளத் தெரியாத மனம்...''

''ஏதேது, ஓரேயடியாய்த் தத்துவத்தில் இறங்கிவிட்டாய், சீதா... இங்கே வந்தானே ரவி, இவன் ஒரு புஸ்தக வெறியன்...காசியிலே பத்து வருஷங்கள் படிச்சவன். இந்தியாவிலே அவன் பார்க்காத இடம் இல்லை... ஊருக்கு ஊர் அமைப்பிலே வித்தியாசம் இருந்தாலும், வாழ்க்கை முறைகள் மாறுபட்டாலும் மனித இனத்தில் அடிப்படையான குணங்கள் மாறாது என்று எத்தனையோ பேர் சொல்லிவிட்டுப் போன உண்மையையே இவனும் சொல்லிக் கொண்டிருக்கிறான். இவனுடைய அப்பாவும் இவனும் எதிர் துருவங்கள். அவர் பணத்தின் காலடியில் கிடக்கிறார். பணத்தைக் காலால் உதைக்கிறேன் என்கிறான் இவன். தெய்வ நம்பிக்கை உண்டு. ஆனால் எதற்கும் தெய்வத்தையே நம்பியிருப்பது அறிவீனம். மனிதனின் பல

பாட்டி: ''எனக்கு அப்பவே தெரியும்....அந்த டெய்லரிடம் ரவிக்கை தைக்கக் கொடுத்தால் அவன் பாதித் துணியைத் திருடுவான்னு!''

○●○●○●○●○●○●○●○●○

ஹீனம் என்று கத்துவான். சரி, சரி. நான் எங்கேயோ நேரத்தையும் மறந்து போய்க் கொண்டிருக்கிறேன்.... ஆபீசுக்கு நேரமாயிடுத்து...''

சீதா மெதுவாக உள்ளே சென்றாள். முதன் முதலாக வாழ்க்கையில் ஒருவன் அவளுடைய உள்ளத்தில் புகுந்து விட்டதை உணர்ந்து அவள் திடுக்கிட்டாள்.

**ப**ல மாதங்களுக்குப் பிறகு திடீர் என்று ரவி பார்க்க வந்தது ஆச்சரியத்தைத்தான் அளித்தது சந்தானத்துக்கு. எதைப் பற்றி இருவரும் ஞாயிற்றுக் கிழமையன்று பேசப் போகிறார்கள்? கோதண்டராமனுக்கு இருதயக் கோளாறு உண்டானபோது அவன் ஊரிலேயே இல்லை. அவன் இருப்பான் என்ற எண்ணத்தில்தான் 'பாக்கிய நிலைய'த்துக்கே சந்தானம் சென்றிருந்தான். அங்கே ராஜாங்கம் என்றும் போல் தனது அதிகாரத்தைப் பிரயோகித்துக் கொண்டிருந்தான். 'பெரியவரை யாரும் பார்க்கக் கூடாது' என்று அவனே ஓர் ஆணையிட்டு, அமுலாக்கிக் கொண்டிருந்தான். சந்தானத்தால் ரவியின் தாயாரையும், அகிலாவையும் கூடப் பார்க்க முடியவில்லை. இருவரும் கோதண்டராமன் இருந்த அறையிலேயே இருந்தார்கள்.

இது நடந்து கிட்டத் தட்ட மூன்று மாதங்களுக்கு மேல் ஆகிவிட்டது. தந்தை ஆபத்தான நிலையில் இருந்தும் ஏன் உடனடியாக ரவி வராமற் போனான் என்று சந்தானம் நினைத்துப் பார்த்தான். ஒன்றும் விளங்கவில்லை. ஒரு வேளை ஊர் ஊராய்த் திரிந்துகொண்

டிருப்பதே பழக்கமாகிப் போய்விட்ட ரவியின் அப்போதைய விலாசம் தெரியாமற் போயிருக்கக் கூடும். அல்லது தந்தியோ, தபாலோ சென்ற நேரத்தில் அவன் அந்த ஊரிலேயே இல்லாமல் இருந்திருக்கலாம்.

கம்பெனியை அடைந்த பின் நித்திய வேலைகளில் கவனம் செல்லவே, அவன் ரவியை மறந்தான். ஒரு மாத லீவுக்குப் பிறகு அவன் வேலையில் மீண்டும் சேர்ந்தபோது, இதுவரையில் உணர்ந்தறியாத களைப்பை அவன் உணர்ந்தான். ஃபைல்கள் குவிந்திருந்தன. எத்தனையோ கம்பெனிகளுக்கு; வரவேண்டிய பணத்தைப் பற்றி எழுத வேண்டியிருந்தது. உடம்பின் சக்தி வேறு, 'டைபாய்டு'க்குப் பிறகு வெகுவாகக் குறைந்திருந்தது. தன் சக்தியையும் மீறி அவன் உழைக்க வேண்டியிருந்தது. அவ்வப்போது அவன், அருந்தின பழரஸங்களும், ஹார்லிக்ஸும் தாற்காலிகமாகத் தென்பு அளித்தன.

**அ**ன்று மாலே சுமார் ஐந்தரை மணிக்கு, சேஷன் ''வரலாமா ஸார்?'' என்று கேட்டுக் கொண்டே வந்தான்.

சந்தானத்துக்கும் அலுப்பாக இருந்தது. நாள் முழுதும் ஃபைல்களைப் படித்தும், ஃபோனில் அழைத்தவர்களுக்கெல்லாம் பதில் சொல்லியும், அவன் பொறுமை இழந்து போயிருந்தான். சேஷன் வந்தாலே, பேச்சு ஆயாசத்தைப் போக்கும் டானிக்காக அமையும் என்று அவனுக்குத் தெரியும்.

''வாயேன்... உட்கார்...''

''முதலாளி தினம் தினம் வந்து போனுரே தவிர, எதையும் தொடவில்லே ஸார்... எந்த ஃபைலைப் பிரித்தாலும், இதைச் சந்தானம் வந்து பார்க்கட்டும், இதைப் பத்தி அவனுக்குத்தான் தெரியும் என்றெல்லாம் சொல்லி வைத்துவிடுவார்..'' என்று, அவன் மேஜையின் மீதிருந்த காகிதக் குவியலைப் பார்த்துக் கொண்டே சொன்னுன்.

சந்தானம் பதில் சொல்லவில்லே.

''ஸார்... எனக்கு டைபாய்டு வந்தப்புறம்தான் நான் இப்படிப் பருத்துப் போயிட்டேன். டைபாய்டு வந்தாலே உடம்பு பருத்து விடுமாமே?''

''உன் டைபாய்டுக்கு முன்னுலே, நீ ஒத்தைநாடியாகவா இருந்தாய்?''

''அப்போ இரட்டை நாடி....இப்போ நாலு நாடி!'' என்று சிரித்த அவன், ''ஸார்... ஒரு வழியாக ரகுபதியின் விஷயம் முடிஞ்சுது...'' என்றுன்.

''என்னுச்சு? நான்கேட்கவே மறந்துட்டேன். இந்த ஆபீஸ் தொல்லேயிலே...''

''மூந்தாநாள் ராத்திரிதான் இரண்டு வக்கீல்களையும் வைச்சுண்டு டாகுமெண்டை டிராப்ட் செய்தோம்...''

''என்னன்னு...?''

''பையன் பேரிலே பிதிரார்ஜிதமா வந்த சொத்திலே பாதியை எழுதி வைச்சிருக்கான். அவனுக்கு மாதா மாதம் நூற்றைம்பது ரூபாய் அனுப்பணும்...''

''அப்போ அவன் ஊருக்குத் திரும்பிப் போகிறுளா?''

''அவனுக்கு இஷ்டமாளுல் சென்னே வீட்டிலே இருந்து கொள்ளலாம். அதைப் பத்தி அவன் இன்னும் தீர்மானம் சொல்லல்லே. ஆனுல் ரகுபதி அவன் ஊருக்கே போகட்டும் என்கிறுன். முதல்லே விவாக ரத்துன்னு ஆரம்பிச்சான். 'சாரதா அது மட்டும் முடியாதுன்னு ஒரேயடியாச் சொல்லிவிட்டாள்.' அவன் மனசு மாறும்னு, இன்னும் அந்தப் பைத்தியம் நம்புகிறது. என்னே வாயிலே வந்தபடி ரகுபதி ஏசினுன், இதுக்கெல்லாம் நான்தான் காரணம் என்று. காரியம் ஆகிறவரையில் பேசக் கூடாதுன்னு நானும் வாயைத் திறக்காமல் இருந்தேன். கோபுவை டாக்டருக்குப் படிக்க வைக்கப் போறதாகச் சாரதா சொல்லிண்டிருக்கா...''

''ஏதோ அவனுக்கும் விடிஞ்சுது..''

''அதற்குக் காரணம் அலமேலு அம்மான்தான்...'' என்றுன் சேஷன். ''பிறகு அவளேயும் பார்த்தேன். என்ன மாமி, எனக்கு ஏதாவது நல்ல வரன் கிடைக்குமான்னு கேட்டேன். நான் கிண்டல் செய்யறேன்னு அவள் முகத்தைக் கடுவன் பூனே மாதிரிக் காட்டி விட்டுப் போய்விட்டாள்'' என்றுன்.

''ஏன் உனக்குக் கல்யாணம் பண்ணிக்கொள்ள ஆசையா இருக்கா?''

''யாருக்குத்தான் ஸார் ஆசையிருக்காது? ஆனுல் நான் ஆசைப்பட்டு என்ன புண்ணியம்? என்னேப் பார்க்கிறவா, 'ஆனே அழிச்சா நாலு ஆள் பண்ணலாம்' என்கிறு... ஒருத்தன் கையைத் தொட்டுப் பார்த்து, 'உள்ளே எலும்பு இருக்கான்னு' சிரிக்கிறுன். இந்த ஊனேச் சதையைக் கண்டாலே எந்தப் பெண்ணும் ஓடிவிடுவாளே....!''

''உன்னேப் பார்க்கிறதுக்கே பரிதாபமாக இருக்கு!'' என்று சிரித்தான் சந்தானம்.

''இதிலே பரிதாபப்படறதுக்கு ஒண்ணும் இல்லே ஸார்... அவனவன் வந்த வழி... பாருங்களேன், சீதாவின் கல்யாணம் நடந்துவிடும்னுதானே எல்லாரும் கடைசிவரை நம்பியிருந்தீர்கள்...! ரகுபதியும் அலமேலு அம்மாளும் கூட அது நின்றுவிடும்னு

எதிர்பார்க்கவில்லை. ஆனால், என்னிக்கு நான் பொருமையின் பொக்கிஷம்மா இருக்கிற சீதாவைப் பார்த்தேனோ, அன்னிக்கே மனசிலே நிச்சயம் பண்ணி விட்டேன். 'இந்தப் பெண் கழுத்திலே தன் கருங்காலிக் கையாலே இந்த ரகுபதி தாலியைக் கட்ட மாட்டான்னு!' பாவம், அந்தப் பெண் அடி நாளிலே எத்தனை கஷ்டப்பட்டிருக்கு.''

''நீ என்ன சொல்கிறாய்?''

''அவனவன் விதி என்கிறேன். இல்லாவிட்டால், சீதையைக் காப்பாற்றுவதுக்குப் பகவான் என்னைத் தேர்ந்தெடுப்பானேன்? நீங்கள் யாரும் பார்த்திராத சாரதா எங்க ஊர்ப் பெண்ணாக இருப்பானேன்? எல்லாம் விதி சார், விதி! நாம என்னமோ, அதைப் பண்ணிப்பிட்டோம், இதைப் பண்ணிப்பிட்டோம்ன்னு குதிக்கிறோம். யாரும் ஒண்ணும் செய்யல்லே. எல்லாம் அந்த ஈசுவரன் டைம்-டேபிள் போட்டுண்டு, பட்டனை அழுத்துகிற மாதிரி நடத்தறான்....''

''அடே அப்பா! உனக்கு ஈசுவர விசாரம் இவ்வளவு இருக்குன்னு எனக்குத் தெரியாதே!''

''எனக்கு ஈசுவர பக்தியும் உண்டு. லௌகீகத்திலே ஆசையும் உண்டு. இன்னும் சொல்லப் போனால், அக்கிரமமாகச் சம்பாதிக்கணும் என்கிற வெறி கூடச் சில சமயங்களிலே வந்துவிடும். பாருங்களேன். சீதாவை வச்சுண்டு ரகுபதியை 'பிளாக் மெயில்' பண்ணலாமான்னு கூட ஓர் எண்ணம் எழுந்து மனசை ஆட்டி வைச்சுது. ஆனால், என்னமோ எனக்கே புரியாதபடி இரக்கம் அவளைக் காப்பாற்றியது. குறைஞ்சது ஐயாயிரமாவது அவன் கிட்டேயிருந்து கறந்திருப்பேன், இப்போ அது நஷ்டம்!''

''நீ பெரிய தியாகி!'' என்று சிரித்த சந்தானம், திடீரென்று சொன்னான்:

''ஏன் இந்தச் சீதாவையே கல்யாணம் செய்து கொள்ள வேண்டும் என்று ரகுபதி அப்படிப் பிடிவாதமாக இருந்தான்? இந்தக் கேள்வி என் மனசை விட்டுப் போகவே மாட்டேன் என்கிறது. உன்னால் பதில் தேடிச் சொல்ல முடியுமா?''

''உங்க மனசிலே பிறக்கிற சந்தேகங்களைத் தீர்த்து வைக்க என்னால் எப்படி சார் முடியும்?'' என்று கேட்டு சேஷன் எழுந்தான். **(தொடரும்)**

---

# பஞ்சாமிர்தம்

''தேவலையே! அவர் வீட்டில் இரவு நேரத்தில் ரேடியோவும் தூங்கி விடுகிறதே. அதைச் சொல்லுங்கள்!'' என்கிறார் பக்கத்து வீட்டு ரேடியோத் தொல்லை தாளாத ஒருவர்.

ஃ ஃ ஃ

''ரோடு ரோலர்கள் வாங்குவதில் ரூ. 3 கோடி நஷ்டம் ஏற்பட்டது குறித்து, அரசாங்கம் நடவடிக்கை எடுப்பதில் தாமதிப்பதற்குக் காரணம் என்ன?''



— லோகசபையில் ஒரு கேள்வி.

இது தெரியாதா? ரோடு ரோலரின் வேகத்தை அரசாங்கத்தினால் எட்டிப் பிடிக்க முடியாததுதான்!

ஃ ஃ ஃ

எல்லோரும் இரவு அயர்ந்து தூங்கும் போது, இலங்கையிலுள்ள உதவி இந்திய ஹைகமிஷனர் வீட்டில் புகுந்து யாரோ திருடன் ரேடியோப் பெட்டியைத் தூக்கிச் சென்று விட்டான்.



— கொழும்புச் செய்தி

''போசனைகளை அள்ளி வீசுவது யாருக்கும் சுலபம். ஆனால் அவற்றை நிறைவேற்றுவதுதான் கடினம்.''



— யூனியன் மந்திரி திரிகுணா சென்

''எப்படி நிறைவேற்றுவாம்?'' என்று ஒரு போசனையை நீங்கள்தான் அள்ளி வீசுங்களேன்!

ஃ ஃ ஃ

மகாராஷ்டிரத்தில் உள்ள நூற்றுக்கும் மேற்பட்ட சினிமாத் தியேட்டர்களை அவற்றின் உரிமையாளர்கள் காலவரையின்றி மூடி விடத் தீர்மானித்திருக்கிறார்கள். தமாஷா வரிச் சுமை தாங்காமல் போனதே இதற்குக் காரணம்.

— செய்தி

மூடும் போது தியேட்டர்களின் வாயிலில் ''வரி சுமை'' என்று போர்டுகள் போடுவார்களா?

— கொக்கி



இங்கிலாந்தைச் சேர்ந்த மார்கரெட் ஒரு கப்பலில் வேலை செய்து வந்தாள். அவள் தபால் மூலமாக லத்தீன் மொழிப் பரீட்சைக்குப் படித்தாள். பரீட்சை சமயத்தில் விடுமுறை எடுத்துக்கொண்டு போய்ப் பரீட்சை எழுதலாம் என்று நினைத்திருந்தாள். 'பரீட்சை சமயத்தில் அவளுக்கு விடுமுறை கிடைக்கவில்லை. அந்தப் பெண் அதனால் மனம் தளர்ந்து விடவில்லை. அவள் படித்த பள்ளியின் தலைமை ஆசிரியை மூலமாகப் பரீட்சை நடத்திய அதிகாரிகளுக்கு ''நிர்வாகிகள் என்னை அங்குவந்து பரீட்சை எழுத விடவில்லை. அதனால் கப்பலிலேயே பரீட்சை எழுத அனுமதி அளிக்கும்படி வேண்டுகிறேன்'' என்று ஒரு விண்ணப்பம் எழுதினாள். அவளுடைய ஆர்வத்தைக் கண்ட பரீட்சை அதிகாரிகள் அவளுடைய விருப்பப்படியே நடக்க ஏற்பாடு செய்தார்கள். காப்டனின் மேற்பார்வையிலேயே அந்தப் பெண் கடலுக்கு நடுவில் வின்ஸ்டன் சர்ச்சில் கப்பலில் பரீட்சை எழுதினாள். தகவல்: கே. ராமச்சந்திரன்

## பல்சுவைப் பக்கம் 1

ஜப்பானின் தலைநகரான டோக்கியோவிலிருந்து நாற்பது மைல் தொலைவில் இருக்கிறது பட்டுஷிரோ என்னும் அழகிய ஊர். இருபத்திரண்டாயிரம் மக்களைக் கொண்ட இந்த ஊரில் பெரும்பாலோர் விவசாயிகள். இவர்கள் தூங்கச் செல்லும் போது படுக்கைக்கு இரண்டு பக்கங்களிலும் பெரிய காலி டப்பாக்களை வைத்துக் கொள்ளுகிறார்கள். இரவில் மேலே இருந்து விழும் கூரை, கற்கள், குறுக்குக் கம்பங்கள் ஆகியவற்றை இவை தாங்கிக் கொள்ளும்.

இப்படித் திடீர் திடீரென்று கூரைகளும், குறுக்குக் கம்பங்களும் விழுவதற்குக் காரணம் நில அதிர்ச்சிதான். இத்தகைய சிறு பூகம்பங்கள் இந்த ஊரில் தொடர்ந்து ஏற்பட்டுக் கொண்டிருக்கின்றன.

இதனால் இந்த ஊரில் நடந்து செல்பவர்கள்கூட நேராக நடக்காமல், தெருவின் நடுவில்தான் போக வேண்டும்.



## ஆங்கிலப் பெண்ணின் நீச்சல் சாதனை !

பிரிட்டனில் இருபத்தொரு வயதுள்ள மாணவி லைப்ரரியன் எலைன் கிரே இருபத்தியொரு மைல் இங்கிலீஷ் கால்வாயைக் கடந்து ஒரு 'பெண்கள் ரிகார்டை' ஏற்படுத்தி யிருக்கிறாள். போலோனுக்கு அருகே கரையேறும்போது எடுத்த படத்தை இங்கு காண்கிறீர்கள். இங்கிலீஷ் கால்வாயைப் பத்து மணி இருபத்து நான்கு நிமிஷங்களில் கடந்து முந்தைய ரிகார்டை விட முப்பத்தி ஏழு நிமிடங்கள் முன்னதாகச் சென்றிருக்கிறாள்.

இந்த ஆங்கில மாது இதற்கு முன்பு இந்த இங்கிலீஷ் கால்வாயைக் கடக்க இரண்டு தடவைகள் முயற்சி செய்து மூன்றாவது தடவை வெற்றிகரமாக அதைச் சாதித்திருக்கிறாள்.

பத்திரிகைப் பக்கம் 2

## கடலில் பரீட்சை



என்று சட்டம் செய்திருக்கிறார்கள்.

இவ்வளவு முன்னெச்சரிக்கையோடு, இவ்வூர் மக்கள் இருந்து வருவதால் இதுவரை நில அதிர்ச்சிகளின் காரணமாக எட்டே எட்டுப் பேருக்குத்தான் காயம் ஏற்பட்டிருக்கிறது. உயிர்ச் சேதம் கிடையாது. — ''மலிக்''

## நடுங்கும் பட்டணம்!

## மண்ணுக்கும் விலையுண்டு!

ஜான் கென்னடியின் ஞாபகார்த்த நூல் நிலையத்துக்காக அமெரிக்காவில் நிதி திரட்டப்பட்டபோது கென்னடியின் தம்பி ராபர்ட் கென்னடியும், அவர் குழந்தைகளும் சில நண்பர்களும் சேர்ந்து ஒரு சிறு கடையைத் திறந்தார்கள் — கென்னடியின் ஞாபகார்த்தப் பொருள்களை விற்றுப் பணம் சேர்ப்பதற்காக. கடை திறந்த நான்கு நாட்களில் வியாபாரம் பெருகி நெரிசல் ஏற்படவே, போலீஸார் தலையிட்டுக் கடையை மூடச் செய்தார்கள். இதற்குள் ஏராளமான தொகை சேர்ந்துவிட்டது. விற்பனைப் பொருள்களில் முக்கியமானது பிளாஸ்டிக் பைகளில் இட்டு நிரப்பிய ''கென்னடி பீச்'' மணல்; பை ஒன்றுக்கு விலை 35 சென்ட்: அதாவது ரூ. 2-50.

ஆதாரம்: 'நியூஸ் வீக்'



# 450 லட்சம் பேருக்கு ஆடையணிவிக்கப் போதுமான செயற்கை இழைகளை ஓர் ஆண்டிலே உற்பத்தி செய்கின்றனர் குவாலியர் ரேயான்.



ஒரு கிலோ-செயற்கை இழைகளிலிருந்து 15 மீட்டர் துணி தயாராகிறது. அதாவது ஒரு ஆள் ஓராண்டு காலம் உடுத்தப் போதுமான துணி. குவாலியர் ரேயான் ஆண்டுதோறும் 450 லட்சம் செயற்கை இழைகளை உற்பத்தி செய்கிறது: 450 லட்சம் பேருக்கு ஆடையணிவிக்கப் போதுமான துணி அது. துணி உற்பத்திக்குத் தேவையான இழைகளை வழங்குவதோடு நின்றுவிடுவதில்லை குவாலியர் ரேயான் பணி; உணவு உற்பத்திக்கு இடம் உண்டுபண்ணுகிறது. எவ்விதமெனில், பருத்திச் சாகுபடிக்காகப் பயன்பட்டுவரும் செழிப்புள்ள ஏராளமான நிலங்களை உணவுப் பயிர்களின் உற்பத்திக்கென விடுவிக்கிறது. குவாலியர் ரேயானுக்காக ஏதேனும் அயல்நாட்டு எந்திர சாதனங்களோ, மூலப் பொருட்களோ தேவையா என்றால் அதுவுமில்லை. உள்நாட்டிலிருந்தே அனைத்தையும் பெற்றுக்கொள்கிறது. தனக்கு வேண்டிய ரேயான் ரகக் கூழினைத் தானே தயாரித்துக்கொள்கிறது குவாலியர் ரேயான், தவிர, தேவைப்படும் நுட்பமிகமான எந்திரங்கள் எல்லாவற்றையும் உற்பத்தி செய்கிறது என்ஜினியரிங் டிவிஷன்.

***நாட்டுச் செல்வத்தைப் படைத்திட உதவுவது குவாலியர் ரேயான்.***

ஸ்ரீ குவாலியர் ரேயான் ஸில்க் மானுபாக் (வீவிங்) கோ. லிட்., மாவூர், நாக்தா, குவாலியர்.

SOBHAGYA-GR 25A TM

# பஸ் ஸ்டாண்டுக்குப் போ!

தகழி சிவசங்கரம் பிள்ளை : தமிழாக்கம் : புஷ்பவேணி கோவிந்

யாரோ அவனிடம் அனுதாபம் கொண்டு அவனைப் படகிலிருந்து கரையேற்றி விட்டனர். அவன் ஒரு குருட்டுக் கிழவன். கரை சேர்ந்த இடத்திலேயே சிறிது நேரம் நின்று கொண்டிருந்தான். அவன் கொச்சிக்குச் செல்லும் பஸ்ஸைப் பிடித்தாக வேண்டும். பல பேரிடம் கெஞ்சிப் பார்த்தான். யாருமே செவி சாய்க்கவில்லை. அவரவர் வேலை அவரவர்களுக்கு. ஒருவன் கிழவனை ரிக்ஷாக்காரனிடம் அழைத்துச் சென்றான்.

ரிக்ஷாக்காரனும் இதுதான் சமயம் என்று ஒரு ரூபாய் கூலி கேட்டான். கிழவன் நடுங்கி விட்டான்.

''ஒரு ரூவாயா? வேண்டாமப்பா. நான் எப்பிடியாவது போய்க்கிறேன்.''

''பின்னே, எம்புட்டுத் தாத்தா தருவே?'' ரிக்ஷாக்காரன் கேட்டான்.

''ரெண்டணா தருவேன்.''

''தாத்தா! இன்னிக்கு நீ எங்கேயுமே போக மாட்டே. சரி. சரி, எட்டணா தருவியா? கொச்சி பஸ்ஸிலே ஏத்தி விடுறேன்!''

இரண்டரையணா தருவதாகக் கிழவன் கூறினான். ரிக்ஷாக்காரன் தன் போக்கில் சென்று விட்டான். கிழவன் மீண்டும் பல பேரை உதவிக்கு அணுகினான். அதைக் கவனிப்பார் யாரும் இல்லை. அவன் தட்டுமுட்டி நடந்தவாறே கப்பலிலிருந்து சரக்குகள் இறக்குமிடத்தில் ஒரு தூணில் மோதிக் கொண்டான். யாரோ வழிப்போக்கர்களுக்குச் சொந்தமான ஒரு ஜாடியில் இடித்துக் கொள்ளவே அது கவிழ்ந்தது. ஒரு பிச்சைக்காரச் சிறுவன் மீது மோதவே அவனும் தடுக்கி விழுந்தான். பலர் அவனை ஏசத்



தொடங்கினர். "இந்தக் குருட்டுக் கண்ணுக்கு வீட்டிலே எங்கேயாவது சும்மா குந்தியிருக்கக் கூடாது?" என்று கேட்டான் ஒருவன்.

அதற்கு மற்றொருவன், "அவர் யாருன்னு தெரியுமா? ஒரு இலட்சம் பெறுவாரு" எனப் பதிலளித்தான்.

"இந்த ஆளா? என்ன கோலம்? ஒரு நல்ல வேட்டிகூட இல்லியே?"

"அதெல்லாம் அப்படித்தான்."

அவன் மெதுவாக ரோட்டை அடைந்தான்.

"வண்டி வருது தாத்தா" என்று கூறியவாறே ஒரு சிறுவன் தெருவின் ஓரத்தில் இருந்த கிழவனைக் கொண்டு வந்து தெருவின் நட்ட நடுவில் நிறுத்தினான். பலருக்கும் இது சிரிக்க ஏதுவாயிற்று. சிறிது நேரம் சென்றதும் வேறொருவன் கிழவனைத் தெருவின் தெற்குப்புற ஓரமாகக் கொண்டு நிறுத்தினான். தன் கடையின் முன் நிற்கக் கூடாது என்று கடைக்காரன் கட்டளையிட்டான். அப்புறம் மாறியபோது சர்பத் கடைக்காரனின் மேஜையின் மீது முட்டிக் கொள்ளவே அவனும் பலவாறு திட்டித் தீர்த்தான். ஒரு குறும்புக்காரச் சிறுவன் கிழவனின் தலையில் நறுக்கென்று குட்டிவிட்டு, வேறொருவனிடம், "தாத்தாவைக் குட்டாதேடா" என்று பரிந்தான்.

அந்தப் பழைய ரிக்ஷாக்காரன் மீண்டும் வந்து விட்டான்.

"தாத்தா, நின்னு வாடிப்புடுவியே, ஏணை தந்தா நான் கொண்டு போறேன்."

கிழவன் பரிதாபமான குரலில் கூறினான். "மவனே, படைச்சவன் துணையிருப்பான். நான் ரெண்டணாத் தருவேன்."

"தாத்தா, எதுனாச்சும் சாப்பிட்டியா?" என்று அச்சமயம் ஒருவன் கேட்டான்.

"இல்லே, ராசா!"

"அப்படின்னா சீக்கிரம் வீட்டுக்குப் போயி எதுனாச்சியும் தின்னு. இங்கே ஹோட்டல்லே முக்கா ரூவா குடுக்கணும்."

அப்போது வேறொருவன், "பொழுதாயிப் போயிடுச்சே" என்றான்.

"பொழுது ஒண்ணும் ஆகலே. சூரியன் நேரே என் முகத்திலே அடிக்குதே" என்றான் கிழவன். இந்தப் பதில் யாவருக்கும் பிடித்திருந்தது. குருடர்களுக்கு அறிவு மிகுதிதான் என்று யாரோ சொல்லிக் கொண்டார்கள். அதை அனைவரும் ஒப்புக் கொண்டனர்.

"ஆறு, யாராவது உங் கையிலிருக்கிறதைப் பிடுங்கிட்டுப் போகப் போறாங்க."

"என் கையிலே ஒண்ணும் இல்லியே!" என்றான் கிழவன். கிழவன் மீண்டும் சிலரிடம் உதவி வேண்டினான். சர்பத் கடைக்காரன் ஒரு வழி கூறினான்.

"தாத்தா, யாராச்சும் சின்னப் பசங்க கொண்டு போய் விடுவாங்க. எதுனாச்சியும் குடுத்தாப் போதும்!"

"யாரு செய்யப் போறான்?"

பல சிறுவர்களிடம் கிழவன் பேரம் நடத்தினான். அரையணாவுக்கு மேல் ஒரு சல்லிக் காசு கூடக் கொடுப்பதாகத் தரக் கிழவனுக்கு மனமில்லை. இவ்விதமாக ஒரு மணி நேரம் சென்றது.

இதை யெல்லாம் கவனித்தவாறே நின்று கொண்டிருந்த ஒரு சிறுவன் கிழவனை அணுகினான். "தாத்தா! நான் கொண்டு போய் விடுறேன்."

"அரையணாத்தான் தருவேன்" என்று கிழவன் திட்டவட்டமாக அறிவித்தான்.

"எனக்கொண்ணுமே தர வேண்டாம்" என்றான் சிறுவன்.

கிழவனது பொக்கை வாய், மகிழ்ச்சி மிகுதியால் திறந்து கொண்டது.

"கண்ணு, உனக்கு ஆண்டவன் துணையிருப்பான். கண்ணில்லாத இந்தக் குருடனுக்கு உதவி செய்யறே. நல்ல பிள்ளைங்க அப்படித்தான். நீ நூறு வருசம் வாழணும்." கிழவன் சிறுவன்மீது ஆசிகளாகப் பொழிந்து தடவியவாறே தன் கையை நீட்டினான்.

"ஆனால், நாலு மணி நேரம் பிடிக்கும் அங்கே போய்ச் சேர" என்றான் சிறுவன்.

"ஆறு மணி நேரம் பிடிச்சாலும் சரி தான். எனக்கு அவசரமொண்ணுமில்லே."

"அப்புறம் வேறொண்ணு. தாத்தா, வழியிலே அங்கே போய்ச் சேரும் வரைக்கும் பேசவே கூடாது."

"பேசவே மாட்டேன். ஆண்டவன் ஆணை. 'ஊம்'ன்னுகூடச் சொல்லமாட்டேன். கிழவன் ஏன் பேசணும்? தாத்தாவைப் பிடிச்சுக்கோ!"

"அதெல்லாம் பிடிச்சுக்கிறேன். ஸ்டாண்டுக்குப் போனதும் நெறையக் காப்பியும் வாங்கித் தாரேன்!"

கிழவன் மகிழ்ச்சியால் திக்குமுக்காடிப் போனான். சிறுவனைக் கட்டியணைத்து முத்தமிட்டு அவன் தீர்க்காயுசாய் வாழ வேண்டும் என்று ஆயிரம் முறை வாழ்த்தினான்.

சிறுவன் கிழவனைப் பிடித்துக் கொண்டு நடந்தான். வழியில் தான் இட்ட நிபந்தனையைப் பல முறைகள் வற்புறுத்தினான்.

அவர்கள் முல்லைக் கல் வழியாகத் தெற்கு நோக்கிப் போவதற்குப் பதிலாக வடக்குப் புறமாக நடந்தார்கள். அங்குதான் பணக்காரர்களும் வியாபாரிகளும் வாழ்ந்தனர்.

தான் முடித்த பேரத்தினால் இதுவரை அவனுக்கு நஷ்டம் ஏற்படவில்லை. இட்டத் தட்ட எட்டணா கிடைத்திருந்தது. பூத்தனங்காடி வழியே போய்க் கொண்டிருந்த போது கிழவனது மூளையில் பல யோசனைகளும் தோன்றிக் கொண்டிருந்தன. நடந்த தென்னவென்று அவனுக்கு விளங்கிவிட்டது. கிழவன் மௌனத்தைக் கலைத்தவாறே, "கண்ணு, உனக்குப் புண்ணியம் கிடைக்கும்" என்றான். சிறுவன் அதை ஒப்புக் கொண்டான்.

"செஞ்ச வேலைக்குத்தான் கூலி வாங்கணும். அதுதான் நிலைக்கும்."

எல்லாமே நிலைக்கும் என்று சிறுவன் வாதாடினான்.

கிழவன் தொடர்ந்தான்: "கண்ணு, சத்தியம் வேணும். இப்பவே, எவ்வளவு கெடச்சது அப்படின்னு நான் கேட்டால் நீ சத்தியமாச் சொல்லணும். நல்ல பிள்ளைங்க அப்படித்தான்."

இவ்வாறு பேசிக் கொண்டே அவர்கள் பூத்தனங்காடியை அடைந்தனர். அங்கும்

ஏதாவது 'கிடைக்கும் என்று கிழவனுக்குத் தோன்றியது. இன்னும் பேசாமலிருப்பது என்பது முடியாத காரியமாகி விட்டது.

சில்லறை கிலுகிலு என்று குலுங்கி விழ் வதை எத்தனை நேரம்தான் அவன் கேட்டுக் கொண்டிருப்பது?

''எவ்வளவு கெடச்சது ராசா ?''

அவன் பதில் ஒன்றும் கூறவில்லை. கிழவன் மீண்டும் கேட்டான்.

''ஏன் கேக்கிறீங்க?'' என்று சிறுவன் மிரட்டினான். ஒரு கடையின் முன் சென்ற போது கிழவன் தன்னையறியாமல் கைநீட்டி னான். ஆனால் சிறுவன் காசை வாங்கிக் கொண்டான்.

''நீங்க ஏன் கை நீட்டினீங்க?''

கிழவன் சிரித்தவாறே, ''நீதான் எவ் வளவோ வாங்கிட்டியே கண்ணு. அவனவ னுக்குப் பாத்தியதை இருக்கிறதைத்தான் வாங்கணும்'' என்றான்.

''அப்பமின்னா, உங்களுக்கு இன்னிக்குக் காப்பியும் கிடைக்காது. பஸ் ஸ்டாண்டுக்கும் போக மாட்டீங்க.''

கிழவன் நடுங்கி விட்டான். இனிமேல் கைநீட்ட வில்லை என்று கூறினான். சிறிது தூரம் நடந்ததும் கிழவன், ''தாத்தாவுக்குச் எதுனாச்சியும் குடுக்கணும் கண்ணு. பஸ் கூலி தந்தால் போதும்'' என்றான்.

சிறுவன் ஒன்றும் பேசவில்லை. இவ்வாறாக ஆலப்புழையின் பெரும் பாகத்தையும் நடந்து தீர்த்தனர். கங்கச் சாவடிக்கு வந்ததும் கிழவனுக்கு ஒரு புது யோசனை தோன்றியது.

''நாம்ப சொன்ன நேரம் கடந்து போச்சு. இனிமே கிடைக்கிறதிலே முக்கால் பங்கு எனக்கு, கால் பங்கு உனக்கு. என்ன ராசா ?''

பேரத்தின்படி இன்னும் இரண்டு மணி நேரம் பாக்கி உள்ளது என்று சிறுவன் கூறினான். கிழவன் அதற்கு ஒப்பவில்லை. ஆனால் சிறுவன் காப்பி வாங்கித் தர இய லாது என்ற போது கிழவன் மௌனமாகி விட்டான். சிறுவன் முடிவில் கேட்டான்.

''தாத்தா! ஒங்களுக்கு ஏன் இந்த அவ சரம்? நான் காப்பியும் அதுக்கு மேலே எதுனாச்சும் தரமாட்டேன்னு ஒங்களுக்கு எப்பிடித் தெரியும் ?''

''அப்பிடிச் சொல்லு ராசா. அப்படின்னா நான் நாளைக்கும் வாரேன்!'' சிறிது நேரம் பொறுத்துக் கிழவன் கேட்டான். ''சரி, ராசா, தாத்தாவுக்கு எம்புட்டுத் தருவே ?''

''அதெல்லாம் வண்டியிலே ஏறினதும் பார்க்கலாம்.''

வெகு நேரத்துக்குப் பின்னர் பஸ் ஸ்டாண்டை அடைந்தனர்.

''கண்ணா, நமக்கு டீ குடிக்க வாணும்?'' கிழவன் சிறுவனை அணைத்துக் கொண் டான். ''எங்கே இருக்கு ராசா சாயாக் கடை ?''

கண்ணிமைக்கும் நேரத்தில் சிறுவன் கிழ வனின் அணைப்பிலிருந் தும் விடுபட்டு விட்டான். கிழவன் ஆவேச மாக நாற்புறங்களிலும் கைகளை இட்டுத் துழாவியவாறே, ''ராசா, ராசா !'' என்று கூக்குரலிட்டு அழைத்தான். அவனது குருட்டுக் கண்களைச் சுற்றிலுமுள்ள தசைப் பிண்டம் சுருங்கிச் சுருங்கி விரிந்தது. கிழவன் சிறுவனை வசைமாரி பொழிந்தான். ஆனால் சிறுவனோ ஏதோ மூலையில் மறைந்து போய் விட்டான்.

கொச்சி பஸ்ஸின் கண்டக்டர் கிழவ னருகே வந்து, ''தாத்தா, வாரியா ?'' என்று கேட்டான். வண்டியில் ஏறாமல் என்ன செய்வது? பஸ்ஸில் ஏறிய பின்பும் கிழவன் வசைபாடிக் கொண்டே இருந்தான்.

வீட்டுக்குச் சென்றதும் கிழவன் மகனைத் திட்டத் தொடங்கினான். ''நீயெல்லாம் உருப்படப் போறியா? நான் இப்பிடி வய சாளி கண்ணும் இல்லாமே கிடக்கிறேனே. புத்திசாலிப் பிள்ளைங்க பணம் பண்ணிட் டாங்க. அந்தப் பயலுக்குப் பத்து ரூவா கிடைச்சது. அது இங்கே வர வேண்டிய சொத்தில்லே!''

---

## இப்படியும் ஒரு ஹோட்டல்!

பாரீஸ் நகரில் ஆல்பர்ட் என்பவர் ஒரு வேடிக்கையான ஹோட்டல் நடத்துகிறார். வாசலில் உள்ள போர்டில் ''சுகாதாரமற்ற உணவு, அன்பு இல்லாத உபசரிப்பு, பிடிக்காத மனிதர்கள், அதிக விலை'' என்று எழுதி இருக்குமாம்! உள்ளே போனதும் சாப்பிட்டுக் கொண்டு இருக்கும்போது ஒருவர் வந்து நீங்கள் சாப்பிட்டது போதும் என்று சொல் லித் தட்டை எடுத்துப் போய்விடுவாராம். அல்லது உங்கள் உணவில் தேள் அல்லது எட் டுக்கால் பூச்சி கிடக்குமாம்! — நிஜமானது



அல்ல, பிளாஸ்டிக்கால் செய்யப்பட்டது. வாத்தியக்காரர்கள் மோசமான சங்கீதம் இசைப்பார்கள். சர்வர் 'டிப்'புக்காக உங்கள் தலையைக் குறிபார்த்து ஒரு துப்பாக்கியை நீட்டுவாராம். சாதாரணமாக உள்ளே வரும் போது காலைத் துடைத்துவிட்டு வருவது போல் இல்லாமல் இந்த ஹோட்டலை விட்டு வெளியே போகும்போதுதான் உங்கள் செருப் புக்களை மிதியடியில் துடைத்துவிட்டுப் போக வேண்டும். இருந்தும் இந்த வேடிக்கை களை ரசிப்பதற்காக எப்போதுமே இங்கு கூட்டம் அதிகம்.

'ஸண்டே ஸ்டாண்டர்டு'

'ஆவாரா'

---



# கண்ணன் பாதம்

ரா. கணபதி

"மாமா! ஒரு சந்தேகம்" என்று லலி முகத்தை நிமிர்த்தியவுடன் எனக்குக் 'குளிர்' பிறந்தது. என் அறிவுக்கு — அதாவது அறிவின்மைக்கு — பரீட்சை வைத்து விடுவாளோ என்று பயந்தேன்.

லலியைப் பார்த்தால் அப்படித் தோன்றாது — இருந்தாலும் மகா புத்திசாலி. நாலு, ஐந்து வயசுக்கே புராணக் கதைகள் பல அவளுக்கு அத்துபடி. கதை சொல்வதோடு நிற்க மாட்டாள். நாம் கதை சொல்லும்போதும் 'பைப'யான குறுக்குக் கேள்வி போட்டுத் திணற வைத்து விடுவாள்.

ஓர் உதாரணம் சொல்கிறேனே! 'அசுவத்தாமன் இறந்து விட்டான்' என்ற பொய்க் கோஷத்தைக் கண்ணன் எழுப்பியவுடன், அசுவத்தாமனின் தந்தையான துரோணர் போரில் செயலிழந்து நிற்க, உடனே அர்ஜுனன் அவரை வெற்றி கண்ட கதையைச் சொல்லிக் கொண்டிருந்தேன். "அசுவத்தாமன்தான் சிரஞ்சீவிகளில் ஒருத்தராச்சே! அவன் செத்துப் போனதாச் சொன்னதைத் துரோணர் எப்படி நம்பினார்?" என்று குழந்தை லலி கேட்டாள். இந்தக் கேள்வியை இன்று பண்டிதர்களிடம் நானும் திருப்பிக் கேட்கிறேன்.





அந்த நாளிலேயே அப்படி என்னைத் திணற வைத்த லலி இப்போது பன்னிரண்டாவது வயசில் "மாமா! ஒரு சந்தேகம்" என்று வந்தவுடன் எனக்குக் கலக்கம் ஏற்பட்டது நியாயந்தானே?

ஆயினும் கை கற்றதைக் காட்ட



கொள்ளாமல், "என்னம்மா சந்தேகம்?" என்று கேட்டேன்.

"கிருஷ்ணன்தான் விஷ்ணுவின் பூரண அவதாரமாம். விஷ்ணு சகஸ்ரநாமம் சொல்லித்தான் கிருஷ்ணனுக்கு அர்ச்சனை பண்ணணுமாம். கிருஷ்ண அஷ்டோத்தரம் சொல்லித்தான் விஷ்ணுவுக்கு அர்ச்சனை பண்ணணுமாம். விஷ்ணு சஹஸ்ரநாமத்திலே 'அம்ருதவபு:' என்று ஒரு பேர் வரதே, அது எப்படி கிருஷ்ணனுக்குப் பொருந்தும்? இதுதான் சந்தேகம்" என்றாள் லலி.

"பொருந்தாமல் என்ன? கிருஷ்ணனுக்கு அழிவில்லாத சரீரம் இருந்தால் அவனும் 'அமிருத வபு'தானே?" என்றேன். குட்டி ஒரு மடக்கு மடக்கப் போகிறாள் என்று உள்ளூறக் கிலிதான்.

"கிருஷ்ணனுக்கு எங்கே மாமா அழியாத சரீரம் இருந்தது? வேடனுடைய அம்பு காலில் பட்டதும்தான் அவர் உடம்பு அழிஞ்சுடுத்தே!" என்றாள் லலி. கண்ணன் உடல் அழிந்ததாகச் சொல்வது அவளுக்கே கஷ்டமாகத்தான் இருந்தது. எனக்கும் இனம் தெரியாத வேதனை உண்டாயிற்று.

அந்த உடம்பு அழிந்தால் என்ன? பின்பும் பக்தர்களுக்குக் கண்ணன் தரிசனம் தந்து கொண்டேதானே இருக்கிறான்? அதனால் அவன் அமிருதவபுதான் என்று எனக்குள் சொல்லிக் கொண்டேன். இருந்த போதிலும் வேடனின் அம்பு புஷ்பப் பாதத்தில் பொத்தியதும், உடனே பகவானின் உயிர் பிரிந்ததும் நெஞ்சில் உறுத்திக் கொண்டு நின்றது. 'இலட்சிய மானுடனாகவே வாழ்ந்த ராமனின் விஷயம் வேறு! கண்ணனின் உடம்பு சாமானிய மானுட காயம் போல் அம்பு பட்டு அழியலாகுமா?' என்று யோசித்தேன்.

யோசனை முடிந்தது. தொண்டையைக் கனைத்துக் கொண்டேன்.

"பாபு, ஸ்ரீராம், சங்கர்! மாமா கதை சொல்லப் போறா, வாங்கடா" என்று தம்பிமார்களுக்குக் குரல் கொடுத்தாள் லலிதா.

துவாரகாபுரி அல்லோலகல்லோலப்பட்டது. நகரம் முழுவதும் பயபக்தி பூரித்து நின்றது. 'பயபக்தி' என்று சொல்வது மிகவும் பொருத்தம். ஏனெனில், மக்களிடம் பக்திக்குச் சமமான பயமும் குடி கொண்டிருந்தது. அந்தப் பக்தியுடனே—பயத்துடனே — தங்கள் வீடுகளையும் சாலைகளையும் அதிகாலையிலிருந்து அலங்கரித்துக் கொண்டிருந்தார்கள். பொழுது ஏற ஏற பக்தியைவிடப் பயமே அதிகமாகிக் கொண்டிருந்தது.

காரணம், அன்று கோப முனிவராகிய தூர்வாஸர் துவாரகைக்கு விஜயம் செய்ய இருந்ததுதான். 'எங்கே அபசாரம் நடக்கும், எப்போது சாபம் கொடுப்பது?' என்று காத்துக் கொண்டிருக்கும் ரிஷிபுங்கவர் வருகிறார். அவர் நல்லபடியாக எழுந்தருளி விட்டுத் திரும்ப வேண்டுமே' என்பதுதான் மக்களின் வியாகுலமாயிருந்தது.

இத்தனையிலும் கண்ணனோ லவலேசமும் மனக்கிலேசம் இல்லாமல் நீருண்ட முகில் போல் தண்ணென்றிருந்தான். இந்த முகில் இடிக்கவில்லை. கனைத்து உறுமித் திசைக்குத் திசை பாயவும் இல்லை. விளிம்பு முட்ட நிற்கும் தடாகம் போல் பிரசாந்தமாக, பிரசன்னமாக இருந்தான் பெருமான்.

பகல் பத்து நாழிகைக்கு நகரத்தோரையும் அழைத்துக் கொண்டு, நாயகியரும் அரண்மனைப் பிரமுகர்களும் புடைசூழ ஊர் எல்லைக்குச் சென்றான் கண்ணன் — கோப முனிவரை வரவேற்க. நீண்ட நேரம் பொறுமையுடன் காத்திருந்தான், சோதனை செய்வதில் நிபுணத்துவம் பெற்றவர் வருகைக்காக.

உச்சி வெயில் சமயத்தில் தூர்வாஸர் தமது சீடர்கணத்துடன் தொலைவில் தென்பட்டார். இரட்டைத் தாமரைகளுடன் இடம்பெயர்ந்த நீலோத்பலம் போல், ருக்மிணி சத்தியபாமையுடன் கண்ணன் முனிவரின் சமீபத்துக்கு விரைந்து, விழுந்து வணங்கினான். தனது திவ்யமான உத்தரீயத்தையே எடுத்து நடைபாவாடையாக வீதியில் விரித்தான்.

தூர்வாஸரின் கண்கள் சிவந்தன. கோபத்தில் சிவந்தனவா, நெடும்பசிக் கண்ணீரில் சிவந்தனவா என்பது முனிவருக்கும் கண்ணனுக்கும்தான் தெரியும். இருந்தாலும் மாயை யாரை விட்டது? கண்ணனுக்குத் தெரியாததும் உண்டு என்ற நினைப்பில் முனிவர் கோபாவேசத்தை ஏற்றுக் கொண்டார்.

"மாட்டுக்காரப் பயலே! உன் உடம்பிலே பட்டு, வியர்வையில் ஊறிய வஸ்திரத்தின் மீதா நான் கால் வைப்பேன்? நகரத்துக்குள் நுழையுமுன்பே என்னை அவமானம் செய்து விட்டாயே! உன் ஊருக்குள் நான் பிரவேசிப்பதில்லை" என்று திரும்பி விட்டார் தூர்வாஸர்.

'அமிருத வடி'வைப் போர்த்திய ஆடைதான் அவருக்கு அவமானச் சின்னமாகி விட்டது!

"மகாமுனே! க்ஷமிக்க வேண்டும். தங்களுக்குக் கட்டாந்தரையும் ஒன்றுதான், காச்மீர விரிப்பும் ஒன்றுதான். என் அறியாமையால் நடைபாதை விரித்தேன். அதற்காகக் கோபிக்க மாட்டீர்கள் என்பதும் எனக்குத் தெரியும். தங்கள் திருஷ்டி எப்போது துவாரகைப் புறமாக விழுந்துவிட்டதோ, தங்கள் திருமேனியில் பட்ட காற்று எப்போது துவாரகைக்குள் புகுந்ததோ அப்போதே தாங்கள் துவாரகைக்கு வந்து அருள்பாலித்து விட்டீர்கள். இனி, தங்கள் அருளைப் பொழிய வேறிடம் செல்ல விழைகிறீர்கள். என்றாலும், எங்களைப் போன்ற சாமானிய மக்களுக்குத் தங்களை ஸ்தூலமாக நகருக்குள் அழைத்துச் சென்று உபசரித்தால்தானே மன நிறைவு உண்டாகும்?" என்று பணிவுடன் கூறினான் பரந்தாமன். பணிவான வார்த்தைகளிலேயே ஒவ்வொன்றுக்கும் ஓர் உள் அர்த்தம் இருக்கத்தான் செய்தது!

ஸ்துதிக்கு மயங்காதவர் யார்?

"ம்.... சரி, உன் நகருக்குள் வருகிறோம்" என்றார் முனிவர்.

"என் நகரமா? நன்றாகச் சொன்னீர்கள். உங்கள் நகரமல்லவா இது?" என்றான் திரிலோகாதிபதி.

தூர்வாஸருக்கு உச்சி குளிர்ந்துவிட்டது.

அர்க்கிய — பாத்ய — ஆசமனீய உபசாரணைகளையெல்லாம் அங்கேயே பெற்றார். அவரது பாதத்தைக் கழுவிய நீரைக் கண்ணன் தன் மீதும், மனைவியர் மீதும், மக்கள் மீதும் செந்தாமரைக் கையால் புரோட்சித்தான். தேவர்களுக்கான காட்சி அது!

"நான் அனுஷ்டானங்களை முடித்தாகி விட்டது" என்றார் முனிவர்.

"மிகவும் மகிழ்ச்சி" என்றான் மாதவன்.

"நீ மகிழ்வதற்காகவா சொல்கிறேன்? துளிக்கூடக் குறிப்பறிந்து சுசுருஷை செய்ய உனக்கு அறிவில்லையே!" — சீறினார் முனிவர்.

"தவறுதான் தவமுனிவரே! தாங்கள் அனுஷ்டானம் முடித்துவிட்டுத் திருஅமுது கொள்ளச் சித்தமாயிருப்பதைப் புரிந்துகொண்டேன். நகரத்துக்குள் சென்று அரண்மனையில் தாங்கள் எழுந்தருளும் வரை விருத்தர்களாகிய தங்களைப் பட்டினி போடும் பாபத்துக்கு ஆளாக மாட்டேன். ஆசாரகுத்தம் தவறாத அந்தணாளர்கள் இதோ எங்களுடன் இங்கேயே அறுசுவை உண்டி கொண்டு வந்திருக்கிறார்கள். தாங்கள் இங்கேயே உண்டு, பிறகு வேண்டிய மட்டும் களைப்பாறி, அதன் பின் பவனியாகப் பட்டணப் பிரவேசம் செய்தால் போதும்!" என்று விநயமுற மொழிந்தான் கண்ணன்.

நகர மாந்தருக்கெல்லாம் படைபதைக்கும் வெய்யிலில் தங்களை நிறுத்தி வைத்துவிட்டாரே என்று கணக்கமாகத்தான் இருந்தது. இருந்தாலும் தங்களது அன்பு அரசனுக்குக் கட்டுப்பட்டு அமைதியுடன் இருந்தனர்.

தூர்வாஸருடைய உடம்பில் ஓர் ஆட்டம் பரவியது. "கண்ணா! உன் வஞ்சனையைப் புரிந்து கொண்டேன். நான் உன் நகருக்குள் வரக் கூடாது என்பதே உன் எண்ணம். எனக்கு இங்கேயே உணவு உள்பட எல்லா உபசாரங்களும் தந்து இப்படியே அனுப்பி விட வேண்டும் என்றுதான் ஊருக்கு வெளியே அன்னம்கூடக் கொண்டு வந்திருக்கிறாய். உனக்காக விட்டுக் கொடுப்பதில்லை. துவாரகைக்குள் வந்தே தீருவேன்" என்று உரக்க மொழிந்தார்.

"நான் தவறாக நடந்ததாலேயே, துவாரகைக்குத் தங்கள் பொன்னடி ஸ்பரிசம் கிடைக்கிறது. அது ஒருபுறம் இருக்க, தங்களைத் தஞ்சமடைந்தபின்னும் என் மனத்தில் தவறான எண்ணம் உதிக்கத் தாங்கள் அநுமதிக்கலாமா? பிரபோ, துவாரகைக்கு இப்போதே தாங்கள் பட்டணப் பிரவேசம் செய்யலாம். ரதம் அதற்குச் சித்தமாகக் காத்திருக்கிறது" என்றான் பார்த்தசாரதி.

"சரி, சரி! முதலில் ஆகாரத்தை முடித்துக் கொள்கிறேன்" என்றார் தூர்வாஸர்.

பொற் பாத்திரங்களில் நானாவிதமான பக்ஷ்யபோஜ்யங்களும் கமகமத்துக் கொண்டிருந்தன.

முதலில் அருமையான பாயசம் நிரம்பிய கிண்ணத்தைக் கையில் எடுத்துக் கொண்டார் தூர்வாஸர். விளக்கெண்ணெயை எடுப்பதைவிட அதிக அருவருப்பு அவர் முகத்தில் வழிந்தது. உதட்டருகில் கிண்ணத்தை எடுத்துப் போனவர் சிறிது நேரம் அதை அப்படியே வைத்திருந்தார்.

அவருடைய உதடுகள் மட்டும் ஏதோ மெல்ல முணு முணுத்தபடியிருந்தன. அவரே வெளியுலகத்தின் காதுக்குப் பொறுக்காது என்று கருதி வாய்க்குள் வைது கொண்டதாகத் தோன்றியது.

"தூ!" என்று பாயசக் கிண்ணத்தில் உமிழ்ந்தார். அந்தக் கோபத்தில் கிண்ணத்தை அப்படியே உருட்டி விடாமல் அவர் நிதானமாகக் கீழே வைத்தது அதிசயம்தான்.

"இப்படி ஒரு பாயசம் தந்ததற்கு உனக்கு என்ன தண்டனை தர வேண்டும் தெரியுமா?" என்றார் கண்ணனை நோக்கி.

## வெள்ளி விழா நன்றி அறிவிப்பு

1942 ஆகஸ்டு — 1967 ஆகஸ்டு

### என். கே. சுந்தரவரதன் அண்டு கம்பெனி

(ஸ்தாபிதம்: ஆகஸ்டு, 1942)

12, மந்தர் தெரு, சென்னை-1

எங்கள் கம்பெனி தொடங்கியது முதல் ஆதரவும், உற்சாகமும் அளித்து வந்துள்ள வாடிக்கைக் காரர்களுக்கும், அன்பர்களுக்கும், ஆதரவாளர்களுக்கும் எங்கள் கம்பெனி 25 ஆண்டு பூர்த்தி அடைந்து 26-வது ஆண்டைத் துவக்கும் இந்நன்னாளில் எங்களுடைய உளங்கனிந்த நன்றியைப் பணிவுடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம். வருங்காலத்திலும் உங்கள் பேராதரவு வேண்டுகிறோம் தொடர்ந்து விரிவாகக் கொடுத்துக்கொண்டே இருந்தால் வேண்டும் என்று இறைஞ்சுகிறோம்.

B. சுந்தரவரதன், உரிமையாளர்
என். கே. சுந்தரவரதன் அண்டு கம்பெனி



## பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு
### பிரைவேட் லிமிடெட்

"பாலுஸேரி பில்டிங்ஸ்"

3, சிங்கராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி
தபால் பெட்டி நெ. 414. மதறாஸ்-5
தந்தி: 'EVERMANS' போன்: 85834

மதறாஸ் சிட்பண்டு 1961 ஆக்ட்படி மேற்கொண்டும் சிட்டுகள் நடத்தப்படுகின்றன
(மதறாஸ் ஆக்ட் நெ. 24 of 1961)

25 மாதங்கள் — குறுகிய காலச் சிட்டுகள் — 25 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சிட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சிட்டுத் தொகை |
|---|---|---|---|---|---|
| A | ரூ. 200 | ரூ. 5000 | D | ரூ. 25 | ரூ. 625 |
| B | ரூ. 100 | ரூ. 2500 | E | ரூ. 20 | ரூ. 500 |
| C | ரூ. 50 | ரூ. 1250 | F | ரூ. 15 | ரூ. 375 |

40 மாதங்கள் — நீண்ட காலச் சிட்டுகள் — 40 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சிட்டுத் தொகை |
|---|---|---|
| LTA | ரூ. 500 | ரூ. 20000 |
| LTB | ரூ. 250 | ரூ. 10000 |
| LTC | ரூ. 125 | ரூ. 5000 |

சேரும் குருப்பை விவரித்து எங்கள் விதிகளுக்கு எழுதவும்

கிளைகள்: புது டில்லி - பம்பாய் - பெங்களூர் - கல்கத்தா

**எங்கள் சேவை உங்களுக்குத் தேவை**

VSK—88C—1000 TM—K

# இவர் யார்?

**அமெரிக்காவிலிருந்து**
**தமிழ் நாட்டிற்கு**
**வந்திருக்கும் உலக மேதை**



[ 77-ஆம் பக்கம் பார்க்கவும்

# அக்கோப்ரூ:ப்

## பவுடர்




**உபயோகிக்கச் சுலபமானது, எடுத்துச் செல்ல வசதியானது**

சிறந்த ஸிமெண்ட்-வாட்டர்ப்ரூஃபிங் தயாரிப்பான அக்கோப்ரூஃப் பவுடர், உபயோகிப்பதற்கும், இடத்திற்கு இடம் எடுத்துச்செல்லவும் வசதியாக இருக்கும்படி பேக் செய்யப்பட்டுள்ளது. 1 கிலோ பெட்டியானாலும், 20 கிலோ ட்ரம்மானாலும், வசதியாக, சேதமில்லாமல் இடத்திற்கு இடம் எடுத்துச் செல்லலாம்.

அக்கோப்ரூஃப் பவுடர் ஸிமெண்டுடன் இரண்டறக் கலந்து ஸிமெண்டை முற்றிலும் நீர் கசியாததாக்குகிறது. ஸிமெண்ட் காரை அல்லது கான்க்ரீட்டுடன் அக்கோப்ரூஃப் பவுடர் கலப்பதற்கு குறைந்த அளவு தண்ணீரே தேவைப்படுகிறது. அக்கோப்ரூஃப் பவுடரின் விசேஷம் என்னவென்றால், அது ஸிமெண்டின் உறுதி, இறுகும் தன்மை முதலிய குணங்களைப் பாதிப்பதில்லை.



1 கிலோ கிராம் பெட்டிகளிலும், 20 கிலோ கிராம் ட்ரம்களிலும் இந்த விலாசத்தில் கிடைக்கும்:

தி ஸிமெண்ட் மார்க்கெட்டிங் கம்பெனி ஆஃப் இந்தியா லிமிடெட்

ஸிமெண்ட் ஹவுஸ், 121, க்வீன்ஸ் ரோடு,
பம்பாய்-1

அகமதாபாத் . பெங்களூர் . கல்கத்தா . கோயம்புத்தூர் . புது டெல்லி . இந்தூர் . கான்பூர் மதராஸ் . பாட்னு . செகந்திராபாத் கிளைகளிலும் கிடைக்கும்.

ஸிமெண்டை நீர் கசியாததாக்குவதற்கான பொருள்களுக்கென விதிக்கப் பட்டிருக்கும் இந்தியன் ஸ்டாண்டர்ட்ஸ் ஐ எஸ்: 2645-1964 க்கு ஏற்ப அக்கோப்ரூ:ப் தயாரிக்கப் படுகிறது.

## அக்கோப்ரூ:ப்

ஏஸிஸி அளிக்கும்
ஸிமெண்ட்-வாட்டர்ப்ரூஃபிங்
தயாரிப்பு

தி அஸோஸியேடெட் ஸிமெண்ட் கம்பெனீஸ் லிமிடெட்

MCI-5787 தி ஸிமெண்ட் மார்க்கெட்டிங் கம்பெனி ஆஃப் இந்தியா லிமிடெட்

"எந்த தண்டனை தந்தாலும் வெகுமதியாக ஏற்கிறேன்" என்றான் கண்ணன்.

"தொலைகிறது. பட்டண பவனி தொடங்கலாம்" என்றார் தூர்வாஸர்.

ஜாதிப் புரவிகள் பூட்டிய ஸ்வர்ண ரதம் வந்து நின்றது.

"அவமானம், அவமானம்! நொண்டிக் குதிரைகளைப் பூட்டி உடைசல் ரதத்தைக் கொண்டு வந்திருக்கிறாய்!" என்றார் முனிவருக்குப் பெயரெடுத்த முனிவர்.

"ஸ்வாமி, குதிரைகளை அவிழ்த்துவிட்டு நானே ரதத்தை இழுத்துச் செல்கிறேன். எனக்கு அதுவே சரியான தண்டனை" என்றான் கண்ணன்.

தூர்வாஸர் ஒரு விநாடி தலை குனிந்து நின்றார். ஏதோ தீர்க்கமான சிந்தனையில் அவர் அமிழ்ந்து விட்டார். பிறகு, "அது தான் யுக்தம். தேரை நீயே இழுப்பதுதான் நியாயம். பாயஸம் என்று விஷத்தைத் தந்தாயே, அதற்கும் தண்டனை பெற்று இப்போதைக்கிப்போதே பாபத்தைத் தொலைத்துக் கொண்டு விடு. அதாவது, அந்தக் கிண்ணத்தில் இருக்கும் பாயஸம் முழுவதையும், ஒரு துளி மீதமில்லாமல் உன் உடம்பு முழுவதிலும் ஓர் அணு மீதம்விடாமல் பூசிக் கொள்ள வேண்டும். அப்புறமாக வந்து இந்த ரதத்தை இழுத்துப் போக வேண்டும்" என்றார்.

துவாரகை மக்களுக்கு மாளாத வஞ்சினம் மூண்டது. இந்த ராட்சஸப் பிராமணனை அப்படியே கண்டம் கண்டமாக வெட்டினால் என்ன என்று அவர்களுக்கு ஆத்திரம் பற்றிக் கொண்டது.

கண்ணன் அவர்களைக் குளிரக் குளிரப் பார்த்தான். "ஸ்வாமியின் தேரை இழுப்பது போல் நாம் எல்லோரும் சேர்ந்து நடமாடும் தெய்வமாகிய முனிவரைத் தேரில் அமர்த்தி இழுத்துச் செல்வோம். ஜய மஹரிஷி!" என்று கோஷித்தான்.

"ஜய மஹரிஷி" என்று மக்களும் துக்கம் தொண்டை அடைக்கக் குரல் எழுப்பினர்.

உடலெல்லாம் பாயஸத்தைப் பூசிக் கொண்டும், கண்ணன் வாசனைப் பொடி போட்டுத் தேய்த்துக் குளித்து வந்தாற் போன்ற மனப் பாங்குடன் தெளிய வந்து நின்றான். பாயஸம் பூசியதால் அவனது கன்னத்திலும் முன் நெற்றியிலும் புனுகோதுபோல் சிகை ஒட்டிக் கொண்டிருப்பதைக் காண ருக்மிணியின் கண்களில் ரத்தம் தெறித்தது. அடிமை போல் இடையில் ஒரு துண்டை மட்டும் உடுத்திக் கொண்டு அவன் தேரின் ஏர்க்காலை அணுகியபோது மக்கள் அனைவரும் விம்மி விட்டனர்.

சற்றும் தயாதாட்சிண்யமின்றி ரதத்தில் ஏறி ஆசனத்தில் அமர்ந்தார் முனிவர்.

கண்ணனும், ராஜ ஸ்திரீகளும், மற்றோரும் வடம் பிடித்து இழுத்தனர்.

முனிவரின் உக்கிரம் போதாதென்று அன்று கதிரவனும் காய்ச்சி எடுத்தான். நேரமாக ஆகத் தனித்துத் தள்ளாடும் மக்களையெல்லாம் கண்ணன் விடை கொடுத்து அனுப்பி விட்டான். அருமைப் பத்தினிகளோடு தான் மட்டும் அயராமல் நீண்ட நீண்ட வீதிகளின் வழியே தேரிழுத்து வந்தான். "ஹூம், ஹூம்!" என்று அவ்வப்போது முனிவரிடமிருந்து ஹூங்காரம் வேறு பிறக்கும். கண்ணனை அவர் வெருட்டி விரைவுபடுத்தினாரா? அல்லது தமது கொடுமை தமக்கே தாங்க மாட்டாமல்தான் பொருமிக் கொண்டாரா? அடிக்கடி அவர் கண்களைத் துடைத்துக் கொண்டது ஏன்? "புழுதி பறக்கத் தேரை வேகமாக இழுத்து என் கண்களை அவிக்கிறாயே!" என்று கண்ணனிடம் அவர் சினந்து கொண்டது உண்மைதானா?

வேகமாகப் போனால் எலும்புகள் உடைவதாகப் பிரலாபிப்பார் தூர்வாஸர். மெல்ல இழுத்தாலோ சாட்டையால் அடிக்காத குறையாக வாய் வீச்சு செய்வார். கண்ணனின் பொறுமையும், அவன் மீது பத்தினிமார் கொண்டிருந்த அன்பும் இத்தனைக்கும் ஈடு கொடுத்தன. தாமரைப் பாதங்கள் பல அன்று துவராபதி வீதியில் கருகிக் கொப்புளித்தன. தாமரைக் கரங்கள் பல வடம் பிடித்துக் குருதிக் கசிந்து கன்றின.

கடைசியில் கண்ணனின் திருமாளிகையும் வந்து சேர்ந்தது.

இருக்கையிலிருந்து ஒரே குதியாகக் குதித்தார் தூர்வாஸர். அப்படியே ஓடிச் சென்று கண்ணனை வாரி அணைத்து கொண்டார்.

"மகாமுனே! ஆசாரவீனன் மீது தாங்கள் படலாமா?" என்று ஆசாரப் பிரபு கூறினான். "என் உடம்பெல்லாம் பாயஸம் வேறு. என்னைக் கட்டிக் கொள்வது தகுமா?" என்றான்.

தூர்வாஸர் சிரித்தார். கோபச் சிரிப்புச் சிரிக்கும் தூர்வாஸருக்கு அன்புச் சிரிப்பும், அன்பின் வெற்றிச் சிரிப்பும்கூடத் தெரிந்திருந்தன.

"பாயஸமா, உன் உடம்பில் பாயஸப் பசை சிறிதாவது இருக்கிறதா, பார்!" என்றார் கண்ணனிடம்.

ஆச்சரியம்தான்! கண்ணனின் திவ்விய தேகம் இயற்கையான செப்புத் தளிரப் பாயஸத்தின் பசையற்றே இருந்தது.

"நாதா, தாங்கள் உடம்பில் பாயஸமே பூசிக் கொள்ள வில்லை போலிருக்கிறது. எங்கள் பிரமைதான் இத்தனை நாழி அப்படித் தோன்றியது போல் இருக்கிறது" என்றாள் பாமை.



அமெரிக்காவில் உள்ள ஒரு சுரங்கத் தொழில் அதிபரான ஸ்பென்சர் பெத்ரோஸ் என்பவர் பணத்தைக் கண்டபடி செலவழிப்பார். ஒரு நாள் இம்மாதிரி செலவழிக்கக் கூடாதென்று அவருக்கே தோன்றியது. டைரியில் "நாளொக்கு ஒரு லட்சம் டாலருக்கு மேல் செலவழிக்கக் கூடாது என்று எழுதி வைத்துக் கொண்டாராம்."

ஆதாரம் ...: டிட் பிட்ஸ்" தகவல்: "பாரி"

துர்வாஸர் மீண்டும் மலர்ச்சியுடன் நகைத்தார். "இல்லை பாமா. கண்ணன் என் வார்த்தையைத் தட்டமாட்டான். உடலின் ஓர் அணு மீதம் விடாமல் அவன் பாயஸத்தைப் பூசிக்கொண்டுதான் இருப்பான். என்ன கண்ணா, வாஸ்தவம்தானே ?" என்று வினவினார் முனிவர்.

"ஓரளவுக்கு வாஸ்தவம்தான்" என்றான் வாசுதேவன்.

"என்ன புதிர் போடுகிறாய்?" என்றார் துர்வாஸர் சற்றே கலவரத்துடன்.

"தங்கள் ஆக்ஞையைச் சிறிதும் தட்டாமல் பூரணமாகப் பின்பற்ற வேண்டும் என்றுதான் ஆசை. இருப்பினும் அதற்காகத் தங்களிடமே அபசாரப்பட மனம் இடம் கொடுக்கவில்லை."

"நீ என்ன சொல்கிறாய்?" என்று கவலையுடன் கேட்டார் துர்வாஸர். அவரது மனக் குழப்பத்தில் அவரால் தமது தீர்க்கதிருஷ்டியைக்கூடப் பயன்படுத்த இயலவில்லை.

"பாயஸத்தை உடல் முழுதும் பூசிக் கொள்ளப் பணித்தீர்கள். நானும் சிகையிலிருந்து தொடங்கிப் பூசிக் கொண்டேன். இருப்பினும் மகானுகிய தாங்கள் பருகி மீந்த அந்தப் பிரசாதத்தைப் பாதத்தில் பூசிக் கொள்ள......."

கண்ணன் முடிப்பதற்குள் அலறிவிட்டார் முனிவர். "கெடுத்தாயே, கண்ணா!" என்று கேவினார்.

"ஏன் ஸ்வாமி, என்ன ஆயிற்று?" என்று வினவினான் மாயவன்.

"என்னை ஏன் அப்பனே கேள்வி கேட்கிறாய்? உனக்குத் தெரியாத மாயமா ?" என்று கூறிக் கண்ணீர் சிந்தினார் முனிவர்.

தெரிந்த விஷயத்தையே வெளிப்படச் சொல்வதில் ஓர் ஆறுதல் உண்டல்லவா ? எனவே, சிறிது போதுக்குப் பிறகு அவராகப் பேச்சைத் தொடர்ந்தார் :

"துரியோதனன் பேச்சைக் கேட்டு, வனவாசம் செய்கிற பாண்டவர்களிடம் சென்று எனக்கும் ஆயிரமாயிரம் சீடர்களுக்கும் விருந்து படைக்கச் சொன்னேன். காட்டிலே வாழும் அவர்களால் அது இயலாமல் போகும் என்றும், உடனே நான் அவர்களைச் சபிப்பேன் என்றும் துரியோதனன் எதிர்பார்த்தான். ஆனால், கண்ணா, நீ மாயம் செய்து விட்டாய். உன்னை நாடி நின்ற பாஞ்சாலிக்கு இறங்கி உடனே வனத்தில் தோன்றினாய். அவள் கழுவிக் கவிழ்த்திருந்த கப்பரையில் ஒட்டிக் கொண்டிருந்த ஒரு கீரைத் துண்டை எடுத்து உண்டாய். அந்தக் கணமே எங்கள் வயிறு முட்ட முட்ட நிரம்பி விட்டது. நீ மறைந்து விட்டாய். நான் பாண்டவர்களுக்கு வரம் தர முன் வந்தேன். அப்போது துரௌபதி சொன்னாள் : 'எங்கள் துயரங்கள் தீர வேண்டும் என்று தன்னலத்துடன் தங்களிடம் வரம் கோரவில்லை. இன்று என் தவிப்பைத் தணித்த கண்ணபெருமான் என்றென்றும் இந்த உலகில் வாழ்ந்து, என் போன்ற அபலைப் பெண்கள் தவிக்கும்போதெல்லாம் அபயம் தருமாறு தாங்கள் செய்ய வேண்டும். அவன் மாயாவி. எந்த விநாடி இந்த உடலைப் போட்டுவிட்டு வைகுண்டம் போய் விடுவானோ? அப்படி அவனைப் போக விடாமல் நீங்கள்தான் ஏதாவது மாயமந்திரம் செய்து கட்டிப் போட வேண்டும். இதுதான் நாங்கள் கோரும் வரம்' என்றாள்.

"கண்ணா, உன்னை அப்படிக் கட்டிப் போடுவதற்கே அசடனை நான் வைத்தியக் காரத் தந்திரம் செய்தேன். நீ அளித்தாயே பாயஸம், அதில் அமிருத சஞ்சீவினி மந்திரத்தை உறைவித்தேன். அதோடு என்னுள் இருக்கும் தபோபலத்தை எல்லாம் அதில் உமிழ்ந்தேன். அதை நீ சரீரத்தில் பூசிக் கொண்டு, கடும் வெய்யிலில் தேர் இழுத்தால் உன் சருமத்துக்குள் அது நன்றாக ஊறிவிடும். அதனால் உன் சரீரத்துக்கு அமிருத கவசம் உண்டாகி, அது அழிவில்லாத அமிருத வபுவாகி விடும் என்று ஆசைப்பட்டேன். நீயோ உன் பாதத்தில் அதைப் பூசிக் கொள்ளாமல் என்னை ஏமாற்றி விட்டாய். அபயமற்று உனக்காகத் தவிக்கப் போகிறவர்கள் எல்லோரையும் ஏமாற்றி விட்டாய்! உன் லீலைக்கு மாறாக நான் எப்படித் தந்திரம் செய்ய முடியும்?" என்று கூறி உடல் குலுங்கினார் அன்பு முனியாகிவிட்ட கோப முனிவர்.

"வேடனின் அம்பு பாதத்தில் பொத்தியதும் கண்ணனின் உடல் அழிந்தது ஏன் என்று இப்போது தெரிகிறதா?" என்று லலிதையைக் கேட்டேன்.

அவளது அகன்ற கண்கள் மேலும் அகன்றன. "போங்கோ மாமா, சும்மாக் கதை கட்டி விடறேள்! 'அக்கில்லிஸ் ஹீல்ஸ்' னுட்டு அப்பா முன்னே கதை சொன்னா: அக்கில்லிஸோட அம்மா அவனைத் தலைகிழா அமிருதக் குளத்திலே முக்கினளாம். கால் மட்டும் விட்டுப் போச்சாம். அதனால் அவன் கால்தான் அவனுக்குப் பலஹீனமான இடமாச்சாம். அந்தக் கதையையேதான் மாத்திக் கிருஷ்ணனுக்குச் சொல்லிட்டேள்" என்றாள்.

"அடி, அசடே! கிருஷ்ணன் கதையைக் கேட்டுட்டுத்தான் ஹோமர் அதையே கொஞ்சம் மாத்தி அக்கில்லிஸ் கதை எழுதிட்டார்... ஆமாம்.... இது புராணக் கதைதான். நான் ஏதோ கொஞ்சம் தாளிச்சுக் கொட்டியிருப்பேன், அவ்வளவுதான். ஸ்ரீ வத்ஸ ஸோம தேவசர்மாவை வேணுமானால் கேள்."

"புராணக் கதைக்கு எதுக்கு மாமா தாளிக்கணும்? ஹல்வாவுக்குத் தாளிப்பாளா?" என்று கேட்டபடி ஓடியேவிட்டாள் லலிதை.

நானும் அவளைப் பிடிப்பதற்காக வாசலுக்கு ஓடினேன்.

கிருஷ்ண ஜயந்தி என்பதால் அக்காள் தெருவிலிருந்து கண்ணன் பாதத்தை மாக்கோலமாகப் போட்டுக் கொண்டிருந்தாள். அம்பினால் நசித்தாலும் அன்பினால் அமரமாகி விட்ட பாதம்!

'தேவர்களின் அமிருதத் தன்மை வேண்டாம் என்று ஒதுக்கி, மனிதத் தன்மையுடன் இந்த நிலத்தில் தோய்ந்தே மகிழ்வேன்' என்று சொல்வதுபோல் சுத்தமாகச் சிற்றடிகள் மின்னின. திருவடி நினைவு தருவதற்காக இல்லந்தோறும் எழுந்தருளும் ஜகத் குருவின் பாத பதுமங்களைப் பணிந்தேன்.

# நலம் தரும் சொல்

'பூரம்'



**வா**னத்தில் வாரி இறைத்த வைரங்கள். ஓடை நீரில் துள்ளும் மீன்கள்....காற்றில் கலந்து வந்து நெஞ்சை நிரப்புகிற மல்லிகை மணம்.... தென்றலில் சிலிர்த்துத் தழுவும் மென்கொடியின் இணையிலாத சுகம்... சின் வண்டுகளின் ரீங்காரம்.... ஆலய மணியின் ஓங்காரம்.... கீழ்த் திசையில் பொங்கி வரும் புன்னகை நிலவு. முள் நிறைந்த காட்டுப் பாதையில் குறுக்கே ஓடி மறையும் சர்ப்பங்கள். தூரத்தும் கிரிகள்.... மாலை மயக்கத்தில் இசை தவறி மருண்டு நிற்கும் மான் குட்டிகள். அடர்ந்த மரங்களில் பழந் தேடும் வெளவால்கள்....

அந்தி மயங்கி வருகிறது: இருள் பரவி வருகிறது. இன்னும் மூன்று நாழிகைகள் நான் நடந்தால் போதும். மதுரை எல்லையில் இருப்பேன். பிறகு நாளைப் பொழுது புலர்ந்தால் என் தனி வாழ்க்கை ஆரம்பமாகி விடும். தனியாக நான் பிறந்தேன், தனியாக வளர்ந்தேன். தனியாக வாழ்வேன். இதோ என் கையில் இருக்கிற இந்த வேல் எனக்குத் துணை புரியும். தோளில் தொங்குகிற மூட்டையில் கல்லுளி இருக்கிறது. நான் கற்ற சிற்பக் கலை எனக்குத் துணை புரியும். என் உயிருக்குயிரான புல்லாங்குழல் இந்த மூட்டையில் இருக்கிறது. அந்தக் குழலிசையில் நான் உலகையே மயக்குவேன். முன்னோர் தந்த கவடிக் கட்டு மூட்டையிலே இருக்கிறது. வருங்காலக் குறி சொல்லிப் பிழைக்கவும் எனக்குத் தெரியும். வானத்தில் வாரி இறைத்த வைரங்களை, ஓடும் அருவியில் துள்ளும் மீன்களை, இந்த மல்லிகை மணத்தைக் கவிதையாக்கிப் பாட என்னால் முடியும். நான் ஒரு கவிஞன். ரசிகன். என் கவிதைகள் எல்லாம் இறைவனுக்கே உரியவை. காண்கிற எந்த அழகும், நான் ரசிக்கிற எந்த நளினமும் அந்த எம்பிரானின் சாயல்கள். ஆகா, மதுரை மாநகரைவிடத் திருமாலிருஞ்சோலையில் ஓர் இடத்தில் நிம்மதியாக வாழலாம். அழகர் பெருமானுக்குக் கைங்கரியம் செய்து கடைத்தேறலாம். வாழ்க்கையில் இனி வேறு என்ன இருக்கிறது? கள்ளழகர் கோயிலருகே ஒரு பர்ணசாலையை அமைத்துக் கொள்ள வேண்டியதுதான்! கவிபாடிப் பரிசுகள் தேவையான போது பெற்றால் நமக்குப் போதும்! திருக்கோயில் கைங்கரியம் செய்து கிடைக்கிற பிரசாதம் நம் வயிற்றை நிரப்பும். கள்ளழகப் பெருமான் இந்த அடியேன் ஒருவனைக் கடைத்தேற்ற மாட்டாரா?

நான் சென்று கொண்டிருக்கிற இந்தக் காட்டுப் பாதைதான் திருமாலிருஞ்சோலையாக இருக்க வேண்டும். நான் கேட்ட



ஓங்கார மணி ஓசை கள்ளழகர் கோயில் மணியாகத்தான் இருக்க வேண்டும். என்னை 'வா வா' என்று அழைப்பதைப் போலவே அந்த மணி ஓசை காதில் வந்து விழுகிறது.

நான் இருபத்தி நான்கு பிராயம் எய்தியாகி விட்டது. விரும்பிய கலைகள் கற்றுத் தேர்ந்தாகி விட்டது. வேறு என்ன வேண்டும்? நான் எவ்வளவு பாக்கியசாலி என்று எனக்கு இப்பொழுதுதான் புரிகிறது. பிறந்தவுடன் தாய் தந்தையரை நான் இழந்தேன். அதனால் என்ன குறைந்து போய் விட்டது? எங்கள் பொன்னி நாட்டில் பிறந்தவர்கள் யாருமே அநாதையாய்ப் பட்டினி கிடந்ததில்லை. ஆகா, குலபதி ஆசாரியன் தாடாளதாளரைப் போன்றவர்கள், தர்ம ஆதுர சாலைகளும், கல்வி பயிலும் பள்ளிகளும் நடத்தும்போது ஏன் ஒருவன் பட்டினி கிடக்க வேண்டும்? யுத்த காலத்தில்கூடப் பஞ்சம் வராத நாடல்லவா எங்கள் வளநாடு?

பொன்னி நதி பாயும் நாட்டில் பிறந்து வளர்ந்து, நான்கு ஆசிரியர்களிடம், நான்கு விதக் கலைகள் கற்றுத் தேர்ந்து, வாழ்ந்து முடித்த மனத் திருப்தியோடு நாட்டின் எல்லை கடந்து எதற்காக இந்தப் பாண்டிய நாட்டில் வந்து தங்க வேண்டும்? இங்கே வந்து ஏன் மோட்ச சாம்ராஜ்யத்தைப் பிரார்த்தனை செய்ய வேண்டும்?

இருள் நன்றாகப் பரவி விட்டது. இனி நான் வேகமாக நடந்தால்தான் கண்கள் இருளுவதற்குமுன் போய்ச் சேர முடியும்.

இன்னும் எவ்வளவு தொலைவோ?..., அதோ, அந்தத் திருப்பம் திரும்பினால்

வெளிச்சம் தெரியுமோ? எம்பெருமானே! அதோ, வெளிச்சம் தெரிகிறது. ஒரு திட்டி வாசல் தெரிகிறது. அங்கே திவர்த்தி பிடித்த காவல்காரர்கள் நிற்கிறார்கள். அதோ, கோபுரம், கோவில் மதில் தெரிகிறது. ஆகா, இந்தக் கோயில் கோபுரம்தான் எவ்வளவு அழகு! தங்க விமானம், மங்கிய ஒளியில் எவ்வளவு அழகாய் மின்னுகிறது!

டாண்.... டாண்.... டாண்...

ஆலயமணி ஓய்ந்து விட்டது.

சுந்தரராஜப் பெருமானே! சரணம், சரணம்!......

''ஸ்வாமிகளே, தங்கள் வரவு நல்வரவாகுக!''

''இந்தத் திவர்த்தி பிடிக்கிற காவலாளிகள்தான் எவ்வளவு மரியாதையோடு நம்மை வரவேற்கிறார்கள்! தெள்ளு தமிழ் தேனாகப் பாய்கிறது! தமிழ் வளர்த்த மதுரை மாநகரமல்லவா!

''சோழ நாட்டிலிருந்து வருகிறேன்.... இங்கே கோவிலுக்கருகே தேசாந்திரிகள் தங்கும் விடுதி எங்கே அப்பா இருக்கிறது?''

''அப்படி ஒன்றுமில்லே, ஸ்வாமிகளே!.... உள்ளே கோவில் தர்மகர்த்தாக்கள் இருப்பார்கள். அவர்கள் வீடுகள் எதிலாவது நீங்கள் தங்கிக் கொள்ளலாம்.''

''மிக்க நன்றி ஐயா!''

திட்டி வாசலைத் தாண்டி திரும்பும்போது ஆகாயத்தில் விண்மீன் ஒன்று ஒளியைச் சிதற விட்டுச் சீறிப் பாய்ந்து செல்கிறது. என் உடலெல்லாம் ஒரு கணம் சிலிர்த்து நிற்கிறேன். இது சுபமா, அசுபமா? சகுனமா, சூசகமா? என் வருங்காலம் எனக்கா தெரியாது? இது என்ன மாதம்? பங்குனி மாதம் பின் பாதி — சூரியன் மேஷத்தில் பிரவேசிக்கிறான். மேஷத்தில் சூரியன் உச்சனல்லவா? என்ன எதிர்ப்பு வந்தால் என்ன? என்ன இன்னல்தான் வந்தால் என்ன? கையில் வேல் இருக்கிறது. நெஞ்சில் உரம் இருக்கிறது. கற்ற வித்தைகள் கை மேல் உள்ளன. சிரம் போற்றி வணங்கும் என் குருநாதரின் இணையிலாத் திருவருள் எனக்கு எப்போதும் துணை வருகிறது.

## 1. மேஷம்

ஆசாரிய தேவனின் கட்டளைப்படி இங்கே என் பர்ணசாலையை அமைத்துக் கொண்டு ஸ்ரீ வைஷ்ணவ சம்பிரதாய சித்தாந்தங்களை இரண்டு சீடர்களுக்குச் சொல்லிக் கொடுத்தால் போயிற்று. நாலாயிர திவ்யப் பிரபந்தங்களை நான்கு சீடர்களுக்கு 'ஸந்தை' சொல்ல வேண்டும். மதுரை மாநகர் சைவ சமயாசாரியர்கள் கையிலே அடங்கிக் கிடக்கட்டுமே! அழகர் கோயில் திருமாலிருஞ்சோலையில் வைஷ்ணவ மணம் எப்போதும் வீச வேண்டும். சகல கோடி ஜீவராசிகளின் க்ஷேமத்தையும் கண்காணிக்கிற யோகத் துயில் எம்பெருமானுடைய திருமாலின் செய்தியைப் பரப்பவே நான் வருகிறேன். 'இது என் குருவின் கட்டளை. இதை நிறைவேற்றுவதே அதுவே குருவுக்குக் காணிக்கை. நான் குருவின் இந்த ஆணையைத் தவிர வேறு எதிலும் மனத்தைச் செல்ல விடக் கூடாது. நான் துறவி.

நான் கோவில் பிராகாரத்தினுள் அடி எடுத்து வைக்கும் போது என் மனசு உருகுகிறது. ''ஆசாரிய தேவா, சரணம், சரணம்!''

''ஐயா, தாங்கள் தேசாந்திரியா?''

''ஆமாம்......''

''எழுந்தருள வேண்டும். பெருமாள் சேவையாக இருக்கிறது. வாருங்கள்.''

வயது முதிர்ந்தவரின் வரவேற்பு. பாசம் பொங்க அழைக்கிற அழகு. ஜ்வலிக்கிற முக தேஜஸ். யார் இவர்? கேட்கவும் தயக்கமாக இருக்கிறது.

மெய் சிலிர்க்கிறது.

பிராகாரம் முழுவதும் தீப வரிசைகள். இட்டுத் இட்டான இருள்கள்; மொட்டு மொட்டாய்த் தீபங்கள். அவை நெய் மணத்தை மெல்லப் பரவ விடுகின்றன.

''சுவாமி, அடியேன் ஒரு விண்ணப்பம். இங்கே புஷ்கரணி இருந்தால் நான் அநுஷ்டானங்களை முடித்துக் கொள்வேன். வெகு தொலைவிலிருந்து நடந்து வருகிறேன்.''

''இங்கே புஷ்கரணி ஒன்றும் இல்லை. திருமாலிருஞ்சோலையில் அருவி ஒன்று ஓடி வருகிறது.......''

''ஆமாம் பார்த்தேன்.....''

''அந்த அருவி இதோ அருகிலேயே இருக்கிறது. போய் அநுஷ்டானங்களை முடித்துக் கொள்ளலாம். போய் முடித்துக் கொண்டு வாருங்கள். ஆண்டாள் சந்நிதியில் அடியேனை வந்து பாருங்கள்.''

''ஆகட்டும், ஸ்வாமி! அடியேன் தன்யன்.''

அருவிக்கரைதான் எவ்வளவு அமைதி! சலசலவென வரும் இந்த அருவியின் துள்ளலைப் பார்க்கும்போதே கவிதை பிறக்கிறதே! இந்தக் கரையில் அமர்ந்து பசி தாகம் தெரியாமல் பாசுரங்கள் எழுதலாம்போல் இருக்கிறதே! ஸுந்தரராஜப் பெருமானின் திவ்ய சௌந்தர்யங்களை எத்தனை பாட்டுப் பாடினால்தான் என்ன!

ஆகா, இதுவல்லவா ஸ்வர்க்கம்? இல்லை, இல்லை. இது ஸ்வர்க்கத்தையும்விட மேலான இடம்!

இச்சுவை தவிர யான் போய் இந்திர லோகமாளும் அச்சுவை பெறினும் யான் வேண்டேன். வேண்டேன். வேண்டேன்.....

நான் இங்கே வைஷ்ணவத் தொண்டனாய்த் தொண்டரடிப் பொடியின் திருத் தொண்டனாய்



எம்பெருமான் திருவுள்ளம் பற்றித் திருவடி சேர்த்துக் கொள்ளும்வரை இருப்பேன்.''

ஆசாரிய தேவா! சரணம், சரணம்....

## 2. விருஷபம்

ஆண்டாள் ஸந்நிதியில் நின்று கரம் குவிக்கும் போது ஒரு காட்சி என் கண் முன் விரிகிறது. ஆகா, இந்த ஸந்நிதியில்தான் உடையவர் ஸ்வாமி ராமாநுஜர் ஆயிரம் சட்டி அக்கார வடிசல் தளிகை சமர்ப்பித்தார் எம்பெருமானுக்கு. கோதைப் பிராட்டியின் கனவை நனவாக்கினார்! அந்தத் திருப்பாவை பாடிய செல்வியின் பிரார்த்தனையை, வேண்டுதலை நிறைவேற்றி வைத்தார். அப்போது ஆண்டாள் ஸந்நிதியில் ஓர் அற்புதம் நிகழ்ந்தது. ஸந்நிதியில் நின்ற உடையவரைக் காணக் கோதைச் செல்வி உயிர் பெற்று, ''அண்ணலே, வருக! அண்ணலே, வருக! என் பிரார்த்தனையை நிறைவேற்றிய என் அண்ணலே வருக!'' என்று சலங்கை 'கலீர், கலீர்' என்று ஒலிக்க வந்து தங்கையின் விருப்பத்தை நிறைவேற்றிய அண்ணலை வரவேற்றாள்! நினைத்தாலும் மெய்சிலிர்க்கவில்லையா ?

''எழுந்தருள வேண்டும் ஸ்வாமி—இப்படி அருகில் வந்து ஸேவிக்கலாம்.'' பெரியாழ்வாரின் வரவேற்பு.

''அடியேன் தாஸன், தன்யன் ஸ்வாமி!''

இந்தத் திவ்விய சேவைக்கு எவ்வளவு நாட்களாகக் காத்திருந்தேன்!

கோதைச் செல்வியின் சௌந்தரியம்தான் எவ்வளவு திவ்வியம்! இது திவ்விய சௌந்தரியமா? பக்திப் பெருங்காதலின் சிகர சௌந்தரியமா? பெண்ணின் வெற்றியா? அரங்கனைக் காதலின் வெற்றியா? குழந்தையின் பிடிவாதமா? வீம்பா? தவமா? தவத்தின் பலனா?

ஸந்நிதியை விட்டு வெளியே வருகிறேன்.

''பெருமான் சந்நிதி இந்தப் பக்கம் இருக்கிறது. தேவரீரைப் பார்த்தால் பரம வைஷ்ணவ பக்தராய்த் தெரிகிறது. தேவர் திருநாமம் அடியேன் தெரிந்து கொள்ளலாமோ ?''

''அடியேனைத் திருவாழி மார்பன் என்று அழைப்பார்கள்......!''

''ஆஹா.... திருப்பதி ஸாரம் என்றொரு திருப்பதி உண்டு. அங்கே தேவர் திருநாமத்தில் பெருமான் எழுந்திருளியிருக்கிறார். எவ்வளவு அழகான திருநாமம்.....''

''அடியேன் நாஞ்சில் நாட்டைச் சேர்ந்தவன் அல்ல. சோழ மண்டலத்திலிருந்து வருகிறேன்.''

''தென் தேச யாத்திரை மேற்கொண்டீரோ ?''

''இல்லை. இங்கேயே நிரந்தரமாய்க் கைங்கரியம் செய்து முக்தி பெற உத்தேசம். குருகுல வாசம் முடித்தவுடன் ஆசாரியரின் கட்டளை மேல் நாங்கள் வெவ்வேறு ஸ்ரீ வைஷ்ணவ க்ஷேத்திரங்களில் சென்று பகவத் கைங்கரியம் செய்யப் புறப்பட்டிருக்கிறோம். முக்கியமாய் ஸ்ரீ வைஷ்ணவ சித்தாந்தங்களைப் பரப்புவது எங்கள் நோக்கம். உடையவரின் விசிஷ்டாத்வைத தத்துவத்தைப் பாமரர்கள் புரிந்து கொள்ளும்படி செய்ய வேண்டும்.''

''ஆகா, அருமையான தொண்டை ஏற்றுக் கொண்டீர். தேவரீர் எந்த மடத்தைச் சேர்ந்தவரோ ?''

''ஸ்வாமி, அடியேன் ஸ்வயமாசாரிய புருஷன்..... தாய், தந்தை உற்றார் உறவினர் யாரும் இல்லை. எம்பெருமான் என்னை மட்டும் கைங்கரியத்துக்கு விட்டு வைத்திருக்கிறார்........''

''ஆகா, ஆகா, தண்டம் ஸமர்ப்பிக்கிறேன்........!''

ஐயோ, இதென்ன 'பெரியாழ்வார்' என் காலடியில் குனிந்து......

''அபசாரம்! அபசாரம்! ஸ்வாமி இது என்ன ?''

''ஸ்வயமாசார்ய புருஷர்களை ஸேவிப்பதே பெரிய பாக்கியம்.''

''அபசாரம்.... அடியேன் அதற்கெல்லாம் தகுதியற்றவன். தேவரீர் எவ்வளவு பெரியவர்! அடியேன் பெயரளவில்தான் அந்தப் பரம்பரையைச் சேர்ந்தவன். எனது முன்னோர் வாழ்ந்த அந்தத் தூய வாழ்வை என்னால் வாழ முடியாதுபோலவே தோன்றுகிறது. ஸ்வாமி, இதோ, இந்த வேல் என் உடன் பிறந்தது. பகவத் கைங்கரியத்துக்கு வேல் எதற்கு? வேல் எறிய நான் கற்றுக் கொண்டேன் சில காலம். ஏன், வாட்போர் கூடத் தெரியும். அது மட்டுமில்லை. அடியேனுக்குச் சிற்பக் கலையிலும் கொஞ்சம் பயிற்சி உண்டு. ஸங்கீதம் சில காலம் கற்றேன். குழலிசை அப்போது என் உயிர் நாடியாய் இருந்தது. என் முன்னோர் விட்டுச் சென்ற சுவடிகளிலிருந்து வருங்காலக் குறி சொல்லவும் நான் கற்றேன். ஸ்ரீ வைஷ்ணவ சம்பிரதாய நூல்களையும் விசிஷ்டாத்வைத சித்தாந்தங்களையும் குலபதி ஆசாரியர், யதிராஜ வல்லபர் தாடாள தாஸர் மூலம் சிரவணம் பண்ணும் பாக்கியம் கிட்டிற்று. அவர் உத்தரவுப்படி இனிமேல்தான் துறவறம் பூண்டு நான் கைங்கரியம் மேற்கொள்ள வேண்டும். ஸ்வாமி! நான் தாங்கள் நினைப்பது போல் அவ்வளவு மரியாதைக்குகந்தவனாக ஆகிவிடவில்லை. என்னை நீங்கள் புத்திரன் போலப் பாவிக்க வேண்டும். அடியேன் விண்ணப்பம். கருணை கூர்ந்து செவிமடுக்க வேண்டும், ஸ்வாமி!''

பெரியாழ்வாரின் கண்களில் ஜ்வலிப்பு, ஆச்சரியம்! ஆனந்தம், பரவசம்.... பாசம்! எல்லாம் தோன்றி மறைந்தன.

''இவ்வளவும் கற்ற பிறகு இந்த அடக்கத்தையும் இனிமையையும் எப்படியோ பெற்றிருக்கிறீர். உம்மைப் போன்ற மகனை நான் பெற்றேனில்லை. அந்தக் குறையை இனிமேல் கொஞ்சம் ஆற்றிக் கொள்வேன்.''

''அடியேன் இங்கே திருமாலிருஞ்சோலையில் ஒரு பர்ணசாலை கட்டிக் கொள்ள உத்தேசம் ஸ்வாமி. பெருமானுக்குப் புஷ்பக் கைங்கரியம் செய்வதாக ஒரு பிரார்த்தனை இருக்கிறது.''

''அடியேனின் குடில் இங்கே அருகில்தான் இருக்கிறது. அதை ஒட்டிப் பெரிய நந்தவனம் ஒன்று அமைந்திருக்கிறது. அங்கே பதிக்க

மாளாத புஷ்பச் சோலை இருக்கிறது. பர்ணசாலையைத் தேவரீர் அங்கே அமைத்துக்கொள்ளலாம்.''

''ஒரு விண்ணப்பம். அடியேனை இனிமேல் இவ்வளவு மரியாதையோடு அழைக்க வேண்டாமே. நான் தங்கள் புத்திரன் போன்றவன் ஆயிற்றே....''

''சரி வாரும். நீர் கற்ற கலைகளைப் பார்க்கும்போது நான் வெறும் மூடன். வயது மட்டும் ஆகிவிட்டால், போதுமா? நானே உம்மிடம் எவ்வளவோ கற்றுக் கொள்ளும் படியாக இருக்கும். வாரும், வேண்டிய வசதிகள் செய்து தருகிறேன்.''

''ஸ்வாமி, ஒரு நிபந்தனை. அதற்குட்பட்டால்தான் நான் தங்களோடு வருவேன். நான் சந்நியாஸம் முறைப்படி வாங்கிக் கொள்ளவில்லையே தவிர சந்நியாஸியைப் போலத்தான் வாழ்கிறேன். உலகத்தைத் துறந்து எம்பெருமான் திருநாமத்தைத் தவிர வேறு எந்தச் சிந்தனையுமில்லாமல் வாழ வேண்டும். ஆதலால், தேவரீர் இல்லத்தில் அமுது செய்ய இயலாது. பகவத் பிரஸாதத்தைத் தவிர வேறு எதையும் நான் ஏற்றுக் கொள்வதில்லை. தனியாக ஒரு பர்ணசாலை வேண்டும். அதில் நான் தனியாகத் தவம் புரிய வேண்டும்.......''

''அன்பரே! காவி வஸ்திரம்தான் நீர் இன்னும் அணியவில்லையே!''

''அதற்கும் தேவரீர்தான் ஏற்பாடு செய்து தர வேண்டும்.''

''சன்யாசம் வாங்கிக் கொள்ள என்ன அவசியம் வந்து விட்டது இப்போது? உம் மனைவி.....?''

''அடியேனுக்கு இன்னும் விவாகம் ஆகவில்லை........!''

''அதற்குள்ளேயா இப்படி?''

''ஆமாம், குருவின் ஆக்ஞையை நிறைவேற்ற அடியேன் மேற்கொள்ளும் விரதம் இது......!''

என் பேச்சு ஆணித்தரம். அசைக்க முடியாத தீர்மானம். நான் வழி வகுத்துக் கொண்டுவிட்டேன். என் குருவின் ஆக்ஞை தான் எனக்குப் பெரிது. என் குருவே என் எம்பெருமான்....

''திருவாழி மார்பா!...''

''ஸ்வாமி...''

''என் மெய் சிலிர்க்கிறது. உன்னைப் போலப் பிள்ளைகளைத்தான் நான் பெறும் பாக்கியம் பண்ணவில்லை. விசிஷ்டாத்வைதத்தைக் காப்பாற்றி வளர்ப்பாயாக!... வா, போகலாம்....''

ஸ்வாமியின் திவ்ய தேஜஸ் ஜ்வலிக்கிறது. கண்கள் பிரகாசமாய்ப் பளபளக்கின்றன. என் முன் நடக்கிற இவர் நடையவர் ராமானுஜரா, அவருடைய மறு பிறவியா, பெரியாழ்வாரா, எம்பெருமானேயா?

இந்த வயதில் இந்த ஸ்வாமி தேகம் எப்படி வலுவோடு இருக்கிறது?...




## 3. மிதுனம்

கீழ்த்திசையில் கதிரவன் வந்தபோது நான் நல்ல வெளிச்சத்தில் அந்த அழகான நந்தவனத்தைப் பார்த்தேன். திருமாலிருஞ்சோலை என்று பெயர் வைத்த பொருத்தம் இந்தச் சோலையில்தான் 'பளிச்' சென்று தெரிகிறது. எங்கு திரும்பினாலும் புஷ்பப் பூக்கள். இஷ்டப்படி பறிப்பவனை. பறிக்க மாளாத பூக்கள், நுகர்ந்து நுகர்ந்து மூக்கைத் துளைக்கும் வாசம். பச்சைக் கொடிகள், அதில் வெள்ளைப் பூக்கள், மொட்டுக்கள், மாமரங்கள், அதோடு பின்னிய வேப்ப மரங்கள், வேங்கை மரங்கள், பன்னீர் மரங்கள், பவளமல்லி மரங்கள், நெடிதுயர்ந்த வில்வங்கள், காய்த்து நிற்கும் பலா மரங்கள், அதில் மரங்களுக்குப் போட்டியாகக் கட்டிய தேன்கூடுகள். மதுவைப் பருகிய வண்டுகளின் ரீங்காரம்.

புல்வெளியின் நடுவில் நாலுகத் தேங்கி நிற்கிற தாமரைக் குளம். பச்சைப் பசேலென்று இலைகளைப் பரப்பிக்கொண்டு...அற... அதற்கெதிரே பெரிய ஆலமரம், விழுதுகளைத் தொங்க விட்டுக்கொண்டு நிற்கிறது. அதன் அருகிலேயே ஒரு கல் மண்டபம்.....அதை ஒட்டி ஒரு குடிசை போட்டுக் கொண்டால் எவ்வளவு நன்றாக இருக்கும்? ஆகா! இது தான் நமக்கு உகந்த இடம்! இங்கேதான் எவ்வளவு அமைதி! எவ்வளவு தண்மை! எவ்வளவு தாவண்யம்!

''திருவாழி மார்பா, ஏன் கண்களில் நீர் பனிக்கிறது?'' என்று பெரியாழ்வாராய் நிற்கிற பட்டர் பரவசமாய்க் கேட்கிறார்.

''பட்டர் ஸ்வாமி! அடியேன் செய்த பெரும் பாக்கியம் என்னைத் தங்களிடம் கொண்டு வந்து சேர்ப்பித்தது. அதனால் தானே இந்த ஸந்நிதியில் ஆனந்தமாய் வேலை அனுபவிக்கிறேன்...''

''பகவத் சங்கல்பத்தாலே இது நடை பெறுகிறது. அதனால் உன் நோக்கங்கள் எல்லாம் நிச்சயம் நிறைவேறும். ஆனால் வைஷ்ணவ சம்பிரதாயங்களை இவ்வளவு சின்ன வயதில் எடுத்துச் சொன்னால் கேட்பதற்கு யாரும் வரமாட்டார்கள்...''

''அதனால்தான் ஸ்வாமி, நான் சன்யாசம் சுவீகரித்துக் கொள்ளப் போகிறேன்...''

பட்டர் ஸ்வாமி பேசவில்லை.

''ஸ்வாமி, ஏன் தேவரீர் கண்களில் நீர் பனிக்கிறது?''...

அதிகாலையில் எழுந்திருக்கும்போதே கௌளி சொல்கிறது...

இன்று என்ன நடக்கப் போகிறது? ஏற்றுகிற தீபம் சுடர் பொறிக்கிறது!... இன்று ரேவதி விண்மீன் கூடிய சுபதினம்... பங்குனி மாதக் கடைசி. சூரியன் பலம் பெறுகிறான். மேஷ ராசியில் வசந்த கால ஆரம்பம்...என் வாழ்க்கையில் மாறுதல் வந்தாக வேண்டும். அதுதான் வந்தாகி விட்டதே!

மலர்ச் சோலைக்குள் புகுந்து பறிக்கப் பறிக்க, மாளாத புஷ்பங்களைப் பறிக்கும் போது, சூர்ய உதயமாகி அரை நாழிகை

சிறந்த திரைப் படங்களுக்காகச் சர்வ தேச திரைப்படத் திருவிழாக்கள் ஆண்டுதோறும் உலகின் முக்கிய நகரங்களில் நடத்தப்பட்டு அவற்றுக்குத் தங்கப் பதக்கங்கள் வழங்கப்படுகின்றன. நம் நாட்டில் அகில இந்திய சிறந்த திரைப் படத்துக்குக் குடியரசுத் தலைவரின் தங்கப் பதக்கம் ஆண்டுதோறும் அளிக்கப்படுகிறது.

ஆனால் எத்தனையோ பல பரிசுகளையும் பாராட்டுக்களையும் விட ஆண்டுதோறும் ஏப்ரல் மாதம் எட்டாம் நாளன்று அமெரிக்கத் திரைப்படக் கலை அறிவியல் கழகத்தின் சார்பில் பிரபல சிரிப்பு நடிகர் பாப் ஹோப்பால் வழங்கப்படும் 'ஆஸ்கார்' பரிசுக்குத் திரை உலகில் தனி மதிப்புண்டு.

"ஆஸ்கார் பரிசு" 1929ம் ஆண்டில் பிறந்தது. சுமார்



1

# ஆஸ்கார் பரிசு

அ. இராமதுரை

பதின்மூன்றரை அங்குலமும் ஏழு பவுண்டு எடையும் கொண்ட அப்பரிசைச் சிலை உருவில் செதுக்கியவர் டெரெக் கிப்பன் என்ற கலை இயக்குநர். அவர் முதலில் அச்சிலைக்கு எந்தவிதமான பெயரையும் வைக்கவில்லை. ஆனால் அச்சிலையைக் கண்ணுற்ற கழகச் செயலாளரான மார்கரெட் ஹெர்ரிக் என்ற மாது அச்சிலை டெக்ஸாஸ் நகரில் உள்ள தமது மாமன் ஆஸ்கார் பியர்ஸ் என்பவரைப் போல உள்ளது என்று பத்திரிகை நிருபரிடம் கூறினார். அந்தச் செய்தியை



அப்பத்திரிகை நிருபர் விளம்பரப்படுத்த இறுதியில் அச்சிலைக்கு "ஆஸ்கார்" என்ற பெயரே நிலைத்து விட்டது.

"ஆஸ்கார் பரிசு" எப்படி வழங்கப்படுகிறது? திரைப்படக் கழகத்தில் உள்ள பல பிரிவுகளைச் சேர்ந்தவர்கள் முதலில் பரிந்துரைக்கிறார்கள். பின்னர் வாக்கெடுப்பு நடைபெறுகிறது. பின்னர் வாக்கெடுப்பில் கழகத்தில் உறுப்பினராக உள்ள நடிகர்கள், நடிகைகள், மற்றும் பல திரைப் படக் கலைஞர்கள் ஆக 2800 உறுப்பினர்கள் தங்கள் வாக்குகளைத் தபால் மூலம் அனுப்புகிறார்கள்.

பொதுவாக மொத்தம் பதினைந்து ஆஸ்கார் பரிசுகள்

---

ஆகிவிட்டது. பூக்குடலையில் பூக்கள் நிரம்பி விட்டன. ஒரு குடலையில் துளசி தளங்கள், இன்னொன்றில் வாசனைப் பூக்கள்... திவ்யப் பிரபந்தத்தில் திருச்சந்த விருத்தம் அத்யயனம் இன்று ஆரம்பிக்க வேண்டிய முறை. இருபது நாட்களில் பெரியாழ்வார் திருமொழியும், நாச்சியார் திருமொழியும் ஆகிவிட்டது.

'பூநிலாய ஐந்துமாய்ப் புனற்கண்நின்ற
நான்குமாய்'

இந்த விருத்தம் எனக்கு மிகவும் உகந்தது.

'பூநிலாய ஐந்துமாய்
புனற்கண் நின்ற நான்குமாய்
தீநிலாய மூன்றுமாய்
சிறந்த காலிரண்டுமாய்,
மீநிலாய தொன்றுமாகி
வேறு வேறு தன்மையாய்,
நீநிலாய வண்ணம் நின்னை
யார் நினைக்க வல்லரே!....'

இரண்டு பக்கங்களும் மண்டிக் கிடக்கிற துளசிப் புதர்களுக்கு நடுவே ஓர் ஒற்றையடிப் பாதையில் நான் வந்து திரும்பும் போது —

என்ன அதிசயம்!... இவள் யார்? தேவ கன்னிகையா? கந்தர்வப் பெண்ணோ?.... பதினைந்து வயது இளம் பெண் எனக்கெதிரே ஸ்வர்ண விளக்காய்க் கையில் மலர் மாலை ஒன்றைப் பாதி தொடுத்த நிலையில் 'வெருட்'டென்று எழுந்து... என்ன இவள் இவ்வளவு அழகு!

வழங்கப்படுகின்றன. சிறந்த படம், சிறந்த நெறியமைப்பு (டைரக்ஷன்), சிறந்த கதை அமைப்பு போன்ற பதினொன்று பகுதிகளாகத் தரப்படுகின்றன இந்தப் பரிசுகள்.

ஒவ்வொரு படத்துக்கும் மேற்கண்ட பதினொன்று பிரிவுகளுக்கும் கிடைத்த அதிகமான வாக்குகளைக் கொண்டு ''ஆஸ்கார்''கள் வழங்கப்பட்டு வருகின்றன.

பெறற்கரிய இப்பரிசைப் பலமுறை பெற்றவர்களும் உண்டு. காலஞ்சென்ற வால்ட் டிஸ்னி 22 ஆஸ்கார்களும், தயாரிப்பாளர் சாம் ஸ்பைகல் 14 ஆஸ்கார்களும் நெறியாளர் டேவிட் லீயன் 2 ஆஸ்கார்களும் பெற்றுள்ளனர்.

சில சமயங்களில் ஒரே ஒரு திரைப்படம் பல ஆஸ்கார் பரிசுகள் பெற்றதும் உண்டு. சான்றாக ''பென்ஹர்'' 11 ஆஸ்கார்களையும், ''மை ஃபேர் லேடி'' 7 ஆஸ்கார்களையும், ''தி பிரிட்ஜ் ஆன் தி ரிவர் க்வாய்'' 8 ஆஸ்கார்களையும், ''லாரன்ஸ் ஆப் அரேபியா'' 7 ஆஸ்கார்களையும் பெற்றதைக் குறிப்பிடலாம்.

இந்த ஆண்டு வார்னர் பிரதர்ஸ் என்ற திரைப்பட நிறுவனம் தயாரித்த ''ஹூ இஸ் அஃப்ரெய்ட் ஆஃப் வெர்ஜினியா உல்ஃப்' என்ற திரைப்படம் மொத்தமுள்ள 14 ஆஸ்கார்களில் 13 பரிசுகளுக்குப் பரிந்துரைக்கப்பட்டிருக்கிறது!

சிறந்த வெளிநாட்டுப் படங்களுக்காக வழங்கப்படும் 'ஆஸ்கார்' பரிசுக்காக பாரதத்தின் சார்பாகச் ''ஆம்ரபாலி'' என்ற இந்திப் படம் அனுப்பப்பட்டுள்ளது.

விந்தையான விஷயம் என்னவென்றால் உலகப் புகழ்பெற்ற நடிகர்களும், நடிகைகளும் பெறற்கரியதாகக் கருதும் இந்த ''ஆஸ்கார் பரி''சின் மதிப்பு ஆயிரம்ரூபாய்கள் தான்!







- வெர்ஜீனியா உல்ஃப் படத்தில் எலிஸபெத் டெய்லர்.
- 'ஆம்ரபாலி' படத்தில் வைஜயந்திமாலா
- வால்ட் டிஸ்னி

---

படபடவென்று அந்தக் கண்ணிமைகள் அடிப்பதை நான் பார்க்கிறேன்.... ஒரு கணம், ஒரு கணம்தான்! அந்தக் காட்சி மறைந்து போய்விட்டது. அவள் எப்படி நகர்ந்தாளோ? எந்த வழியில் புகுந்து சென்றாளோ, அவளைக் காணவே இல்லை. நழுவ விட்ட மாலையும் பூக்களும் பூமியில் சிதறிக் கிடந்தன....

யார் இவள்?...இது கனவா, இல்லை பிரமையா? ஆவிகளின் மிரட்டலா? மோகினிப் பெண்ணா?...

அவள் கொண்டை முடித்திருந்த விதம்... ஓ! கோதைப் பிராட்டி மாதிரி.... ஆஹா! காசியோரை நெருக்கு நேர் காணும் பெரும் பேறு கிட்டியதே! எம்பெருமானே! இது நிஜமா, நிஜமா, நிஜமா?

பிரமை இல்லை. கனவில்லை. அவள் கையில் பாதி தொடுத்த மாலையோடு நின்றாள். அதைக் கலவரத்தில் நழுவ விட்டுச் சென்றாள். இதோ என் கையில் அது இருக்கிறது.

அவள் கலவரத்தோடு எழுந்தபோது அவள் கைவளைகள் குலுங்கின. காதணிகளும், கங்கணமும், முத்து மாலைகளும் அசைந்தன. குழலில் செருகிய பூக்கள் நட்சத்திரங்களாய் உதிர்ந்தன. அவள் செக்கச் சிவந்த இதழ்கள் ஒரு கணம் குவிந்தன. அந்த அழகிய கண்ணிமைகளில் கலவரம் தோன்றிற்று. படபடத்த இமைகளுள் ஒரு கணம் கண்கள் நாணத்தைக் காட்டி மறைந்தன. பல்லாம் மின்னலாய் மறைந்து விட்டன!

அன்று முழுவதும் அந்தக் காட்சியை மறக்கவே முடியவில்லை. சந்நிதியில் கரங் குவிக்கும்போதும், அத்யயனத் தொடக்கத்திலும், திருவாராதனை நடுவிலும் அந்தக் காட்சி கண் முன் வந்து நின்றது. என்னால் அதை மறக்கவே முடியவில்லை.

அருவியின் துள்ளலிலும், வெள்ளை அன்னங்களின் களிப்பிலும், தாமரைக் குளத்திலும், வண்டுக் கூட்டங்களுக்கிடையேயும், பசுமை போர்த்திய மலை முகட்டிலும், உதயமாகிற முழு நிலவிலும், கல் மண்டபத் தூண்களிலும், சுடர் பொறிக்கும் அகல் தீபத்திலும் அதே காட்சி தோன்றிக் கொண்டிருக்கிறது...

## 4. கடகம்

இரவெல்லாம் தூக்கமில்லை.

மூடிய இமைக்குள் பளீரென்று மின்னல் வெட்டு....

கலவரமடைந்த நிலையில் மாலையை நழுவ விடுகிற மங்கை யொருத்தி. கோதைப் பிராட்டியே வந்தது போல... அவ்வளவு ஸௌந்தரியத்தோடு...

சே! அதை மறக்கவே முடியாதோ?

மின்னல் வெட்டி மறைந்தது போல... பொன் கொடியைச் சூரிய ஒளியில் கண்டது போல....

அவள் யாராக இருக்கும்? யாராக இருந்தால் என்ன?

கோதைப் பிராட்டியா மோகினிப் பெண்ணா? நமக்கென்ன?

கலவரமடைந்து நழுவி ஓடுவானேன்? யார் கண்டார்கள்? பதினாறு வயதுப் பெண் கோகுலத்தில் உலாவிய ஆயர்குல மகளோ? தனியாக நின்றாளே, தோழிகள் இல்லையா?... நமக்கென்ன? அதைப் பற்றி நமக்கென்ன?

பாண்டிய ராஜகுமாரி வழி தவறி வந்தாளா? வந்திருந்தால் மாலை தொடுத்துக் கொண்டு நிற்பாளா? உயர்ந்த குலத்தில் பிறந்தவள்தான். அந்த அழகு சாமான்ய அழகில்லை. பரம்பரை பரம்பரையாகச் சேர்த்து வைத்த தெய்வீக அழகு. கண்டவுடன் கண்ணை மயக்கும் வசீகரம்...

அவள் யார்? யாராயிருந்தால் என்ன? அதிகாலையில் சற்றுக் கண்ணயர்ந்தபோது ஒரு கனவு. இரவு பகலாய்க் கல்லுளியில் செதுக்குகிறேன் கல் மண்டபத் தூண்களில். நான்கு தூண்களில் நான்கு நடனப் பெண்களின் சிலைகள். அவைகளில் கல்லுளியைக் கடைசியாக ஓட்டும்போது திடீரென்று என்ன அற்புதம்! நான்கு பெண்களும் உயிர் பெற்றார்கள். ஒருத்தி கல்லுளியைக் கையில் வாங்கிக் கொண்டாள். ஒருத்தி மடியில் செருகிய புல்லாங்குழலை உருவிக் கொண்டாள். ஒருத்தி என் கவடிக் கட்டுக்களை எடுத்துக் கொண்டாள். ஒருத்தி என் வேலைப் பிடுங்கிக் கொண்டாள். பிறகு ஒரே கணத்தில் நால்வரும் ஒரே பெண்ணாகி யிருப்பதைப் பார்த்தேன். அவள் விம்மி விம்மி அழுது கொண்டு நின்றாள். என் மனம் உருகிற்று. நான் அவளைத் தேற்ற எண்ணி அருகில் சென்றேன். நான் எவ்வளவு ஆறுதல் சொல்லியும் அவள் தேறவில்லை.

பிறகு நான் அவளை என் கைவிரல் நுனியால் தொட்டேன். தொட்டவுடன் அவள் துள்ளிச் சென்றாள். கலகலவென்று அவள் சலங்கை குலுங்கிற்று. அது அவள் சிரிப்பா? கால் சலங்கையா? நான் அவளைப் பிடிக்க எவ்வளவோ முயன்றேன். இயலவில்லை... மலைச் சிகரம் வரை துரத்திச் சென்ற பின்தான் கவனித்தேன். தொலையில் என் உயிருக்குயிரான வேலும், கல்லுளியும் கத்தியலும், கவடிக் கட்டுகளும் அருவி வெள்ளத்தில் சென்று கொண்டிருந்தன. அவளை வேதனையோடு திரும்பிப் பார்த்தேன். என் அருகில் வந்து அவள் என் காலடியில், ''ஸ்வாமி! என்னை மன்னியுங்கள்!...'' என்றாள். அவள் இன்று காலை என்னைக் கண்டு மிரண்டு ஓடிய கோதைச் செல்வி தானோ என்று கவனித்தேன். தூக்கம் கலைந்து போயிற்று....

இன்றும் காலையில் நான் துளசிச் செடிப் பக்கம் போய்க் கொண்டிருக்கிறேன்!... என்னை அறியாமல் என் கால்கள் இழுத்துச் செல்கின்றன. வேண்டிய அளவு பூக்கள் பறித்த பின்னும் நான் எதையோ தேடி அலைகிறேன். வளைந்து வளைந்து செல்கிற பாதையில் நான் தேவையில்லாத பூக்களைப் பறிக்கிறேன்.

ஒரு கணம் மனம் நடுக்கம் கொள்கிறது. தேவையில்லாத பூக்கள், தேவையில்லாத நினைவுகள்... மறக்க முடியாவிட்டால் என்ன செய்வது? தனக்குச் சம்பந்தமில்லாததில் ஆசை....மாளாத ஆசை....சொந்தமில்லாத வேலிக்குள் திருட்டுத்தனமாய் வந்து நிற்பதைப் போலத் திரும்பிப் போய்விடலாம். அவள் யாராயிருந்தால் நமக்கென்ன? மனசுக்குப் படியாத கால்கள். அல்லது கால்களுக்குப் படியாத மனசு. மனசைக் கவ்விய நினைவுகள்... நண்டுப் பிடியாய்ப் பிடித்து...அதனால் தவிக்கிறேன்.

சட்டென்று திரும்பியவுடன்—

அவள் பின்னழகை... இவ்வளவு அருகே?!

அவள் பூக்களைக் கொய்து கொண்டிருக்கிறாள். மல்லிகைக் கொடியில் பூத்த தாமரை போல அவள் நின்று கொண்டிருக்கிறாள். நான் வந்தது தெரியாது. நிற்பது தெரியாது. வந்த சத்தம் கேட்கவே யில்லையா? மலர் பறிக்கிற அழகே அழகு! என்ன நளினம்! அதில் எவ்வளவு ஒய்யாரம்! ஆண்டாள் இப்படித்தான் நின்றிருப்பாள். இப்படித்தான் மலர்க் கூடையோடு நந்தவனத்தில் கண்ணனை நினைந்து நினைந்து உருகியிருப்பாள். அந்தச் சாய்ந்து சரிகிற மலர்க் கொண்டையும், முகம் நலுங்கும்போது குலுங்கும் காதணிகளும், சின்னஞ் சிறு மணிகளும்....

எம்பெருமானே!...

நான் பெருமூச்சுவிடுவது காதில் விழுமோ, கனவு கலைந்து விடுமோ, அல்லது நழுவி ஓடிவிடுவாளோ?

எதுவும் நடக்கவில்லை. நான் நின்று கொண்டே இருந்தேன். அந்த அமைதியில் அவளை எது 'கலைத்ததோ? 'வெடுக்'கென்று திரும்பினாள். நான் வாய் திறப்பதற்குள்,

கொய்த மலர்களைச் சிதற விட்டுவிட்டு நகர்ந்தாள். நான் அவளைத் தொடரவே முடிய வில்லை.

## 5. சிம்மம்

நான் இரவு முழுவதும் உறங்கவில்லை.

காலையில் வழக்கம் போலத் தேடித் தேடி அலைகிறேன். எப்பொழுது காண்போம் என்று என் மனம் ஏங்குகையில் பறிக்க மாளாத புஷ்பங்களைப் பறித் துப் பறித்துக் கையும் காலும், கண்ணும் ஓய்ந்து பிய்த்துப் பிய்த்து எறிகிறேன்.... ஒவ் வொரு கணமும் நீண்டு வளரு கிறது. கடைசியில்—

என்ன சௌந்தரியம்! என்ன லாவண்யம்! அவளை நேருக்கு நேர் நான் பார்த்தது பார்த்த படி நிற்கிறேன். சற்றே சாய்ந்து முடித்த மலர்க் கொண்டையின் அழகுதான் என்ன!

அவள் இப்படியும் அப்படி யும் நகரத்தான் முயன்றாள். நல்ல வேளை, எங்கும் வழி இல்லாமல் போயிற்று. மூன்று பக்கமும் புதர்கள், எதிரே நான். இவள் நகர்வது எங்கே?




"நமது பிரதேசக் காங்கிரஸிலிருந்து மேலும் பன்னிரண்டு பேர்கள் விலகி எதிர்க் கட்சியில் சேர்ந்து விட்டார்களாம்!"

"என்னய்யா 'டூப்' அடிக்கிறீர்! அது எப்படி நடக்க முடியும்? பிரதேசக் காங்கிரஸில் பாக்கி இருப்பதே நான் ஒருவன்தானே?"

அவள் முகத்தில் கலவரமும், பயமும் கண்களில்.... ஐயோ! என்ன நடுக்கம், என்ன பயம்?

அப்படியே என் காலடியில் விழுந்து ஏன் கெஞ்சுகிறாள்? என்னையறியாமல் நான் நகர் கிறேன். அவள் துரிதமாய் எழுந்து மறை கிறாள். ஏன்?....

இவள் யாரென்று நிச்சயம் தெரிந்து கொண்டே ஆகவேண்டும். மருண்ட கண் களில் தேங்கிய கண்ணீர்... என் நெஞ்சை உறுக்குகிறது....

அன்றிரவு தூக்கம் இல்லாமல் படுக்கை யில் புரண்டு புரண்டு காரணம் புரியாமல் தவித்து, சற்றே அயர்ந்தாலும் பயங்கரக் கனவுகள் ஆசாரிய சாபம் பெறுவதும் நர கத்தில் உழல்வதும் — கண்டு விழித்துக் கலங்கி ஐயோ, தவறல்லவா செய்துவிட்டேன்!

ஆசாரிய தேவா, சரணம், சரணம்!

நான் வழி தவறி, நெறி புரண்டு நடந் தேனே! என் மனம் பேதலித்ததே!... எனக்கு என்ன தண்டனை வேண்டுமானாலும் தரலாம்.

என் கடமையை மறந்து, குறிக்கோளை மறந்து..... எம்பெருமானே, இதுவும் சோதனையோ?

நான் ஏன் இப்படி அறிவை இழந்தேன்? துறவறம் புக வேண்டியவன் தடுமாற லாமா? குருவின் கட்டளையை மீறலாமா, உள்ளம் சிலிர்த்துச் சீறி எழுகிறது.....

நெஞ்சைக் குத்திக் கொண்டு இரவெல் லாம் நான் கதறி அழுகிறேன்... நான் பாபி, நான் பாபி என்று என் நெஞ்சில் முள் உறுத்துகிறது.

அதிகாலையில் அருவியில் நீராடித் திரு வாராதனம் முடித்துப் பூக்குடலையுடன் கிளம்புகிறேன்.

இன்று பட்டர் ஸ்வாமியைப் போய்ச் சேவித்தால் என்ன? செய்த பாவத்தைப் போக்கிக் கொள்ள இனி முயல வேண்டும். இனி ஸர்வ லோக ரக்ஷகனை ஸ்ரீமந் நாரா யண சிந்தையைத் தவிர வேறு சிந்தையே கூடாது. எம்பெருமானே! அருள்வ மருள்வீராக. உனதிரு பதம் தவிர இனி வேறு எதிலும் என் மனம் நாடாதபடி வரம் வேண்டும். வேறு மாயைகளைக் காட்டி என்னை மயக்கிடல் தகாது. பெருமானே! நீயே சரணம், சரணம்!...

பட்டர் ஸ்வாமியின் குடில் ஒரு மூலையில் ஒதுக்குப்புறமாய்ப் பார்ப்பதற்கு ஆசிரமம் போல... எவ்வளவு அழகு! நமது பர்ண சாலையை விட அழகான அமைப்பு. உதய கிரணங்கள் பொன்னிறமாக்கும் வேளையில் நான் பூபாள ராகம் பாடிக் கொண்டு போகிறேன். அங்கே அழகான முகப்பு. முன்றிலில் படர்ந்த முல்லைக் கொடி சம்பிரதாயப்படி சுவரெல்லாம் பசுஞ்சுண்ணாம் பூசியபடி ஸ்ரீ வைஷ்ணவ மணம் வீசுகிறது. கதவு சாத்தியிருக்கிறது. வேலைப்பாடமைந்த வாசல் நிலை... சுதர்சன சக்ரமும், சங்கமும் திருமண் காப்பும் பொறித்த கதவுகள்... பெரிய திருவடியும், சிறிய திருவடியும் செதுக்கி யிருக்கின்றன...

சிறிய உருவங்களாய்க் கண்ணன் லீலைகள் வெவ்வேறு நிலையில் நிலைப்படியில் காண்கிறேன். ஸ்ரீ வைஷ்ணவத் தச்சனின் கை வண்ணம்.

கோகுலமே என் நினைவுக்கு வருகிறது. அதற்கிசைவாக அந்த ஓசை — சலசலவென்று தயிர் கடைகிற ஓசை... அதுவும் பிரமையா? வீட்டுக்குள்ளிருந்தல்லவா? அந்த ஓசை தான் என்ன ரம்மியம்? என்ன இனிமை!

நான் வியந்து நிற்கையில்,—

''வரவேணும், எழுந்தருளவேணும்!...திருவாழி மார்பரே! அடியேனின் இருளும் இப்பொழுதுதான் பாக்யம் செய்தது...''

பின்னும் பட்டர் ஸ்வாமி நிற்கிறார்.

''அடியேன் தாஸன் ஸ்வாமி, தேவரீர் திருமேனி பாங்கோ?''

''பகவத் பிரசாதத்தாலே பாங்காகவே இருக்கிறேன். இவ்வளவு நாட்களில் உம்மை அடியேன் இப்படி உபசரிக்கச் சந்தர்ப்பம் வாய்க்கவில்லை. உள்ளே எழுந்தருளலாம்...''

கதவருகில் அவர் சென்றதும், தானாகத் திறந்து கொள்ளுகிற அதிசயக் கதவு. அந்தக் கிண்கிணிச் சத்தம். சிலம்பொலி, நகைகளின் குலுங்கல்... கதவருகே—

ஹா... இவள்?

எவளை மறக்க வேண்டுமோ எவளால் நான் பாவம் செய்ய இருந்தேனோ அவளேயா?...அந்த முகத்தில் காண்கிற வியப்பு, நாணம், கலவரம்... 'சட்'டென்று மறைகிற அவசரம்... என் தலை ஏன் சுற்றுகிறது?

இந்தக் கந்தர்வப் பெண் — இந்த மோகினி இல்லை. இவள் கோதைப் பிராட்டி; இல்லை இவள் நப்பின்னை! இவள் இவருடைய புத்திரியா? இவள் என்ன அழகு? என்ன லாவண்யம்! இவ்வளவு ஸௌகுமாரியா?

உள்ளே நுழைந்ததும், கூடத்தின் கோடியில் அவள் அமர்ந்து, முகம் நிமிர்த்தாமல் மத்துக் கயிறுகளைப் பிடித்துத் தயிர் கடைய ஆரம்பிக்கிறாள். இந்த அழகிதான், 'நல் செந்தாமரைக் கையால் சீரார் வளை ஒலிப்ப' வந்து கதவைத் திறந்தவளா? இவள் என்னைப் பார்த்தாளா?

இவள்தான் என்னை மயக்கியவள். என் மனதைப் பைத்தியமாக்கியவள்!

யாரை மறக்க வேண்டி இங்கே வந்தேனோ, அவளே வந்து என் இதயக் கதவைத் திறந்தால்...? ஐயோ, ஐயோ, என்ன ஸௌந்தர்யம் இவள்!

''திருவாழி மார்பரே, ஏன் தயங்கி நிற்கிறீர்?''

''இதோ, தன்யன் ஸ்வாமி!...''

## 6 கன்னி

அறிவுக்கு அடங்காத மனசு—பிடிவாதம், வீம்பு — அழும்பு. நான் தோல்வியுறுகிறேன். தோல்வியே இந்த அற்ப மனசுக்கு இன்பமாக இருக்கிறது. நான் நகர்ந்து நகர்ந்து மறைய தோல்வியே வளர்கிறது தோல்வி!...

என் வெகு அருகில் நந்தவனத்தில் அமர்ந்து புஷ்பம் தொடுக்கும்போதும், அப்போது என்னைப் பார்த்து அவள் புன்னகை புரியும்போதும் நான் உலகையே மறந்து இந்த நந்தவனமே இந்தச் சில நாழிகைகளே சுவர்க்கமாய் மாறுகிறது.

''சுந்தரி! உன்னை நான் பார்த்த பிறகு என் மனசே மாறிப் போய்விட்டது. உன் நினைவைத் தவிர வேறு இல்லாமல் அலைகிறேன். உன்னை இனிமேல் பிரிவதே முடியாது போலத் தோன்றுகிறது.''

அவள் பேசவே யில்லை. அந்த முகத்தில் எந்த விதச் சலனமும் இல்லை. ''நான் உன்னைப் போன்ற அழகியை இதுவரை பார்த்ததே யில்லை. உன் முக வசீகரம் என்னை மயக்கி விட்டது. கோதைப் பிராட்டியைப் போலவே நீ தோன்றுகிறாய்...''

அவள் என்னையேதான் பரிதாபமாகப் பார்த்துக் கொண்டு நிற்கிறாள். அந்தக் கண்களில் காதலும் பரிவும் மிதப்பதை நான் காண்கிறேன்.

''நான் எப்படியும் உன்னோடு வாழ்க்கை நடத்துவது என்று தீர்மானம் செய்துவிட்டேன். உனக்குச் சம்மதம் என்பதை உன் பவளவாய் திறந்து ஒருதடவை சொல்லேன்.''

அப்பொழுதும் அவள் பேசவில்லை. மௌனமாய்த் தலை குனிந்து நின்றாள்.

''ஆகா, உனக்கு இன்னமும் என்னைக் கண்டு வெட்கமும் பயமும் போகவில்லையா? கண்ணே! நான் துறவியாக வாழ்வைத் தொடங்க வீடு விட்டு நாடு வந்தேன். எனக்குக் கடமை ஒன்று இருந்தது. துள்ளித் திரியும் மான்களைக் கண்டேன். மேகம் கண்டு நடனமாடும் தோகை மயில்களைக் கண்டேன். தாமரைக் குளத்தில் மடல் விரிக்கும் மலர்களைக் கண்டேன். பிறகு உன்னைப் பார்த்தேன். அன்று முதல் என் பழைய தீர்மானங்கள் மாறிப் போயின. உனக்காகவே நான் பிறவி எடுத்தவன். உனக்காகவே ஏங்குகிறவன்.... உன் முகத்தில் சிறு சலனம் உண்டானால் என் இதயமாகிற தடாகத்தில் சிற்றலைகள் உண்டாகின்றன.''

அவள் கண்கள் இரண்டிலும் பளபளவென்று நீர் ததும்புகிறது. நான் பார்க்கும்போதே இமைகளிரண்டும் படபடவென்று சிறகடிக்கக் கண்ணீர் வெள்ளமாய்ப் புரண்டு அருவியாய்க் கொட்டுகிறது.

''உன் கண்ணீரைக் கண்டால் என் நெஞ்சு பதறுகிறது. இதயம் வெடிக்கிறது. என் உயிர் நாடியாய் விளங்குகிற உனக்கு ஒரு தீங்கு வருவதை இனி நான் பொறுக்க மாட்டேன், கண்ணே!...

அவள் விம்மல் — என் வேதனை...பதறுகிறேன்.

அவள் ஏன் அப்படி "விம்ம வேண்டும்? அந்தத் தெய்வீக சௌந்தரியம் துயருருவதைக் காணவே என்னுடைய உள்ளம் துடிதுடிக்கிறது.

''சுந்தரி! உன் வேதனை என்னவென்று சொல்! அது எதுவாக இருந்தாலும் தீர்க்கிறேன்...'' என்று கெஞ்சுகிறேன்.

அவள் மலர்க் கைகளை நான் தொட்டவுடன்—அவள் துள்ளி எழுந்து, நகர்ந்து, புரியாத புதிராய் ஓடி மறைகிறாள். என் மனம் குழம்பி நிற்கிறது. எம்பெருமானே! இது சோதனையா? விளையாட்டா?

இரவு முழுவதும் உறங்கவில்லை. மனசு நிம்மதி இல்லை. ஒரு நாள் பட்டர் ஸ்வாமி

63-ஆம் பக்கம் பார்க்கவும்]

விடம் கேட்க வேண்டும். ஆகா, அதுதான் எவ்வளவு அசட்டுத்தனமாக இருக்கும்?

அவரைக் கேட்பதா? ஐயோ, நான் கேட்பதா?... நினைத்தாலே உடல் கூனிக் குறுகி... எப்படிக் கேட்பது?

''தேவரீர் புத்திரியை அடியேனுக்குப் பாணிக்கிரஹணம்...''

காசி வஸ்திரம் கேட்டவனு, காஷாயம் வேண்டியவனு? இரண்டு பட்சம் நகர்வதற்குள் சபலமா?

எவ்வளவு அசட்டுத்தனம்? மனசுக்கு எவ்வளவு மயக்கம்!

பொழுது புலராதா என்று வெகு நேரம் ஏங்கிவிட்டு, பிறகு நீராடி, மடி உடுத்தி, நந்தவனத்தில் அலைகிறேன். என்னை ஆவலோடு வரவேற்கிற அழகை நான் வெகுவாக ரசிக்கிறேன்.

''நீ நேற்றும் பேசவில்லை. அதற்கு முன்னாலும் ஒரு வார்த்தை பேசவில்லை. கண்ணே! நான் என்ன குற்றம் செய்தேன்? என் கேள்விகளிலென்னகுற்றம் கண்டாய்சொல்!..

அவள் தலை குனிந்து நின்றாள்.

''இன்னும் என்ன பயம்? என்ன தயக்கம்? உன் வார்த்தைகளுக்காக நான் எத்தனையோ தினங்களாக ஏங்கி நிற்கிறேன்...''

அவள் கண்கள்தான் நீர்க் கலங்களாய் நிறைந்து கொண்டிருந்தன.

''சுந்தரி! நான் வெகு சீக்கிரம் உன்னைக் கல்யாணம் செய்து கொள்வேன். பிறகு நானும் நீயும் இந்த நந்தவனத்தை சுவர்க்கத்தையும் விட மேலான இடமாகச் செய்வோம். இந்த மலர்களில் ஒரு சமயம் நாம் பட்டுப் பூச்சிகளாய்ப் பறந்து தேன் உண்டு மகிழ்வோம். இன்னொரு சமயம் பச்சைக் கிளிகளாய்க் கொஞ்சி விளையாடித் திரிவோம். கார்கால மேகங்கள் திரண்டு வந்தால் நாம் தோகை மயில்களாகி நடனம் புரிவோம். வஸந்த கால வருகையில் குயில்களாகிக் கூவி அழைக்கலாம். பிரளய காலம் வரை நரை மூப்பு இறப்பு இல்லாமல் இந்த எம்பெருமான் திருவருளால் நாம் நிச்சயம் வாழ்வோம்....''

அவள் புன்னகை புரிகிறாள். எவ்வளவு பொல்லாதவள்! இவள் புன்னகை புரிவதும் உடனே மறைவதும், கன்னம் சிவப்பதும், உடனே வாடி விழுவதும், என்ன ஆச்சரியம்! என்ன புதுமை!

அவளுக்கு என்னிடம் பயமெல்லாம் இல்லை. அப்படித் தயக்கமும் இல்லை. பேசுவதற்குக் கூச்சமும் இல்லை. பேசாதது வெட்கத்தாலா? அறிவின்மையாலா? அல்லது எது?

அவள் மிரள மிரள என் முகத்தை வேதனையோடு பார்க்கிற பார்வை, அதில் பேதைத்தனம் பிரதிபலிக்கிற சோபை... என் இதயம் உள்ளுக்குள் துடிக்கிறது ...

அவள் அதிசயமாய் என் கைகளைத் தரதரவென்று இழுத்துக் கொண்டு — ஐயோ, ஏன் என்னை இழுத்துக் கொண்டு செல்கிறாள்? நான் அரபணிகிறேன்.

நந்தவனப் புதர்கள் கடந்து, மாஞ்சோலை கடந்து, வளை பாதைகள் திரும்பி, ஒற்றையடிப் பாதையில் விரைந்து குறுகலான செயற்கை வளைவுகள், திருப்பங்கள், லதா மண்டபங்கள், சலசலவென வரும் அருவிகள் தாண்டி, பாறைகளை ஏறிக் கடந்து மலைச் சரிவுகளில் ஓடி...

எங்கே என்னை அழைத்துப் போகிறாள்?

அவள் கால் சதங்கைகள் 'சலக்...சலக்' என்று வேகமாய்த் தாளமிட்டு என்னை இழுக்கின்றன. நான் நின்றாலும் திரும்பி என் கையைப் பிடித்து இழுக்கிறாள்.

கடைசியில், அவள் சுட்டிக்காட்டிய திசையில்— மிகப் பெரிய தடாகம்... இல்லை ஏரி இது அலைகடலோ, அதன் பகுதியோ என்று தோன்றுகிறது. தொலைவில் அலங்காரப் படகுகள் இரண்டு அன்னப் பறவைகளைப் போல மெல்ல ஊர்ந்து கொண்டிருந்தன. அதில் அரச குலத்துப் பெண்மணிகள் வாத்தியமிசைத்துப் பண் பாடிக் கொண்டிருக்கிறார்கள். தொலைவிலிருந்து அந்த இசை காற்றில் வந்து உள்ளத்தை நிரப்புகிறது.

ஆனந்தமான மெல்லிசை... மதுரமான குரலில் பாடுகிறார்கள். இவள் என் மார்போடு நெருங்கி நின்று விம்மி, தொலைவில் வருகிற படகுகளைச் சுட்டிக் காண்பிக்கிறாள்!

ஓ! இவள் எதையோ ஜாடை மூலம் தெரிவிக்கிறாளே! ஐயோ! இவள் முகத்தில் வேதனை படர்கிற வேகம்தான் எத்தனை? இவள் கண்கள் ஏன் கண்ணீரைப் பெருக்குகின்றன? ஜாடையாகவே ஏன் இவள் குறிப்பிடுகிறாள்?

பாடத் தெரியவில்லை என்கிறாளா? பாட முடியவில்லை என்கிறாளா? பாடத் தெரியவில்லையா? பேசத் தெரியவில்லையா?

இவள் ஊமை...இவள் செவிடு!

எம்பெருமானே சரணம், சரணம்...

என் காலடிகளில் விழுந்து விழுந்துஇவள் கெஞ்சி, விம்மி அழுது மயங்கி...ஐயோ!

''சுந்தரவல்லி, சுந்தரவல்லி!''

மயங்கி விழுந்தவளைப் பூமாலையை எடுப்பது போல் தூக்கித் தோளில் போட்டுக் கொண்டு விரைவாய்த் திரும்பி ஓடுகிறேன்.

என் சுந்தரவல்லி ஊமை... அவள் செவிடு. இந்த விஷயங்கள் என் நெஞ்சில் இறங்குவதற்கு வெகு நாழிகை ஆகிறது. என் உள்ளத்தைக் கவர்ந்தவள் சுந்தரவல்லிதான். அவள் ஊமையானாலும் என்ன, செவிடானாலும் என்ன?... வாயைத் திறந்து வார்த்தைகள் சொன்னால்தான் பாஷையா? கண் இமைப்பில், அந்த இமைச் சொடுக்கில், இள நகையில், இதழ்த் துடிப்பில், கன்னச் செம்மையில் ஆயிரமாயிரம் செய்திகள் எனக்கு அவள் சொல்வாள்! அவள் பண் இசைத்துப் பாடாவிட்டால் என்ன? அவள் துள்ளு நடையில், குலுங்கும் சலங்கையில், அசைகும் பாவனையில், ஒலிக்கும் வளைகளில் எவ்வளவோ சங்கீதத்தை நான் கேட்க முடிகிறது. நந்தவனத்தில் எத்தனையோ பூக்கள் பொட்டுப் பொட்டாய் இதழ் அசைக்காமல் பூத்துச் சிரிக்கவில்லையா? வாசனை மூலம் செய்தி பரப்பவில்லையா?

பட்டர்ஸ்வாமியின் குடில்... அவரிடம் என்ன சொல்வது? எப்படிச் சொல்வது?

## 7. துலாம்

''சுந்தரவல்லி! உன் அழகை நான் எத்தனையோ பிறவி பிறவியாய், யுக யுகமா




- □ டாகூர் கட்டுரை
- □ பலே ஜோர்!
- □ பூம்புகார் கவிதை
- □ கருத்துக் கருவூலம்
- □ ராணுவ முறை

□ 'கல்கி' ஆண்டு மலரில் வெளியான 'கவியரசரும் இல்லத்தரசியும்' என்ற கட்டுரையைப் படித்து மகிழ்வு மிகக் கொண்டேன். கட்டுரைக்கு இடையே இருந்த கவியரசரின் கவிதை கண்டு கண்கள் நனைந்தன. பண்பினில் சிறந்த பாரத இலகமான அன்னை மிருணாளினி தேவியை அரிய கட்டுரை மூலம் அறியச்செய்த கல்கிக்கு எனதுஇதயம்நிறைந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

பம்பாய்,
7–8–67 — மு. நா. முத்துராமன்

□ கல்கி 6–8–67 இதழில் 'கவியரசரும் இல்லத்தரசியும்' என்ற லாக்டன்கரின் கட்டுரையின் தமிழ் வடிவம் வந்துள்ளது. அதைப் படித்துப் பயனடைந்தேன். டாகூரின் இல்வாழ்வைப் பற்றிய ரசமான செய்திகள் அதில் மலிந்துள்ளன. சிறப்பாக அன்னாரின் புதல்வர் காலஞ்சென்ற ரதீந்திரநாத டாகூர் தம் அன்னையைக் குறித்து எழுதியுள்ளவை மறக்கொணாதன. மிருணாளினி தேவியாரின் தந்தையின் பெயர் தவறாகத் தரப்பட்டுள்ளது. 'வேணீமாதவ் ராய் சௌதுரி' என்று இருக்க வேண்டியது 'பேனிராம் சௌதுரி' என அமைந்துள்ளது. அவ்வம்மை 'குல்நா' மாவட்டத்தைச் சேர்ந்தவர். 'ஜெய்ஸோரை'ச் சேர்ந்தவரன்று. அவளுடைய பழைய பெயர் பவதாரிணி, டாகூர் குடும்பத்தவரானதும், மிருணாளினி என்று மாறியது.

ஆகஸ்ட் 7ம் தேதி டாகூர் மறைந்த நாள்; அவருடைய 'ஜயந்தி' நாள் அல்ல. டாகூரின் உண்மையான ஜயந்தி சித்திரையில் வருகிறது.

சென்னை – 50
10–8–67 — த. நா. குமாரஸ்வாமி

□ திரு 'சோ' அவர்கள் எழுதும் யாரோ இவர் யாரோ? ஆரம்பத்திலேயே களை கட்டி விட்டது. முத்து 'காரக்டர்' பலே ஜோர். 'ஏலே முத்து என்னடா பார்த்தேன்னு கேட்டால் நான் என்ன சொல்றது? நீ சித்ராவைக் காதலிக்கிறதைச் சொல்றதா?'' என்று அவன் ரவியைக் கேட்டானே பார்க்கலாம்!

ஆண்டு மலரில் சிறப்புக் கதைகள் ஒவ்வொன்றும் அற்புதமாக இருந்தது.

அகிலாண்டபுரம்,
7–8–67 — ஆர். பாப்பாத்தி.பி.ஏ

□ இரண்டாவது உலகத் தமிழ் மகாநாடு சென்னையில் 1968ம் ஆண்டு ஜனவரித் திங்களில் நடக்க விருப்பதை யொட்டி மாண்புமிகு தமிழக முதலமைச்சர் அறிஞர் அண்ணா அவர்களின் விருப்பத்திற்கிணங்க இளங் கவிஞர்களுக்கான கவிதைப் போட்டித் திட்டம் ஒன்றை அறிவிப்பதில் பெருமகிழ்ச்சி அடைகிறேன். ''புகாரில் ஒரு நாள்'' என்ற தலைப்பில் வரலாற்றுச் சிறப்புப் பெற்ற பூம்புகார் பற்றி நூறு வரிகளுக்கு மேற்படாமல் கவிதைகள் புனைந்து இளங் கவிஞர்களால் அனுப்பப்பட வேண்டும். வரப்பெற்ற கவிதைகளில் சிறந்ததாகத் தேர்ந்தெடுக்கப்படும் கவிதைக்குப் பேரறிஞர் அண்ணா அவர்களின் முதற் பரிசு வழங்கப்படும்.

பூம்புகாரின் சிறப்பு அம்சங்கள் பற்றிக் கவிதைகள் புனையப்பட வேண்டும்.

இக் கவிதைகள் எல்லாம் ''தனி அலுவலர், உலகத் தமிழ் மாநாட்டு அலுவலகம், சவுதரி காலனி, சென்னை–34'' என்ற முகவரிக்கு 1967 செப்டம்பர் மாதம் 30ந் தேதிக்குள் நல்ல முறையில் எழுதப்பெற்று, கவி புனைந்தவரின் தெளிவான முகவரியுடன் அனுப்பப்பட வேண்டும். பரிசு பெற்ற கவிதை மாநாட்டுச் சிறப்பு மலரில் வெளியிடப்படும்.

மாண்புமிகு மா. முத்துசாமி,
உள்ளாட்சித் துறை அமைச்சர்,
2-வது உலகத் தமிழ் மாநாட்டுச்
சிறப்பு மலர் வெளியீட்டுக் குழுத்
தலைவர்.

□ ஆண்டு மலர் கொண்டு வந்த ஜோர் மாணிக்கக் குட்டிக் கதைகளில் உலக நடப்பை விளக்கும் தத்துவங்கள் காணக் கிடைக்கின்றன. கருத்துக் கருவூலங்கள் அவை.

பவானி
5–8–67 — எழிலன்

□ ரா. வேங்கடசாமி எழுதிய ''தெய்வத்தின் முடிவு'' என்ற சிறுகதையைப் படித்தேன். முடிவு நன்முறையில் இருக்கிறது. எனினும் ஒரு குறை. கதையில் கதாநாயகன் சபாபதி இறந்ததாக இராணுவத்தினர் தவறான செய்தி அனுப்பியதாகவும், ஆனால் உண்மையில் இறந்தது 'சப்தபதி' என்றும், தமிழ் தெரியாத ஒருவன் 'சபாபதி' என்று உச்சரித்ததின் வினையே சபாபதி உறவினர்களுக்காக இறக்க வேண்டியிருந்தது'' எனவும் எழுதியுள்ளார்.

ராணுவத்தில் போருக்குச் செல்லு முன் அடையாளத் தகட்டைக் கழுத்திலும், கையிலும் கட்டிச் செல்கிறார்கள். போரில் இறந்து விட்டால் இந்த அடையாளத் தகட்டைக் கொண்டு இறந்தவன் யார் என்றும், எந்த ஜாதியினன் என்றும் சந்தேகமறத் தெரிந்து கொள்கின்றனர். இதனால் சிறிதளவும் தவறு ஏற்படுவதில்லை. ஒருவர் இறந்தபின் அவர் பெயரைவிட அவர் எண்தான் முக்கியம். அந்த எண்ணைக் கொண்டு அவரது பிரிவுக்குச் செய்தி அனுப்பிப் பல அதிகாரிகளால் அவர் இறந்தது தீர்மானிக்கப்பட்டபின்தான் வீட்டுக்குச் செய்தி அனுப்புகிறார்கள்.

டில்லி,
7–8–67 — ஹவல்தார் ஆர். சீனிவாசன்

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10.
Managing Editor: T. Sadasivam.

Registration No. M. 4992
Registered as a Newspaper in Ceylon

இலங்கையில் 40 சதம்
தபால் செலவு தனி